69 : 3

இடம் : தூத்துக்குடி மாவட்டம்,சாத்தான்குளம் வட்டம்,புதுக்குளம் கிராமத்தில் அமைந்துள்ள குளத்தின் 9 கண் மடை மீதுள்ள 3 அடி உயரமும், 3/4 அடி அகலமும் கொண்ட வெள்ளைக்கல், பலகைக் கல்வெட்டு 16 வரிகளுடன் உள்ளது.எழுத்துக்கள் பொறிந்துள்ளபடியால் பொருளைத் தொடர்ச்சியாக அறிய இயலவில்லை

காலம் : கொல்லம் 1015, பொ.ஆ.1836

செய்தி : கண்மாய் தொடர்பான சொத்து குறித்த செய்தியும் குமாரசாமி மூப்பனார், வீரகுமாருபிள்ளை ஆகியோர் பெயர்களும் உள்ளன.

1. 1015
2. அற்பசி மீ உ
3. க உ குமாரசுவா-
4. மி மூப்பனா
5. . . . .சார்யசொ-
6. த்து வாங்கும்
7. வீர கு-
8. மாருப்பிள்ளை பேர-
9. ந் வீரகுமாருபிள்ளை
10. க்கு.
11. கணக்கு தீற்வ
12. . . . .
13. . . . .
14. செய்த
15. . . . .



# 70. திருவாலவாயநல்லூர், நெடுங்குளம் தொல்லியல்

இரா. சந்தனம், தஞ்சாவூர்

*மதுரை மாவட்டம், வாடிப்பட்டி வட்டம், மதுரையிலிருந்து 20 கிமீ தொலைவில் வைகை ஆற்றின் வடகரையில் திருவாலவாயநல்லூர், நெடுங்குளம் ஆகிய ஊர்கள் அமைந்துள்ளன இவ்வூர்களுக்கிடைப்பட்டப் பகுதியான மேட்டுக்காடு என்ற இடத்தில் கள ஆய்வு மேற்கொண்ட பொழுது உமர்,அஜிஸ்கான் என்பவர்களுடைய தோட்டத்தில் இரும்புக் கால வாழ்விடம் காணப்படுகின்றது இரும்புக் காலப் பண்பாட்டினைச் சார்ந்த கறுப்பு-சிவப்பு, கறுப்பு, சிவப்புநிற பானை ஒடுகள், முதுமக்கள் தாழிகளின் ஒடுகள் மற்றும் இடைக்கால பண்பாட்டைச் சார்ந்த பானை ஒடுகள், சுடுமண் பொருள்கள், பாண்டி விலையாட்டின் சில்லுகள் போன்றவை கிடைக்கின்றன திருவாலவாயநல்லூரில் கருங்கல்லினால் ஆன உடைந்த விநாயகர் சிற்பமும், நெடுங்குளத்தில் தலையில்லாத சிற்பமும், ஒரே கல்லால் ஆன லிங்கமும் காணப்படுகின்றன இப்பகுதியில் 18.5 x18 5 x4 செமீ, 17x8 5x3 செமீ அளவினை உடைய செங்கற்களும் அதிகமாக காணப்படுகின்றன ஊரின் வட மேற்குப் பகுதியில் மாலையம்மன் கோயில் அருகில் ஆண், பெண் உருவங்கள் புடைப்புச் சிற்பமாக உள்ள நடுகற்கள் உள்ளன தேனூர், திருவேடகம், சோழவந்தான் மற்றும் தென்கரை போன்ற வரலாற்றுச் சிறப்பு மிக்கஊர்கள் இப்பகுதிக்கு அருகில் காணப்படுகின்றன*

# 71. சிறுநெசலூர் – இடைப்பழங்கற்கால ஊர்

க. சுரேஷ், சிறுநெசலூர்

கடலூர் மாவட்டம் வேப்பூர் வட்டம் வேப்பூரை அடுத்து சிறுநெசலூர் ஊரின் தென்-கிழக்கே நெட்டேரி எனும் ஏரிக்குச் செல்லும் வழியில் சுமார் 1 கி.மீ. க்கு முன்பாக கருப்பையா என்பவருக்குச் சொந்தமான நிலத்தில் இடைப் பழங்கற்காலத்தைச் சார்ந்த கற்கருவிகள் செய்யப்பட்ட செர்ட்டி குவார்சைட் வகை மூலப்பொருட்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை யாவும் இடைப்பழங்கற்காலப் பண்பாட்டைச் சார்ந்தது.





# 72. போடிநாயக்கனூர் வட்டாரத் தொல்லியல்

பா. ஜோதீஸ்வரன், சென்னை

தேனி மாவட்டம் போடி நாயக்கனூர் வட்டாரத்தில் மேற்கொள்ளப்பட்ட தொல்லியல் கள ஆய்வில் கீழ்கண்ட இடங்களில் தொல்லியல் சான்றுகள் கிடைத்துள்ளன இவையாவும் இரும்புக்காலத்தைச் சார்ந்தவை

| வ. எண் | ஊர் | இருப்பிடம் | தொல்லியல் சான்று |
|---|---|---|---|
| 1. | சோலையூர் | போடியிலிருந்து 12 கீ.மீ. வடமேற்கு; ஊரின் வடக்கே 5 கீ.மீ. தொலைவில் அமைந்துள்ள மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதி – குமலாம்பாறை | 1. இயற்கையாக அமைந்த பாறைக் குகை –பாறை கீறல் (Petroglyph) யானை மற்றும் காட்டுப்பன்றி உருவம் 2. மலை அடிவாரத்தில் பெருங்கற்கால கல்திட்டை, 5 கறுப்பு, சிவப்பு பானை ஓடுகள் |
| 2. | சிலமலை | போடியிலிருந்து 10.கி.மீ. பாளையம் செல்லும் வழி | கல்திட்டை 1.88மீ X 60மீ X 1.7மீ |
| 3. | ஜோலபுரம் (சூலபுரம்) | போடியிலிருந்து தென்மேற்கு 15 கி.மீ மலைஅடிவாரம் | இரும்புக்கசடுகள், கறுப்பு – சிவப்பு பானை ஓடுகள், கல் செக்குகள் 6 |
| 4. | டொம்புச்சேரி | போடியிலிருந்து தெற்கே 15 கி.மீ. தேனி–தேவாரம் சாலை ஓடைப்பகுதி | முதுமக்கள் தாழிகள் 67 செ.மீ. விட்டம் 1.5 செ.மீ. கனம் கறுப்பு–சிவப்பு பானை ஓடுகள் தாங்கிகள் மூடிகள், இரும்புக்கசடுகள் |
| 5. | போடி நாயக்கனூர் | நகரின் வடமேற்கு வஞ்சி ஓடை | முதுமக்கள் தாழிகள் 54 செ.மீ.விட்டம் 1.5.செ.மீ கனம் கறுப்பு சிவப்பு மட்கல ஓடுகள் |
| 6. | கரியாப்பட்டி மல்லிங்காபுரம் | போடியிலிருந்து சுமார் 15 கி மீ. தெற்கு– தேனி தேவாரம் சாலை மலையடிவாரம் | கல்வட்டங்கள்–8 விட்டம் 8 மீ. முதல் 9.மீ வரை உடைந்த தாழிகள், கறுப்பு சிவப்பு மட்கல ஓடுகள் |

# 73. காவேரிப் படுகையில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**சி.ஆர்.காயத்ரி, சென்னை**

தமிழ்நாட்டில், காவேரி ஆறு மற்றும் அதன் கிளை ஆறுகளின் ஆற்றுப் படுகையில் தொல்லியல் மற்றும் வரலாற்று ஆய்வுகளை இராபர்ட் புருஸ் பூட், பி சரண், கே.வி சௌந்தராஜன், கே வி இராமன், ஒய் சுப்பராயலு, ஆர் செண்பகலட்சுமி, வீ செல்வகுமார் போன்றோர் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர் மேலும் இப்படுகையில் உறையூர், அழகரை, திருகாம்புலியூர், கம்பர்மேடு, காவேரிபூம்பட்டிணம், வல்லம், பழையாறை, செம்பியன் கண்டியூர், பிள்ளையார்பட்டி, காட்டுப்புத்தூர் ஆகிய இடங்களில் அகழாய்வுகளும் மேற்கொள்ளபட்டுள்ளன

இவற்றின் தொடர்ச்சியாக இப்பகுதியில் தற்பொழுது மேற்கொள்ளப் பட்ட கள ஆய்வுகளில் 100க்கும் மேற்பட்ட இடங்களில் இரும்பு மற்றும் வரலாற்றுத் தொடக்க காலங்களைச் சார்ந்த வாழ்விடங்கள், ஈமச்சின்னங்கள், வரலாற்றுக்காலத்தைச் சேர்ந்த எச்சங்கள் கண்டறியப்பட்டுள்ளன உள்ளூர் மக்களால் இவ்விடங்கள் திடல், கொல்லை, காடு என வழங்கப்படுகின்றது வாழ்விடப் பகுதிகளை நத்தம், நத்தமேடு, பழையவூர், மேட்டுத்தெரு என்றும் வழங்குகின்றனர்

மேலும் இக்கள ஆய்வில் முழையூர், பனம்பள்ளி, விளாத்தூர், வடகளத்தூர், திருநாட்டியத்தான்குடி போன்ற இடங்களில் சுடுமண் பொம்மைகளும், சுவாமிமலை, திருமேட்றளிகை போன்ற இடங்களில் மணிகளும்,கருப்பு வளையல்களும் கண்டு எடுக்கப்பட்டன

கள ஆய்வுன் வழி கண்டறியப்பட்ட தொல்லியல் எச்சங் களுள்ள ஊர்கள்

தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் வட்டம்

| இடப்பெயர் | அட்சயரேகை | தீர்க்கரேகை | தொல்லியல் எச்சங்கள் |
|---|---|---|---|
| நல்லூர் | 79.30052 | 10.92383 | இரும்புக்கால வாழ்விடம் |
| திருவலஞ்சுழி | 79.33008 | 10.946121 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| இன்னாம்பூர் | 79.3341 | 10.9689 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| முலையூர் | 79.3502 | 10.9192 | இரும்புக்கால – வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| உடையாளூர் | 79.3352 | 10.9192 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| சுவாமிமலை (அலைவந்திபுரம்) | 79.3023 | 10.9504 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

| | | | |
|---|---|---|---|
| ஏரகம் (திருஏரகம்) | 79.3583889 | 11.008105 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| கிழ்பரட்டை | 79.3676 | 10.98580 | இரும்புக்கால வாழ்விடம் |
| அகூர் | 79.3689 | 10.984281 | இரும்புக்கால வாழ்விடம் |
| கோரநாட்டு கருப்பூர் | 79.3845 | 10.9854 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| தெப்பெருமாள் நல்லூர் | 79 4181 | 10 9674 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| சிவபுரம் | 79 4027 | 10.9356 | இரும்புக்கால வாழ்விடம் |
| அண்ட குடியான் | 79.4188 | 10 9500 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| மருதநல்லூர் | 79.4004 | 10.9178 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| சாக்கோட்டை | 79.399944 | 10 943333 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருநாரையூர் –நாச்சியார்கோயில் | | 10 9179 | இரும்புக்கால வாழ்விடம் |
| திருபன்துறை | 79 4513 | 10.9179 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கூகுர் | 79.46011 | 10 913527 | இரும்புக்கால வாழ்விடம் |

## தஞ்சாவூர் மாவட்டம், திருவையாறு வட்டம்

| | | | |
|---|---|---|---|
| செந்தலை | 78.99153 | 10.85385 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| வரகூர் | 79 001887 | 10.841694 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வரலாற்று தொடக்ககால வாழ்விடம் |
| பெரும்பூலியூர் | 79 088313 | 10.896094 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| திருசென்னம்பூண்டி | 78 895144 | 10 8734667 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| திருவேதிகுடி | 79 133922 | 10.85095 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| செம்பியன்களரி | 78.816667 | 10.916666 | இரும்புக்கால–வரலாற்று தொடக்க கால வாழ்விடம் – சமணர் சிற்பம். |
| நத்தமங்கலம் | 78 9375 | 10 94083 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| ராஜகிரி | 78 92716 | 10 83566 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| பழமாநேரி | 78 94025 | 10.84680 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| விட்டலபுரம் | 78.98441 | 10 88283 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| நேமம் | 78 92229 | 10.84258 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |

## தஞ்சாவூர் மாவட்டம், திருவிடைமருதூர் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| திருகளிதிட்டை | 79.43967 | 11.025805 | இரும்புக்கால– வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| இடையாநல்லூா | 79.4731 | 11.05620 | இரும்புக்கால வரலாற்று தொடக்ககால வாழ்விடம் |
| திரிலோகி | 79.48663 | 11.078486 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| திருவிசநலலூர் | 79.4182 | 11.000406 | வரலாற்று தொடகக்கால வாழ்விடம் |
| திருபனந்தால் | 79.4507 | 11.084639 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருகோடிகாவல் | 79.5026 | 11.05084 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| செங்கனூா | 79.4341 | 11.683756 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |

| | | | |
|---|---|---|---|
| முத்தூர் | 79.4691 | 10.850922 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| திருமங்கலக்குடி | 79.4678 | 11.018456 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கஞ்சனூர் | 79.4852 | 11.035367 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| மிழலை நத்தம் | 79.4008 | 11.033617 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |

தஞ்சாவூர் மாவட்டம், பாபநாசம் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| திருபுவனம் | 79.13479 | 10.76858 | வரலாற்று தொடக்க கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| சந்திரபாடி | 79.2073 | 10.87622 | வரலாற்று தொடக்க காலக் ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| கிடங்கு நத்தம் | 79.24355 | 10.88120 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| ஓலைபூஞ்சேரி | 79.24796 | 10.882583 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| பெருங்கோரை | 79.23577 | 10.88954 | இரும்புக்கால வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| வடக்குமாங்குடி | 79.2326 | 10 88975 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| மாளிகைதிடல் | 79.26834 | 10.86586 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| காவலூர் | 79.20207 | 10.85191 | வரலாற்று தொடக்க கால வாழ்விடம் |
| திருக்கருக்காவூர் | 79.27495 | 10.86763 | இரும்புக்கால வாழ்விடம் |
| நெல்லிச்சேரி | 79.17725 | 10.873269 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| கோவில் வெண்ணி | 79.35905 | 10.78778 | இரும்புக்கால வாழ்விடம் |

தஞ்சாவூர் மாவட்டம், ஒரத்தநாடு வட்டம்

| | | | |
|---|---|---|---|
| சடையார்கோவில் | 79.257222 | 10.716889 | இரும்புக்கால– வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

தஞ்சாவூர் மாவட்டம், பட்டுக்கோட்டை வட்டம்

| | | | |
|---|---|---|---|
| மதுகூர் | 79.4050833 | 10.50372 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

நாகப்பட்டினம் மாவட்டம், சீர்காழி வட்டம்

| | | | |
|---|---|---|---|
| திருபுங்கூர் | 79.67772 | 11.1940417 | இரும்புக்கால வாழ்விடம் |
| அகானி | 79.7102 | 11.2417333 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| தென்னங்குடி | 79.71439 | 11.2406389 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| கொண்டாத்தூர் | 79.71767 | 11.1761806 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| எருமல் | 79.73829 | 11.1533694 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| ஆலவேலி | 79.71242 | 11.1462917 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| ஆத்தன்குடி | 79.71378 | 11.1741639 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| சேம்மங்கலம் | 79.72175 | 11.1580222 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கதிராமங்கலம் | 79.53719 | 11.0703778 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## நாகப்பட்டினம் மாவட்டம், மயிலாடுதுறை வட்டம்

| | | | |
|---|---|---|---|
| ஆலங்குடி | 79.54857 | 11.1075791 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| பனம்பள்ளி | 79.697367 | 11.135666 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| நாகன்குடி | 79.67401 | 11.1313806 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| முழையூர் | 79.68184 | 11.1359778 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |

## நாகப்பட்டினம் மாவட்டம், வேதாரண்யம் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| உம்பலசேரி | 79.7579444 | 10.534028 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| மணக்குடி | 79.7360083 | 10.58516667 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருமாலம் | 79.7681667 | 10.57558333 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## நாகப்பட்டினம் மாவட்டம், கீழ்வேளூர் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| ஆழியூர் | 79.7673888 | 10.77680556 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| வடபாதிபேரூர் | 79.8193611 | 10.71066667 | வரலாற்றுக்கால ஈமசின்னங்கள் |
| வடகளத்தூர் | 79.73597222 | 10.74252778 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| மயிலங்குடி | 79.7216944 | 10.72044444 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| தேவூர் | 79.7387222 | 10.72938889 | இரும்புக்கால வாழ்விடம் |
| ஆந்தைகுடி | 79.6853888 | 10.70163889 | இரும்புக்கால–வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## நாகப்பட்டினம் மாவட்டம், திருக்குவளை வட்டம்

| | | | |
|---|---|---|---|
| ஈசனூர் | 79.7524722 | 10.61741667 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கீழ் கீழையூர் | 79.774278 | 10 62269444 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| சித்தாமூர் | 79.6852777 | 10.61058333 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| வலிவலம் | 79.6973055 | 10.65508333 | இரும்புக்கால–வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| விடங்களூர் | 79.7201111 | 10.67505556 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| ஆதமங்கலம் | 79.69825 | 10.66811 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள்(தாழி) |

## நாகப்பட்டினம் மாவட்டம், நாகப்பட்டினம் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| மேல்வான்மியூர் | 79.837194 | 10.837194 | இரும்புக்கால வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| நாகூர் | 79.8419722 | 10.81825 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருகண்ணபுரம் | 79.7056111 | 10.85225 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருபுகலூர் | 79.7034722 | 10.8939444 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருசாத்தகாட்டன்குடி | 79.7234166 | 10.87269444 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருமருகல் | 79.7392777 | 10.87191667 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| மஞ்சகொல்லை | 79.8194722 | 10.76411111 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| அய்வன்நல்லூர் | 79.8275833 | 10.76719444 | இரும்புக்கால–வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| குத்தாலம் | 79.7849166 | 10.84669444 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |

## திருவாரூர் மாவட்டம், திருத்துறைபூண்டி வட்டம்

| | | | |
|---|---|---|---|
| வங்கநகர் | 79.5944722 | 10.51991667 | இரும்புக்கால வாழ்விடம் |
| மருதவனம் | 79.5934444 | 10.51769444 | இரும்புக்கால வாழ்விடம் |
| வேலூர் | 79.6515277 | 10.56172222 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| குறும்பல் | 79.6543611 | 10.58994444 | இரும்புக்கால வாழ்விடம் |
| ஆலிவலம் | 79.6199166 | 10.61669444 | இரும்புக்கால– வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| பூசலங்குடி | 79.6231111 | 10.61030556 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| நெடும்பலம் | 79.6416111 | 10.5200 | இரும்புக்கால– வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கள்ளுகுடி | 79.6435 | 10.51400 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| ஓவெரிகுடி | 79.6191666 | 10.6358 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| நியமம் | 79.6026666 | 10.54225 | இரும்புக்கால–வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| எழிலூர் | 79.6017222 | 10.54091667 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| சீலத்தநல்லூர் | 79.57613889 | 10.53619444 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| களப்பால் | 79.55525 | 10.54897222 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கச்சனம் | 79.6700555 | 10.62877778 | இரும்புக்கால வாழ்விடம் |
| கொத்தமங்கலம் | 79.6017222 | 10.55386111 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| திருநாட்டியத்தன்குடி | 79.6186944 | 10.68533333 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| புள்ளமங்கை நத்தம் | 79.6313611 | 10.7035 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருநெல்லிகாவல் | 79.7733611 | 10.65625 | இரும்புக்கால வாழ்விடம் |
| திருதங்கூர் | 79.6335556 | 10.52344722 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| குண்ணூர் | 79.63136 | 10.58994444 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |

## திருவாரூர் மாவட்டம், நன்னிலம் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| துளார் | 79.5694166 | 10.98886111 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| எழுமகரல் | 79.6348611 | 10.9850278 | இரும்புக்கால வாழ்விடம் |
| பில்லூர்நத்தம் | 79.6442777 | 10.99327778 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## திருவாரூர் மாவட்டம், மன்னார்குடி வட்டம்

| | | | |
|---|---|---|---|
| கோட்டூர் | 79.5678888 | 10.62247222 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கீழ்பனையூர் | 79.5998611 | 10 60919444 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| திருமாக்கோட்டை | 79.5000555 | 10.54263889 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| குறிச்சி | 79.498194 | 10.5894722 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## திருவாரூர் மாவட்டம், திருவாரூர் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| வேப்பதன்குடி | 79.6715 | 10.68536111 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) |
| புலிவலம் | 79.6363521 | 10.53378 | இரும்புக்கால – வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| ஆமூர் | 79.7200833 | 10.80138889 | இரும்புக்கால–வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

| | | | |
|---|---|---|---|
| வைப்பூர் | 79.7093611 | 10.81908333 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| காரையூர் | 79.6915 | 10.8245 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| தப்பளாம்புலியூர் | 79.6640277 | 10.7356111 | இரும்புக்கால – வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| கருப்பூர் | 79.6891389 | 10.75825 | இரும்புக்கால–வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## திருவாரூர் மாவட்டம், வலங்கைமான் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| முனியூர் | 79.3105556 | 10.831944 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| அவளிநல்லூர் | 79.31822 | 10.8190917 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள் (தாழி) மற்றும் வாழ்விடம் |
| மேல்நத்தம் | 79.435416 | 10.5391667 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## திருவாரூர் மாவட்டம், நீடாமங்கலம் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| ஆதனூர் | 79.3169 | 10.968753 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| பூவனூர் | 79 3518 | 10.7835722 | இரும்புக்கால வாழ்விடம் |
| தேவன்குடி | 79.4673611 | 10.73011111 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| பலையனூர் | 79.5594722 | 10.70863889 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |

## திருவாரூர் மாவட்டம், குடவாசல் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| குடவாசல் | 79.4907222 | 10.859222 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| செல்லூர் | 79.4526 | 10.82000 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம் |
| எண்கண் | 79.5495555 | 10.82233333 | இரும்புக்கால வாழ்விடம் |
| காப்பணமங்கலம் | 79.5456944 | 10.82330556 | இரும்புக்கால ஈமச்சின்னங்கள்(தாழி) |
| பூங்காவூர் | 79.5412777 | 10.81680556 | வரலாற்று தொடக்கக்கால வாழ்விடம், சமணர் சிற்பம் |

# 74. புதுக்கோட்டைப் பகுதியில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**கோ. சசிகலா, சென்னை**

புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூர் வட்டத்தில் கள ஆய்வுகள் மேற்கொண்ட பொழுது கீழ் கண்ட ஊர்களில் தொல்லியல் சான்றுகள் புதியதாக கண்டுபிடிக்கப்பட்டன

| வ. எண் | ஊர் | இருப்பிடம் | தொல்லியல் சான்று |
|---|---|---|---|
| 1 | கல்லுப்பட்டி | பூதகுடிக்கு தென்மேற்கு 15 கி.மீ. தொலைவு முருகன் கோயில் அருகில் உள்ள தெப்பக்குலப்பகுதி | வரலாற்று இடைக்கால வாழ்விடம், சிவப்பு, காவி நிற பானை ஓடுகள் |
| 2. | பெருவாய் | கல்லுப்பட்டியிலிருந்து மேற்கே அரை கி.மீ. | இரும்புக்கால மட்கல ஓடுகள் |
| 3. | மேல்பூதக்குடி | விராலிமலையிலிருந்து வடமேற்கே 4 கி.மீ | கண்மாய் பகுதியில் நுண்கற்காலக் கருவிகள், இரும்புக்கால ஈமத்தாழிகள், |
| 4. | கல்குடி | விராலி மலையிலிருந்து வடக்கே 6 கி.மீ | இரும்புக்கால தாழிகள், முந்து வரலாற்றுக்கால கறுப்பு சிவப்புப் பானை ஓடுகள் |
| 5 | குளத்தூர் | | இரும்புக்கால தாழிகள், கறுப்பு சிவப்பு மட்கல ஓடுகள் |
| 6 | வெள்ளி வாடி | | வரலாற்று இடைக்கால மட்கல ஓடுகள் |
| 7 | இனாம் குளத்தூர் | திருச்சி–மனப்பாறை சாலையில் 16 கி.மீ. தொலைவு; ஊரின் வடக்குப்பகுதி | இரும்புக்கால வாழ்விடம், மட்கல ஓடுகள், கண்மாய் அருகே ஈமத் தாழிகள் |
| 8. | ஆலம்பட்டி புதூர் | திருச்சி மனப்பாறை சாலை 23 கி.மீ. தொலைவு; ஊரின் தென்பகுதி | இரும்புக்கால வாழ்விட மேடு. 5 ஏக்கர். |
| 9. | பள்ளிக்கூடத் தான் பட்டி | | முந்து வரலாற்றுக்கால கறுப்பு, சிவப்பு பானை ஓடுகள் |
| 10. | புதுக்குடி யான்பட்டி | | 7 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 11. | அத்திப்பள்ளம் | விராலிமலை–மனப்பாறை மேற்கே 4 கி.மீ தொலைவு | கறுப்பு சிவப்பு ஓடுகள்; முந்து வரலாற்றுக்காலம் |
| 12 | வடகாட்டுப் பட்டி | மதுரை செல்லும் சாலை விராலிமலையிலிருந்து 7 கி.மீ. தொலைவு, கண்மாய்ப்பகுதி | இரும்புக்கால தாழிகள், இடைக்கால மட்கல ஓடுகள் |
| 13 | காளப்பனூர் | விராலிமலையிலிருந்து தெற்காக 4 கி.மீ. தொலைவு | இரும்புக்கால வாழ்விடம், ஓடுகள் |
| 14. | அரசகுடிப்பட்டி | காளப்பனூருக்கு மேற்கு, கண்மாய்ப்பகுதி | இரும்புக்கால தாழிகள் |

| | | | |
|---|---|---|---|
| 15. | தேங்காய் திண்ணிப் பட்டி | கொடும்பாளூர்– மணப்பாறை சாலை 4.கி.மீ.தொலைவு | இடைக்கால சிவன் கோயில் |
| 16. | குட்டியப்பட்டி | கொடும்பாலூரிலிருந்து 6.கி.மீ. | இரும்புக்கால ஈமத்தாழிகள், மட்கல ஓடுகள் |
| 17. | சகம்பட்டி | மனப்பாறையிலிருந்து தென்கிழக்கு 5.கி.மீ தொலைவு | இரும்புக்கால வாழ்விடம், பானை ஓடுகள் |
| 18. | நம்பம்பட்டி | விராலிமலை–மணப்பாறை 7 கி.மீ. தொலைவு | இரும்புக்கால வாழ்விடம், பானை ஓடுகள் |
| 19. | சீத்தக்காட்டுப் பட்டி | விராலிமலையிலிருந்து கிழக்கே 2 கி.மீ. | இரும்புக்கால சிதைந்த கல்வட்டங்கள் |
| 20. | கல்லுக்குத் தான்பட்டி | | கல்வட்டம், கறுப்பு சிவப்பு பானை ஓடுகள் |
| 21. | காரைமேட்டுப் பட்டி | | இரும்புக்கால வாழ்விடம் 10 ஏக்கர் |
| 22. | கருத்தக்களம் பட்டி | ஊரின் வடக்கே பன்னிமுட்டி கண்மாய்க்கு கிழக்கு | முந்து வரலாற்றுக்கால வாழ்விடம் |
| 23 | இச்சடி | ஆரியக்கோன்பட்டியிலிருந்து 1.5 கி.மீ. | இரும்புக்கால தாழிகள், கறுப்பு–சிவப்புமட்கல ஓடுகள் |
| 24. | தளிஞ்சி | ஆரியக்கோன்பட்டியிலிருந்து தெற்கே 4 கி.மீ. | நுண்கற்காலக் கருவிகள், இரும்புக்கால அழிவுற்ற ஈமப்பகுதி |
| 25. | எண்ணெய் மாகாணம் | இலுப்பூரிலிருந்து தெற்கே 2 கி.மீ ஊரின் மேற்கு மற்றும் தெற்கு வாழ்விடப்பகுதி 4 ஏக்கர். | இரும்புக்கால 19 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு பெரியசாமி கோயில் அருகில் பலகைக்கல் |
| 26. | மலைக்குடிப் பட்டி | விராலிமலை–புதுக்கோட்டை சாலை 7.கி.மீ. தொலைவு, கண்மாய் | இரும்புக்கால ஈமத் தாழிகள் |
| 27. | கீழக்கோத்ரா பட்டி | மலைக்குடிப்பட்டியிலிருந்து 4 கி.மீ தெற்கு | இரும்புக்கால வாழ்விடம்– 5 ஏக்கர் |



# 75. ஐயாற்றங்கரையில் புதிய தொல்லியல் இடம்

பா. அருண்ராஜ்
இரா. சந்தனம், தஞ்சாவூர்

திருச்சிராப்பள்ளி மாவட்டம் துறையூர் வட்டம் துறையூரிலிருந்து புஞ்சோலை (கொல்லிமலை அடிவாரம்) செல்லும் சாலையில் சுமார் 10 கிமீ தொலைவில் ஐயாற்றின் வடகரையில் காமாட்சிபுரம் ஊருக்கு வடமேற்குப் பகுதியில் மீன் வளர்ப்பதற்காக இவ்வூரைச் சார்ந்த சந்திரசேகர் என்பவர் தன் நிலத்தில் மீன் வளப்பிற்காக பன்னைக் குட்டை வெட்ட நிலத்தைத் தோண்டியபொழுது சுமார் 1 அடி ஆழத்தில் முதுமக்கள் தாழிகள் வெளிப்பட்டதை அறிந்து களஆய்வு மேற்கொள்ளப்பட்டு கீழ்க்கண்ட தொல்லியல் எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

நந்தகாடு என அழைக்கப்படும் இப்பகுதியில் நுண் கற்காலப் பண்பாட்டுச் சார்ந்த செதிள் கருவிகள்(Cert) மற்றும் குவாட்சைட் (Quarzite ) கற்களைக் கொண்டு செய்யப்பட்ட ஒரு பக்க மற்றும் இரு பக்க கத்திகள், அம்பு முனைக் கருவிகள் மற்றும் பிறை வடிவக் கருவிகள் கண்டறியப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் 1 செ.மீ முதல் 3 செ.மீ வரை உள்ள அளவினை உடையதாக உள்ளன. இவற்றுடன் இக்கற்கருவிகளைச் செய்தவற்குத் "தேவையான மூலக்கற்கள், கருவிகள் செய்யப்பட்டு எஞ்சி மூலக்கருவிகளும் கற்களும் கண்டுபிடிக்கப்பட்டன.

இரும்புக்காலப் பண்பாட்டைச் சார்ந்த கல்வட்டம் மற்றும் முதுமக்கள் தாழிகளும் இப்பகுதியில் அதிக அளவில் கிடைக்கின்றன. கல்வட்டம் பெரும்பாலும் சிதைந்த நிலையில் உள்ளன. நெடுநிலைக்கல் (Menhir) ஒன்று தரைமட்டத்திலிருந்து 3அடி 6 அங்குலம் கொண்டு காணப்படுகிறது. இவற்றின் அடிப்பகுதியானது 2அடி 5 அங்குலமும், மேல்பகுதியானது 8 அங்குல அகலத்துடன் காணப்படுகிறது. இத்தாழிகள் சுமார் 3 அடி உயரம் கொண்டவையாகும். தாழியுனுள் மனித எலும்பு கூடுகள், கறுப்பு சிவப்பு மற்றம் கறுப்பு நிற சிறு மட்கலன்களும் இருந்தன. ஒரு தாழியின் மேல் வாய் பகுதி பலகைக் கல் கொண்டு மூடபட்டு இருந்தன. பலகைக்கல்







உயரம் 3 அடி 4 அங்குலமும், விட்டம் 1 அடி 8 அங்குலம் கொண்டவையாக காணப்படுகிறது. மேலும் இக்காலப் பண்பாட்டினைச் சார்ந்த கறுப்பு, கறுப்பு சிவப்பு பானை ஓடுகள் மற்றும் படையல் பொருள்களாக வைக்கப்பட்ட பானைகளும் கிடைத்தன.

இடைக்கால வரலாற்றுக் காலத்தைச் சார்ந்த பானை ஓடுகளும், 24x18x06 செ.மீ. அளவினையுடைய செங்கற்களும் இப்பகுதியில் காணப்படுகிறது. கள ஆய்வின் மூலம் சேகரிக்கப்பட்ட மேற்குறித்த தொல்லியல் சான்றுகள் மூலமாக இப்பகுதியில் நுண்ணிய கற்காலம், இரும்புக்காலம், இடைக்கால வரலாற்றுக் கால பண்பாட்டு மக்கள் வாழ்ந்துள்ளமையை அறிய முடிகிறது. மேற்கொண்டு இப்பகுயில் முறையான ஆய்வுகள் மேற் கொண்டால் தொடர்ச்சியான பண்பாட்டுக் கூறுகளை அறிய இயலும்.

# 76. திருத்தெங்கூரில் இரும்புக்கால – வரலாற்றுக் காலத் தொல்லியல்

வீ. செல்வகுமார், கோ. மதிவாணன்,
இரா. சுரேஷ், தஞ்சாவூர்

*திருவாரூர் மாவட்டம் திருத்துறைப்பூண்டி வட்டத்தில் திருத்தெங்கூரில் புகழ் பெற்ற பாடல் பெற்ற தலம் உள்ளது இவ்வூர் திருவாரூரில் இருந்து திருத்துறைப்பூண்டி செல்லும் சாலையில் உள்ள திருக்காரவாசலுக்கு மேற்கே சுமார் 4 கி.மீ. தொலைவில் உள்ளது இவ்வூரில் உள்ள இரஜதகிரீஸ்வரர் கோயிலில் சோழர் காலக் கல்வெட்டுகள் உள்ளன இவற்றில் சில தற்போது காணப்படவில்லை. இவ்வூரின் கிழக்கே உள்ள சிவன் கோயில் குளத்திற்கு அருகில் இரும்புக்கால கருப்பு சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு நிறப்பானை ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டன இவை இங்கு இரும்புக் காலத்திலிருந்து மக்கள் வாழ்ந்தனர் என்பதை புலப்படுத்தும் வண்ணம் உள்ளன இவ்வூருக்கு வடகிழக்கே உள்ள ஒய் எஸ் அருளப்பசாமி என்பவரது தோட்டத்தில் முதுமக்கள் தாழிகளைக் கண்டெடுத்ததாக உள்ளூர் மக்கள் கூறுகின்றனர் காவிரிப்படுகையில் இதுபோன்ற பாடல் பெற்ற தலங்கள் உள்ள இடங்களில் இரும்புக்கால வரலாற்றுத் தொடக்க காலச் சான்றுகள் கிடைப்பது குறிப்பிடத்தக்கதாகும்*

# 77. திண்டுக்கல் மாவட்டத் தொல்லியல்

கோ. சசிகலா, சென்னை

திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள பாலாறு என்னும் ஆறு நத்தம் வட்டம், கரந்தை மலையில் தொடங்கி நத்தம், கொட்டாம்பட்டி, சிங்கம்புணரி, தேவகோட்டை, திருபுனவாசல் வழியாக ஓடி, சுந்தரபாண்டியன் பட்டணத்தில் கடலில் கலக்கிறது. இவ்வாற்றின் வடகரை, தென்கரையில் தொல்லியல் ஆய்வு நடத்தப்பட்டது ஆய்வில் ஆற்றின் கரையோரத்தில் அமைந்த பல ஊர்களில் 60க்கும் மேற்பட்ட இடங்களில் பெருங்கற்காலப் பண்பாட்டு வாழ்விடப் பகுதிகளின் எச்சங்களும், ஈமக்காடுகளும் தொல்லியல் சான்றுகளாக பரவலாகக் கிடைத்துள்ளன அவற்றுள் கீழ்கண்ட இடங்கள் பட்டியலிடப்பட்டுள்ளன.

| வ. எண் | ஊர் | இருப்பிடம் | தொல்லியல் சான்று |
|---|---|---|---|
| 1. | மலையூர் | நத்தம்–அய்யனார்புரம் சாலை மலைப்பகுதி அய்யனார் ஓடை மாமலை, வெள்ளிமலை, பெரியமலை, எசலை மலை, தேன்மலை, பள்ளப்பட்டி, மேலப்பட்டி, புதுப்பட்டி, குருவாரப்பட்டி, நாகமங்கலம், கொட்டாம்பட்டி | பழுங்கற்கால, நுண்கற்காலக்கருவிகள் இரும்புக்கால ஈமச் சின்னங்கள் |
| 2 | முதுப்பட்டி | கொட்டாம்பட்டியிலிருந்து 5கி மீ. | இரும்புக்கால பானை ஓடுகள் இரும்புக் கசடுகள் |
| 3. | வெள்ளிமலைப் பட்டி | கொட்டாம்பட்டி அருகில் | இரும்புக்கால பானை ஓடுகள் இரும்புக் கசடுகள் |
| 4. | வெள்ளிமலைப் பட்டி வடக்கு | வெள்ளிமலைப்பட்டியிலிருந்து 1.5 கி.மீ வடக்கு | இரும்புக்கால ஈமங்கள் வரலாற்று கால வாழ்விடப்பகுதி |
| 5. | ராசாக்கள் வாலம் | வெள்ளிமலைப்பட்டியிலிருந்து 15 கி மீ. | இரும்புக்கால வாழ்விடப்பகுதி–மட்கல ஒடுகள் |
| 6. | குருவாரப்பட்டி | வெள்ளிமலை அடிவாரம் | இரும்புக்கால வாழ்விடம்–3 ஏக்கர் |
| 7 | துப்பட்டி | வெள்ளி மலையிலிருந்து 3 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 8 | ஆண்டிபுரம் | துப்பட்டியிலிருந்து 2 கி மீ | வரலாற்றுக்கால மட்கல ஓடுகள் |
| 9. | கோட்டையூர் | ஆண்டிபுரத்திலிருந்து 1.5 கி.மீ. | இரும்புக்கால வாழ்விடம், இரும்புக் கசடுகள் |
| 10 | அக்கயம்பட்டி | கோட்டையூரிலிருந்து 1 கி மீ. | இரும்புக்கால வாழ்விடம் |
| 11 | சின்னயம்பட்டி | கோட்டையூரிலிருந்து 2 கி மீ. | இரும்புக்கால வாழ்விடம் |
| 12 | கும்பசாலை | கோட்டையூரிலிருந்து 7 கி மீ | இரும்புக்கால வாழ்விடம்–10 ஏக்கர் |
| 13 | கோசுக்குறிச்சி | நத்தத்திலிருந்து 24கி.மீ. | இரும்புக்கால ஈமச்சின்ன்ங்கள் 15 ஏக்கர் |
| 14 | கம்பிளியம்பட்டி | கோசுக்குறிச்சிக்கு மேற்கு | இரும்புக்கால வாழ்விடம் 5 ஏக்கர் |

| | | | |
|---|---|---|---|
| 15 | சேத்தூர் | கோசுய்க்குறிச்சியிலிருந்து 5 கி.மீ– மாரியம்மன் கோயில் அருகில் | இரும்புக்கால வாழ்விடம் |
| 16 | அரவக்குறிச்சி | | வரலாற்றுக்கால பானை ஓடுகள் |
| 17. | குட்டுப்பட்டி | கரந்த மலைக்கு கிழக்கு பூலாமலை அடிவாரம் | இரும்புக்கால வாழ்விடம், ஈமச் சின்னங்கள் |
| 18. | அய்யனார்புரம் | நத்தத்திலிருந்து 20 கி.மீ. | பழங்கற்கால, நுண்கற்காலக்கருவிகள் |
| 19. | ஆலம்பட்டி | அய்யானார்புரத்திலிருந்து 9. கி.மீ. | இரும்புக்கால வாழ்விடம் |
| 20. | களத்துப்பட்டி | ஆலம்பட்டியிலிருந்து 1 கி.மீ. | இரும்புக்கால வாழ்விடம் |
| 21. | கொட்டாம்பட்டி | | இரும்புக்கால வாழ்விடம் |
| 22. | மேலப்பட்டி | கொட்டாம்பட்டியிலிருந்து 5 கி.மீ. | இரும்புக்கால வாழ்விடம் |
| 23. | கிருங்காக் கோட்டை | கொட்டாம்பட்டிக்கு கிழக்கு 12 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் 10 ஏக்கர் |
| 24. | அணைக்கரைப் பட்டி | | இரும்புக்கால வரலாற்றுக் கால பானை ஓடுகள்– 25 ஏக்கர் |
| 25. | சிங்கம்புணரி | | கறுப்பு சிவப்பு, சிவப்பு நிற பானை ஓடுகள் |
| 26. | ஆர்.எஸ். மங்கலம் | சிங்கம்புணரியிலிருந்து 8.கி.மீ. | 15 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 27. | சிலநீர்ப்பட்டி | | 5 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 28 | முறையூர் | | இரும்புக்கால வாழ்விடம் கருப்பு சிவப்பு பானை ஓடுகள் |
| 29 | மாதவராயன் பட்டி | முறையூரிலிருந்து 2 கி.மீ | 15 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 30 | ஆலம்பட்டி | மாதவராயன் பட்டியிலிருந்து 2 கி.மீ | 40 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 31 | திருக்களாம் பட்டி | ஆலம்பட்டியிலிருந்து 3 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 32 | மாவடி கருப்பர் கோயில் | திருக்களாம்பட்டியிலிருந்து 7 கி.மீ | 10 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 33 | மணக்குடி | திருக்களாம்பட்டியிலிருந்து 7. கி.மீ | 7 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம்; மகாவீரர் சிற்பம் |
| 34 | நாட்டார் மங்கலம் | மணக்குடியிலிருந்து 3 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 35 | காரையூர் | | இரும்புக்கால வாழ்விடம் |
| 36 | ஊர்க்குளத் தான்பட்டி | மணமேல்பட்டியிலிருந்து 1 கி.மீ | 10 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 37 | ஊர்க்குளத் தான் பட்டி | மணமேல்பட்டியிலிருந்து 1 கி.மீ | 10 ஏக்கர் பரப்பில் இருப்புக்கால வாழ்விடம் |
| 38 | தென்கரை | ஊர்க்குலத்தான்பட்டியிலிருந்து 1.5 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 39 | அதிகரம் | தென்கரையிலிருந்து 1 கி.மீ | வரலாற்றுக்கால எச்சங்கள் |
| 40 | கே.வலையப்பட்டி | அழாபுரியிலிந்து 1 கி.மீ | வரலாற்றுக் கால தொல்லியல் எச்சங்கள் |
| 41 | கொங்கரத்திப்பட்டி | வலையப்பட்டியிலிருந்து 2 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 42 | கொங்கரத்திப்பட்டி | வலையப்பட்டியிலிருந்து 2 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 43 | கண்டரா மாணிக்கம் | கொங்கரத்தியிலிருந்து 2 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |

| | | | |
|---|---|---|---|
| 44 | பொன்னங்குடி | கண்டரமானிக்கத்திலிருந்து 2 கி.மீ | 25 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 45 | கள்ளிக்காடு | பொன்னங்குடியிலிருந்து 2 கி.மீ | 80 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 46 | கல்ல்ல் | கள்ளிப்பட்டியிலிருந்து 5 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 47 | ஆலம்பட்டு | | வரலாற்றுக்காலத் தொல்லியல் எச்சங்கள் |
| 48 | குருந்தம்பட்டு | தேவக்கோட்டையிலிருந்து 5 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 49 | ஊகம்பட்டு | | 9 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 50 | ராமநாயக் கரேந்தல் | ஊகம்பட்டியிலிருந்து 4 கி.மீ | இரும்புக்கால வாழ்விடம் |
| 51 | தேவக்கோட்டை | | வராலாற்றுக்கால தொல்லியல் எச்சங்கள் |
| 52 | ஊரணிக் கோட்டை | தேவக்கோட்டையிலிருந்து 9 கி.மீ | 9 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால வாழ்விடம் |
| 53 | கிழ்ஆக்களூர் | | 10 ஏக்கர் பரப்பில் இரும்புக்கால எச்சங்கள் |



# 78. சின்னக் களக்காட்டூர் – பழைய கற்காலத் தொழிற்கூடம்

**கி. குமார், சென்னை**

திருவள்ளூர் மாவட்டம், திருத்தணி வட்டத்தில் திருவாலங்காடு இரயில் நிலையத்திற்கு தெற்கே சுமார் 2 கீமீட்டர் தொலைவில், தக்கோலத்திலிருந்து கனகம்மா சத்திரம் செல்லும் சாலையில் சின்னக் களக்காட்டூர் அமைந்துள்ளது. இவ்வூர் திருவள்ளூருக்கு மேற்கே 16 கீ.மீட்டர் தொலைவில் உள்ளது. கோர்த்தலையாறு இவ்வூருக்கு கிழக்கே சுமார் 3 கீ.மீட்டர் தொலைவில் செல்கிறது. சின்னக் களக்காட்டூர் பகுதியில் பழங்கற்காலக் கருவிகள் செய்யப்பட்ட தொழிற்கூடப் பகுதி கண்டறியப்பட்டது, இக்கட்டுரையில் சின்னக் களக்காட்டூரில் கண்டு பிடிக்கப்பட்ட பழங்கால கருவிகள் குறித்த விவரங்கள் கொடுக்கப் பட்டுள்ளன.

## முந்தைய ஆய்வுகள்

இக்கண்டுபிடிப்பிற்கு முன்னர் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட காலத் தடயங்களை ஆய்வு செய்த ஆங்கிலேய நிலப் பொறியியல் வல்லுநர் இராபர்ட் புரூஸ்புட் அவர்கள் திருவாலங்காடு இரயில் நிலையத்திற்கு வடக்கே உள்ள பையனூர் என்றழைக்கப்படும் பழையனூர் பகுதியிலிருந்து பழங்கற்காலக் கருவிகளை கண்டெடுத்ததாக தமது நூலில் தெரிவித்



துள்ளார். மேலும், பேராசிரியர் சு.இராசவேலு திருவாலங்காட்டுப் பகுதியில் கள ஆய்வு மேற்கொண்டபோது பல பழங்கற்காலக் கருவிகளைக் கண்டுபிடித்துள்ளார். திருவாலங்காட்டிற்கும், பழையனூருக்கும் தெற்கே சுமார் 5 கி.மீட்டர் தொலைவில் அமைந்துள்ள சின்னக்களக்காட்டூரில் கற்காலக் கருவிகள் தற்போது கண்டுபிடிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## பழங்கற்காலக் கருவிகளின் தொழிற்கூடம்

சின்னகளக்காட்டூரின் வடமேற்கு பகுதியில் சித்தேரிதாங்கல் என்றழைக்கப்படும் சிறிய ஏரி உள்ளது. இந்த ஏரிக்கு மேற்கு மற்றும் வடக்கும் புறத்தில் கூழாங்கற்கள் நிறைந்த பெரிய மேட்டுப் பகுதி காணப்படுகிறது இம்மேட்டின் தென்கிழக்கு சரிவுப் பகுதியில் சித்தேரிதாங்கல் உள்ளது இந்த ஏரியின் உட்புறத்திலும் ஏரிக்கு கிழக்குப் பகுதியிலும் ஏரளமான கற்கருவிகள் காணப்படுகின்றன. முதற் பழங்கற் காலம் மற்றும் இடைப்பழங்கற்காலம் ஆகிய இரண்டு காலக்கட்டங்களை யும் சேர்ந்த கற்கருவிகள் ஒருசேர காணப்படுகின்றன பெரிய மேட்டுப் பகுதியானது மழையினால் அரிக்கப்பட்டு அங்கிருந்த மண் அடித்து செல்லப்பட்டதால் இரண்டு காலகட்டங்களையும் சேர்ந்த கற்கருவிகள் மேற்பரப்பிலேயே ஏராளமாக காணப்படுகின்றன. மேலும், இப்பகுதியில் கற்கருவிகள் செய்யப் பயன்படுத்தப்படும் குவார்ட்சைட் வகை கூழாங்கற்களும், கற்கருவிகள் செய்யப்பட்டபோது பெயர்த் தெடுக்கப்பட்ட சில்லுகளும் குவியல் குவியலாக காணப்படுகின்றன மேலும், பல கருவிகள் முற்றுப்பெறாத நிலையிலும், உடைந்த நிலையிலும் காணப்படுகின்றன எனவே, இவ்விடம் முதற்பழங்கற்காலம் மற்றும் இடைப் பழங்கற்காலக் கருவிகள் செய்யப்பட்ட தொழிற்கூடமாக விளங்கியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது

# 79. குட்டகம் – பெருங்கற்கால ஈமச்சின்னங்கள்

**டி. விஜய், சென்னை**

பண்டைய கொங்கு நாட்டுப் பகுதியும் இன்றைய திருப்பூர் மாவட்டம், அவிநாசி வட்டத்தைச் சேர்ந்த குட்டகம் என்னும் ஊரில் கள மேற்பரப்பாய்வு மேற்கொள்ளும் போது அங்கு பெருங்கற்கள், ஈமச் சின்னங்கள் புதிதாக கண்டறியப்பட்டுள்ளன.

அவினாசியில் இருந்து வடமேற்கில் சுமார் 15 கிமீ தொலைவில் குட்டகம் என்ற கிராமம் அமைந்துள்ளது. இவ்வூரில் கல்வட்டம் , முதுமக்கள் தாழி, கற்பதுக்கை, கற்குவை மற்றும் குத்துக்கல் கிடைத்துள்ளன.

இந்த கிராமத்தின் தெற்கு பகுதியில் பொருசமரத்துமேடு என்ற இடத்தில் சிதைந்த நிலையில் கற்பதுக்கைகளும் உடைந்த முதுமக்கள் தாழிகளின் ஓடுகளும் காணப்படுகின்றன. மேலும் இவ்விடத்தில் கருப்பு சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு வண்ண மட்கலங்களின் ஒடுகளும் கிடைக்கின்றன. இங்கு காணப்படும் கற்பதுக்கைகள் பெரிய கற்பலகையைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இவை சிதைந்த நிலையில் காணப்படுவதால் இவற்றின் முழுமையான அமைப்பு எவ்வாறு இருந்தது என அறிய முடியவில்லை. இங்கு காணப்படும் கற்பலகையின் அளவானது 4 முதல் 8 அடி வரை நீளமும், 6 முதல் 8 அடி வரை அகலமும் கொண்டதாக உள்ளன.



குட்டகத்தில் இருந்து சேவூர் செல்லும் சாலையில் சுமார் 2 கி.மீ. தொலைவில் ஓர் குத்துக்கல் அமைந்துள்ளது. இக்குத்துக்கல்லின் அளவானது 5 அடி உயரமும், தரைப்பகுதி 2 அடி அகலமும் கொண்டுள்ளது.

இவ்வூரின் மையப் பகுதியில் மாதேஸ்வரன் கோவில் அமைந்துள்ளது. இக்கோவிலைச் சுற்றிலும் பெருங்கற்கால ஈமச்சின்னங்களான கல்வட்டமும் கற்குவையும் காணப்படுகின்றன. இவ்விடத்தில் தற்பொழுது சுமார் 15-க்கும் மேற்ப்பட்ட கல்வட்டங்கள் முழுமையான அமைப்பில் உள்ளன.

இக்கல்வட்டங்களைத் தவிர இதன் அருகே சுமார் 20 மீட்டர் தொலைவில் மற்றொரு வகையான பரல் உயர் பதுக்கை உள்ளது. இப்பரல் உயர் பதுக்கையானது பெரும் பாறைகளைக் கொண்டு அமைக்கப்பட்டு, அதனுள் சிறு கற்களை கொண்டு உயரமாக அடுக்கியுள்ளனர். இந்த ஈமச்சின்னம் சுமார் 8 அடி சுற்றளவில் அமைந்துள்ளது. இந்த பரல் உயர் பதுக்கைகையானது மற்ற கல்வட்டங்களில் இருந்து வேறுபட்டு காணப்படுகிறது.

இந்த ஈமச்சின்னங்களை அமைப்பதற்கான மூலக்கற்கள் இவ்வூரைச் சுற்றி அமைந்துள்ள சிறு சிறு குன்றுகளில் இருந்து எடுத்து வந்து பயன்படுத்தி இருக்கலாம். மேலும் தற்பொழுது இந்த ஈமச்சின்னங்கள் பல்வேறு காரணங்களுக்காக சிதைக்கப்பட்டு வந்துள்ளன, அவற்றில் சாலை அமைக்கும் பணியின்போது அதிக அளவில் இருந்த ஈமச்சின்னங்கள் சிதைக்கப்பட்டுள்ளன. இதைத்தவிர அந்நிலங்களில் உழவுத்தொழில் மேற்கொள்ளும் போதும் அதிகமான அளவில் சேதப்பட்டு வருகின்றன.



# 80. குனியமுத்தூரில் கிடைத்த ரோமானியக் குடியரசு நாணயங்கள்

சுகவன முருகன், காவேரிபட்டினம்

*கோவை மாநகரின் ஒரு பகுதியாக இன்று விளங்கும் குனியமுத்தூர் பண்டைய வணிக வழியான இராசகேசரி பெருவழியில் அமைந்துள்ள தொல்லியல் முக்கியத்துவம் வாய்ந்த இடமாகும்.கோவை நண்பரொருவரின் சேகரிப்பில் அரிய இரு ரோமானியக் குடியரசு நாணயங்கள் அடையாளம் கண்டறியப்பட்டுள்ளன இந்நாணயங்கள் குனியமுத்தூரில் கிடைத்தவை.*

*தென்னிந்தியாவில் லட்சத் தீவுகள், எய்யல் (கேரளம்) தவிர்த்து தமிழகத்தில் கிடைத்த ரோமானியக் குடியரசு நாணயங்கள் வெகு சிலவே காட்டாங்கண்ணி, திருப்பூரில் கிடைத்த இரு வெள்ளி தினாரியஸ் நாணயங்கள் பொ ஆ மு.58 மற்றும் பொ ஆ மு 39 ஆண்டுகளில் வெளியிடப்பட்டவை என தகவல் மட்டுமே கிடைக்கிறது திருப்பூர், கிருஷ்ணகிரி, கரூரில் கிடைத்த ரோமானியக் குடியரசு நாணயங்கள் பற்றி பதிவாக மட்டுமே ஆவணப்படுத்தப்பட்டுள்ளன*

*திருப்பூரில் ஆ.சீதாராமனால் சேகரிக்கப்பட்ட நாணயம் ஜூலியஸ் சீசர் ரோமானியக் குடியரசு ஆட்சியாளனாக இருந்தபொழுது பொ.ஆ.மு 46ஆம் ஆண்டு ஆப்ரிக்காவில் வெளியிடப்பட்டதாகும் (சைடான்ஹாம்-1023) கிருஷ்ணகிரியில் திரு.நிசாதுதீன் அஹமதுவிற்கு கிடைத்தது சிநேவியஸ்பால்பஸ் (சைடன்ஹாம்-769b) வெளியிட்ட நாணயம் பொ.ஆ.மு 79)வைச் சேர்ந்ததாகும் கரூரில் கிடைத்ததாக திரு. இரா. கிருஷ்ணமூர்த்தி வகைப்படுத்திய ஆறு நாணயங்களில் இரண்டு போலச் செய்யப்பட்டவை. அவைபெர்டிவிஸ்கேபிடோலினஸ் பொ.ஆ மு.37 மற்றும் கியூகேசியஸ் பொ.ஆ.மு 57இல் வெளிடப்பட்டதன் மாற்று தயாரிப்புகளாகும் பிற நான்கும் கீழ்கண்டவர்களால் அச்சிடப்பட்டவையாம். அவை டிகிரிபியூசியஸ் (சைடன்ஹாம்-738a) பொ.ஆ.மு 82-81, சிலூசியஸ்ஸ்க்ரிபோ (சைடன்ஹாம்-927) பொ ஆ மு. 55, ஏ பிளாடிஸ் (சைடன்ஹாம்-932) பொ.ஆ.மு55, மரியஸ்கார்டியஸ்ரூஃபோ (சைடன்ஹாம்-976) பொ.ஆ.மு 46 ஆகியோரால் வெளியிடப்பட்டனவாகும்.*

*கரூரில் கிடைத்தவைகளில் மூன்றாவதாக வகைப்படுத்தப்பட்டுள்ள நாணயத்தின் முழு விவரம் பின்வருமாறு*

*வெள்ளி தினாரி, எடை 3.8 கி. (சைடன்ஹாம் -932), அக்கசாலை - ரோம்.*



முன் பக்கம் - வலப்புறமாக கோபுர முடியணிந்த சிகை முடிச்சிட்டு நழுவிக் கீழ் விழும்படியாக வைத்த சைபேல் (Cybele ) தேவதையின் திருவுரு. எழுத்துகள் அழிந்துள்ளன.

மறுபக்கம்- ஒட்டகத்தருகே கையில் ஒக் மரக்கொத்தை நீட்டிய நிலையில் IBACCHIVS என்று கீழ்ப்புறமும் IVDAEVES என்று கீழிருந்து மேலாக நிலையில் பொறிக்கப்பட்டுள்ளன.

குனியமுத்தூரில் கிடைத்த இரு நாணயங்களில் ஒன்று ஏ பிளாடிஸ் (A PLATIVS) (சைடன்ஹாம்-932) பொ.ஆ.மு. 55 வெளியிட்டதாகும். இவ்வரிய நாணயம் யூதர் (JUDEA) தொடர்பான முதன்முதல் ரோமானிய நாணயம் என்னும் சிறப்பு வாய்ந்ததாகும். யூதர்களின் அரசனாகவும் மதகுருவாகவும் இருந்த இரண்டாம் அரிஸ்டோபியூலஸ் மண்டியிட்டு மலர்கொத்து வழங்குபவனாக இந்நாணயத்தில் சித்தரிக்கப்பட்டுள்ளான். பொ.ஆ.மு. 66-63 வரைசுயாதிப ஆட்சியாளனாக இருந்தவன். அலெக்சாண்டர் ஜானேஸின் இளையமகன், ஹாஸ்மோனியன் அரசகுலத்து அரசன். ரோமானிய வீரத்தளபதி பாம்பேவியின் படையெடுப்பால் ரோமானியர் கீழ்வந்தது ஜெருசலெமும் ஜுடாவும். ஹீராத் அரசன், ரோமானிய கவர்னர் பாண்டியத் பிளாத் (ஏசு கிருஸ்துவை தண்டித்த) ஆகியோரின் கீழ் ஜெருசலேமும் இதர யூதப் பிரதேசங்களும் ரோமானியக் காலனிகளாக விளங்கின. முதல் யுத்தத்தில் ரோமிற்குக் கொண்டு செல்லப்பட்ட யூத அரசன் அரிஸ்டோபியூலஸ் மண்டியிட மறுத்துப் போராடி பொ.மு.ஆ. 56ல் தன் நாட்டிற்கு ஓடித் தப்ப முற்படுகிறான். பாம்பேவின் நண்பர்களால் ரோமிற்கு கொண்டு வரப்பட்டு சிறை வைக்கப்படுகிறான். ஜூலியஸ் சீசரால் விடுவிக்கப்பட்டாலும் சிரியாவிலிருந்து பாம்பேவால் மீள ரோம் நகருக்கு இழுத்து வரப்பட்டுக் கொல்லப்படுகிறான். இரண்டாம் முறை ரோமில் மலர்க்கொத்துடன் மண்டியிட்ட அரசனை ஒருபுறம் சித்தரித்து ரோமானியக் கருவூல அலுவலர் ஏ பிளாடிஸ் (சைடன்ஹாம்-932) பொ.ஆ.மு. 55ஆம் ஆண்டு வெளியிட்டது இந்நாணயமாகும்.





வெள்ளிதினாரி, எடை 3.7கி. (சைடன்ஹாம் -932), அச்சுசாலை-ரோம்.

முன் பக்கம்- வலப்புறமாக கோபுர முடியணிந்த சிகை முடிச்சிட்டு நழுவிக் கீழ் விழும்படியாக வைத்த சைபேல் (Cybele) தேவதையின் திருவுரு. எழுத்துகள் A"PLAVTIVS AED "CVR"S"C

மறுபக்கம்- ஒட்டகத்தருகே கையில் ஓக் / ஆலிவ் மரக்கொத்தை நீட்டிய நிலையில் IBACCHIVS என்று கீழ்ப்புறமும் IVDAEVES என்று கீழிருந்து மேலாக நிலையில் பொறிக்கப்பட்டுள்ளன.

இச்சிறப்பான நாணயம் (Crawford 431/1, Sydenham 932, Plautia 13)

பிளாடியா எனும் அரிய பிரிவின் கீழ் நாணயவிலாளர்களால் வகைப்படுத்தப்பட்டுள்ளது. இந்நாணயத்தில் கோபுர வடிவக் கிரீடத்துடன் பொறிக்கப்பட்டுள்ள திருவுரு சைபேல் (Cybele) தேவதையுடையதாகும். கிரேக்கர்களின் இத்தேவதையை ரோமானியர்கள் Magna Mater ("Great Mother") தாய்த் தெய்வம் என்று கொண்டாடினர். குடியரசு காலத்திலிருந்து பேரரசு கால ஆட்சிக்கு மாறும் சமயம் சைபேல் வழிபாடு ரோம் நகரக் காவல் தேவதையாகவும் வளமைக்குக் காரணமானவளாகவும் மாற்றியது. ரோமின் யூதப் பிரதேசங்களின் மீதான நிலைத்த மேலாதிக்கத்தைக் காட்டுவதாகவும் செழுமையைப் பறைசாற்ற சைபேலுடன் உள்ள இந்நாணயம் அரிய வரலாற்றுச் சம்பவத்தை நிறுவுவதற்காக வெளியிடப்பட்டதென வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். மட்டுமல்ல சமகால சரித்திரத்தைப் பற்றி வெளியிடப்பட்ட முதல் நாணயமிதுவென்றும் குறிப்பிடுகின்றனர்.

குனியமுத்தூரில் கிடைத்துள்ள மற்றொரு ரோமானியக் குடியரசு நாணயம் சிகாண்டிவிஸ் பவ்டைஸ் (C CONDIVIUS PAUTIUS) என்ற கருவூல அலுவலர் பொ.ஆ.மு. 46ல் வெளியிட்டதாகும்.




வெள்ளி தினாரி, எடை 3.6கி. (கிராஃபோர்ட் 465/4, சைடன்ஹாம் - 993,), அக்கசாலை-ரோம்.

முன்பக்கம் - PAETY என்ற எழுத்துப் பொறிப்புடன் கிரீடமணிந்த வீனஸ் தேவதை இடப்பக்கம் பார்த்த திருவுரு.

மறுபக்கம் - C"CONSIDI என்றிருந்தவை தேய்ந்துள்ளன. (VICTORY) வெற்றித் தேவதை நான்கு குதிரைகள் பூட்டியரதத்தை நீள் பனங்கருக்குடன் இடக்கையால் ஓட்டியவாறு வலக்கையில் மலர் கொத்தேந்தியவளாகச் சித்தரிக்கப்பட்டிருக்கிறாள்.

இவ்வரிய குடியரசு நாணயத்தின் சிறப்பு இதை வெளிட்ட அலுவலன் பற்றிய வரலாறு இவன் நாணயங்கள் தவிர வேறில்லை என்பது. நாணயங்களால் மட்டுமே அறியப்படும் இவன் ஜூலியஸ் சீசர் காலத்தைச் சேர்ந்தவன். திருப்பூரில் கிடைத்த காசு ஜூலியஸ் சீசரால் வெளிடப்பட்டிருக்கையில் அவன் காலத்தைய அலுவலன் வெளியிட்ட காசும் தமிழகத்தில் கிடைத்திருக்கிறது.

ஏபிளாடிஸ் (சைடன்ஹாம்-932) பொ.ஆ.மு.55

சிகாண்டிவிஸ்பவ்டைஸ் (C CONDIVIUS PAUTIUS)

(சைடன்ஹாம் -993 )பொ.ஆ.மு.46

# 81. பிரஞ்சு – இந்தியாவில் வெளியிடப்பட்ட காகித நோட்டுகள்

மா. கோபாலகிஷ்ணன், ஓர்சே

பிரெஞ்சுக்காரர் 1673ஆம் ஆண்டிலிருந்து புதுச்சேரியில் இருந்து வந்தனர். அதுமுதல் 1706இல் மறையும் வரை பிரான்சுவாமர்த்தேன் (Franois Martin) அதன் கவர்னராகயிருந்தார். பிற்காலத்தில், பல கவர்னர்கள் கர்நாடக நவாபுகளுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தியதன் முடிவாக,பெனுவா துய்மா கவர்னராக இருந்தபோது,1736இல் புதுவையிலேயே மொகலாய இந்தியா அனைத்திலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய வெள்ளிக் காசுகள் வெளியிடுவதற்குப் பிரெஞ்சுக்காரர்களுக்கு அனுமதி வழங்கப்பட்டது.

அக்காலத்தில் புழக்கமாக இருந்த விராகன் (பவுன்); ரூபாய் (வெள்ளி), பணம் (வெள்ளீ), காசு (செம்பு) ஆகியவை ஒரு பொன் விராகனுக்கு 3லிருந்து 3l வெள்ளி ரூபாய் வரையும், ஒரு ரூபாய்க்கு ஏறக்குறைய 8 பணமும் கொடுக்கப்பட்டன.

பிரெஞ்சு கிழக்கிந்தியகம்பெனிவெளியிட்டகாசு, துது நாணயங்களில் புதுச்சேரி என்று தமிழில் பொறிக்கப்பட்டிருந்தன மறு பக்கத்தில் பிரெஞ்சு அரசர்களின் அடையாள முத்திரையான லிலி (french.lys=lily) இருக்கின்றது.

இப்பொழுது பிரெஞ்சுக் கல்லூரி இருக்கும் விக்தோர்சிமோநேல் தெரு (fr Rue Victor Simonel= Victor Simonel St) என்றிருப்பது முன்பு (Rue de la Monnaie (Mint Street) என்று தங்கசாலை என்னும் பொருளில் அழைக்கப்பட்டது. இந்தக் கல்லூரிக்குத் தெற்கில்தான் நாணயம் அடிக்கும் கூடம் இருந்தது 19ஆம், 20ஆம் நூற்றாண்டுகளில் - பிரான்சின் மூன்றாம் குடியரசுக்காலம் - இந்தோசீனாவங்கி((fr Banque de lIndochine = Bank of Indochina) என்றழைக்கப்பட்ட வங்கி அச்சடித்துப் பிரெஞ்சிந்தியாவில் மட்டும் புழக்கத்திலிருந்த மூன்று வகை நோட்டுக்களைப் பற்றியும் இங்குக் குறிப்பிடப்படுகிறது ஒரு ரூபாய், ஐந்து ரூபாய், ஐம்பது ரூபாய் நோட்டுக்கள் இருந்தன. அவையனைத்திலும் ஒன்று, ஐந்து, ஐம்பது என்ற எண்களைத் தூயத் தமிழ் எழுத்துக்களிலே அச்சடித்திருந்தார்கள் என்பது கவனிக்கத் தக்கது

ஒரு ரூபாய் நோட்டின் மேல் பக்கத்தில் பிரெஞ்சுக் குடியரசின் பெண் உருவகப் படம் உள்ளது.






ஐந்து ரூபாய் நோட்டின் மேல் பக்கத்தில் அக்குடியரசின் உருவகப் படமும், மறுபக்கத்தில் அக்காலகட்டத்தில் பிரெஞ்சுப் பாதுகாப்பின் கீழிருந்த (protectorate) கம்போடியா நாட்டிலுள்ள ஆங்கோர் வாட்படங்களைக் காணலாம்.





ஐம்பதுரூபாய் நோட்டின் மேல் பக்கத்தில் துய்பிளெக்சின் மார்பளவுச் சிலையும் குடியரசுச் சின்னமும் உள்ளன.






குறிப்பாக, ஒரு ரூபாய், ஐந்து ரூபாய் நோட்டுக்களை 1954ஆம் ஆண்டுவரை உபயோகித்த நினைவு புதுச்சேரி, காரைக்கால், மாகே, யானம் வாழ் வயது முதிர்ந்தோருக்கு இன்றும் இருப்பதைக் காணலாம்.(1) புதுச்சேரி ஐக்கிய இந்தியாவுடன் இணைந்தபோது, கல்கத்தாவிலிருக்கும் United Commercial Bank (UCO) இவ்வங்கியை வாங்கியதிலிருந்து இதன் கட்டடத்தில் இருந்து வருகின்றது.

# 82. தமிழ்க் கல்வெட்டுகளின் பதிப்பும் வரலாற்று மீட்டுருவாக்கமும்

**கோ. விஜயவேணுகோபால்**
**புதுச்சேரி**

*தமிழ்க் கல்வெட்டுகளின் தொகுப்புப் பணியை முதலில் தொடங்கியவர் லெப்டினன்ட் கர்னல் காலின் மக்கன்ஸி என்னும் பெயர் கொண்ட ஐரோப்பியர்பொ.ஆ 1753 இல் ஸ்காட்லாந்தில் பிறந்தவர். பொ.ஆ.1782 ஆம் ஆண்டு தம் 29 ஆம் வயதில் கிழக்கிந்தியக் கம்பெனியாரால் சென்னையில் பொறியாளராகப் பணியமர்த்தப்பட்டார். இவர் கணிதவியலில் நல்ல புலமை பெற்றவர் லார்ட் நேப்பியர் மறைந்த நிலையில் சென்னை ஸர்வேயர் ஜெனரல் பதவி பெற்றார் சென்னையில் இவர் இருந்த ஸர்வேயர் ஜெனரலாக விளங்கிய காலத்தே தமிழகத் தொல்லியலில் ஆர்வம் கொண்டார். இதன் விளைவாகப் பழைய ஏடுகள்,கல்வெட்டுகள் முதலானவற்றைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டார். பொ.ஆ 1818 இல் அவர் இந்தியாவின் ஸர்வேயர் ஜெனலாகப் பதவி உயர்வு பெற்றுக் கல்கத்தாவிற்குச் சென்றார். அப்போது தாம் தொகுத்து வைத்திருந்த ஆவணங்கள் அனைத்தையும் தம்முடன் கல்கத்தாவிற்கு எடுத்துச் சென்றார் இவற்றை முறைப்படுத்தி அட்டவணை தயாரித்து நூலாக வெளியிடக் கருதியிருந்த நேரத்தில் 1818 இல் தம் அறுபத்தெட்டாம் வயதில் காலமானார். அவர் தொகுத்து வைத்திருந்த கையெழுத்துப் பிரதிகளை அப்போது கல்கத்தா ஆளுநராக இருந்த ஹேஸ்டிங்ஸ் மக்கன்ஸியின் மனைவியிடமிருந்து பத்தாயிரம் பவுன் கொடுத்து விலைக்கு வாங்கினார் அப்போது வங்காளத்தில் செயல்பட்டு வந்த ஆசியவியல் கழகத்தினர் (ஏஷியாடிக் ஸொஸைட்டி) இப்பிரதிகளுக்குப் பட்டியல் தயாரிக்கும் பணியினை எச்.எச் வில்ஸன் என்பாரிடம் ஒப்படைத்தனர். இவை பின்னர் 1828 வாக்கில் சென்னைக்கு அனுப்பப் பெற்றன சென்னை அரசாங்கத்தின் ஆணையின் பேரில் ரெவரண்ட் வில்லியம் டெய்லர் இவற்றின் பட்டியலைத் தயாரித்தார் இவற்றுள் சிலவற்றைத் தெலுங்கில் ஈடுபாடு கொண்டிருந்த ஸிபிப்ரௌன் தம் லோகல் ரிகார்ட்ஸ் என்ற தொகுப்பில் சேர்த்துள்ளார். மக்கன்ஸி தொகுத்த ஆவணங்களில் காணப்பட்ட கல்வெட்டுகளை 1953இல் சென்னை அரசு சார்பில் தி.நா.சுப்ரமண்யம் நான்கு தொகுதிகளாக வெளியிட்டுள்ளார் இவ்வாறாகத் தமிழ்க் கல்வெட்டுகள் 1818 இல் தொகுக்கப்பெற்றும் அக்காலத்தே வெளியிடப்படவில்லை என்பதை நாம் மனத்தில் கொள்ளவேண்டும்*

---

**பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவிய தி.நா.சுப்ரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு எண் – 16, நாள் 19–7–2014**

இந்தியாவில் தமிழ்க் கல்வெட்டுகளைத் தொகுக்கும் பணி இந்தியத் தொல்லியல் களஆய்வுத் துறையினரால் 1886 இல் தொடங்கியதெனினும் அவற்றின் பதிப்புப் பணி 1890இல் தென்னிந்தியக் கல்வெட்டுகள் (தமிழ்-சமக்கிருதம்) முதல் தொகுதியோடு முளை விடுகிறது. தொகுப்புப் பணியைத் தொடங்கியவர் முனைவர் இ ஹூல்ட்ச் இவரே இந்திய அரசின் தென்னிந்தியத் தொல்லியல் களஆய்வுத் துறையின் கல்வெட்டாய்வாளர் அப்போது இந்தியத் தொல்லியல் கள ஆய்வுத் துறையின் இயக்குநராகத் திகழ்ந்தவர் ஜேபர்ஜஸ் அவர்கள் ஹூல்ட்ச் தம் கல்வெட்டாய்வுப் பணி முடிந்த நிலையில் அதற்கான தகவல் அறிக்கையைப் பர்ஜஸுக்கு அனுப்ப அதனை அவர் சென்னை மாகாண அரசின் தலைமைச் செயலாளருக்குத் தம் பாராட்டுரையுடன் அனுப்பி வைத்துள்ளார். 215 பக்கங்கள் கொண்ட அந்த அறிக்கையில் கல்வெட்டுப் படிகள், அவற்றின் மொழிபெயர்ப்பு, கல்வெட்டுகளின் சுருக்கம் ஆகியவை இருந்தன இவையே பின்னர் நூல்வடிவம் பெற்று வெளிவந்தன. தென்னிந்தியக் கல்வெட்டுகளின் முதற்றொகுதி மாமல்லபுரத்திலும் சாளுவங்குப்பத்திலும் படியெடுக்கப்பட்ட வடமொழிக் கல்வெட்டுகளுடன் 1890 ஆம் ஆண்டு சனவரி மாதம் 27 என்ற தேதியிடப்பட்டு வெளிவந்தது. நால்வேறு கால எழுத்தமைதி கொண்ட கல்வெட்டுகள் இவை. ஹூல்ட்ச் தம் முன்னுரையில் தம்மால் நேரடியாகப் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார் இது மிகவும் முக்கியமான குறிப்பு என நான் கருதுகிறேன் ஏனெனில் பிற் காலத்தே இவ்வழக்கம் பின்பற்றப்படாமல் படியெடுப்பவர் ஒருவராகவும் படித்தவர் வேறொருவராகவும் பதிப்பிப்பவர் வேறொருவராகவும் அமைந்து பல சிக்கல்கள் தோன்றுகின்றன எடுத்துக்காட்டாக முதலில் படியெடுத்தவர் கல்வெட்டின் உண்மை நிலைகளைச் சொல்வதில்லை நேரில் ஆய்வு செய்யும்போது கல்வெட்டுப் பகுதிகள் விடுபட்டுள்ளமையை இன்று நாம் பல இடங்களில் காண்கிறோம் மற்றொன்று படியெடுப்பாளர் தாம் கல்வெட்டுகள் படியெடுத்த இடங்களில் சில படியெடுக்கப்படாமல் உள்ளன என்ற தகவலை அறிக்கையில் சொல்வதில்லை. இதனால் பல கோயில்களில் ஆண்டறிக்கைகளில் குறிப்பிட்டுள்ளவை போக மேலும் சில கல்வெட் டுக்கள் எஞ்சி நிற்கின்றமையைக் காண்கிறோம் நான் ஆய்வு செய்த புள்ளமங்கை, புஞ்சை, பிரான்மலை, திருச்சோற்றுத்துறை முதலான கோயில்கள் இதற்குச் சான்றுகள்.

அச்சிடப்பட்ட கல்வெட்டுகள் பலவற்றில் கல்வெட்டு முழுமையுமில்லை. இவற்றை நேரில் காணும்போது குறைப்பகுதிகள் படியெடுக்காது விடப்பட்டுள்ளமையைக் காண முடிகிறது எழுத்தமைதியைக் கொண்டு இவற்றை இனங் காண முடியும். எனவே கல்வெட்டுப் பதிப்பாளர் நேரிடையாகச் சென்று ஆய்வு செய்த பின்னரே பதிப்பு மேற்கொள்ள வேண்டும் என்பதை இது உறுதி செய்கிறது.

சில போது கல்வெட்டின் கருத்து தொடர்ச்சியாக இருப்பினும் எழுத்தமைதிகளில் மாற்றம் காணப்படுகின்றது. இதற்கான காரணங்கள் பதிப்பில் விளக்கப்பட வேண்டும்.

ஆண்டறிக்கையில் உள்ள தகவல்களின் அடிப்படையில் கல்வெட்டுகள் உள்ள இடங்களுக்குச் சென்று ஒப்பிடும் போது சில பிழைகளும் மாறுபாடுகளும் அறியக் கூடுவனவாக உள்ளன.

இனி மற்றொரு சிக்கல். ஆண்டறிக்கைகளில் சுட்டப்படும் கல்வெட்டு களின் மைப்படங்கள் தொல்லியல்துறைக்கு அனுப்பப்படுகின்றன இவற்றினை ஒருவர் வாசித்துக் கல்வெட்டு வாசகங்களை எழுதித் தருகிறார் இவ்வாசகங்களையே பின்னால் பதிப்பாசிரியர் ஒருவர் நூல் வடிவாக்குகிறார். இவை எல்லாம் கல்வெட்டுகளை நேரில் பார்க்காமலேயே செய்யப்படுகின்றன. இதனால் பல பிரச்சினைகள் ஏற்படுகின்றன எடுத்துக்காட்டாகப் பெருமளவில் ஆட்சியாண்டுகள் குறித்த தமிழ் எண் வடிவங்கள், நில அளவுகள்,காசு போன்றவற்றிற்கான குறியீடுகள் முதலானவற்றைப் புரிந்து கொள்வதில் மாறுபாடுகள் காணப்படுகின்றன இவையெல்லாம் கல்வெட்டுகளைப் பதிப்பிப்பதற்கு முன் பதிப்பாளர் இவற்றை நேரிடையாக ஆய்வு செய்வதன் இன்றியமையாமையை வற்புறுத்துகின்றன.

ஹூல்ட்ச் தம் கல்வெட்டுப் பதிப்புப் பற்றிக் கூறும்போது, "நூல் தயாரிப்பில் முதற் குறிக்கோளாகத் தாம் கொண்டது, கல்வெட்டுப் படியில் காணப்படும் நுணுக்கமான விவரங்களைத் துல்லியமாகப் பதிவு செய்தல்" எனக் குறிப்பிடுகிறார். இதற்கேற்ப இவர் பதிப்பில் கிரந்த எழுத்துக்களும் தமிழ் எழுத்துக்களும் கலந்து வரும் கல்வெட்டு வாசகங்களை மூலத்தில் உள்ளபடியே கிரந்த அச்செழுத்துக்களை இமைத்துப் பதிப்பித்துள்ளார் பின்னாளில் கிரந்த எழுத்துக்களை தேவநாகரி எழுத்துக்களால் நிரப்பிப் பதிக்கப்படுவதைப் பின்னர் எடுத்துக் காட்டுவேன் ஹூல்ட்சின் பதிப்பில் காணப்படும் குறை யொன்றை இங்குச் சுட்டிக் காட்ட வேண்டும் கல்வெட்டில் வரும் தமிழ்ச் சொற்களை ஆங்கிலத்தில் ஒலிபெயர்ப்புச் செய்யும் போது அவர் காலத்தே வழக்கிலிருந்த தமிழ் உச்சரிப்பின்படி ஒலிபெயர்த்திருக்கிறார். எடுத்துக்காட்டாக மாமல்லபுரம் இராசராசன் கல்வெட்டில் வரும் காந்தளூர், வேங்கை நாடு,குடமலை நாடு,இரட்டபாடி முதலான சொற்களை Kandalur,Vengai nadu,Kudamalai nadu,Iratta padi என ஒலிப்பிலா ஒலிகளை ஒலிப்புடை ஒலிகளாக ஒலிபெயர்ப்புச் செய்துள்ளார். இவ்வழக்கத்தை இந்தியத் தொல்லியல் துறையினர் மரபாகக் கருதி இன்றுவரை தம் பதிப்புக்களில் பின்பற்றி வருகின்றனர். தமிழ் மொழி வரலாற்றை ஆராயும் மொழியியலாருக்கு இது பெருங்குழப்பத்தை ஏற்படுத்துவதாக உள்ளது என்பதைக் குறிப்பிட வேண்டும்.

ஹுல்ட்ச் தம் பதிப்புநெறியில் அடுத்தபடியாகக் “கல்வெட்டின் மொழிபெயர்ப்பினைத் தருவது மட்டுமன்றி அவற்றின்வழி வரலாற்றுக் கூறுகளை மீட்பதும் இவற்றினை யொத்த தொடர்புடைய வேறு கல்வெட்டுச் செய்திகளோடு ஒப்பிடுவதன்வழி எதிர்காலத்தே தென்னிந்திய வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்யத் துணைபுரிவதும் ஆகும் “எனக் குறிப்பிடுகிறார். இக்கருத்துக்கள் நமக்கு கல்வெட்டுகளின் பதிப்புப் பற்றிச் சில முக்கியமான அடிப்படைகளை எடுத்துக் காட்டுகின்றன. இந்தப் பின்னணியில் ஹுல்ட்ச் பதிப்புக்களை நாம் காணும்போது கீழ்வரும் கூறுகளைக் காணலாம்.

1. கல்வெட்டு வரிசை எண், காணப்படும் இடம் பற்றிய விளக்கம்
2 கல்வெட்டுகள் ஏற்கனவே அறியப்பட்டனவா? புதியனவா? என்ற விளக்கம்
3. கல்வெட்டுகளின் எழுத்தமைதிபற்றிய குறிப்புகள்
4. கல்வெட்டில் காணப்படும் எழுத்து வகைகளை அச்சிலும் கொண்டு வருதல்
5. கல்வெட்டுகளின் விளக்கம் - அரச மரபு விளக்கம், அரசன்,ஆட்சி யாண்டு, முதலியன
6. இவ்விளக்கங்களின்வழி தமிழக வரலாற்றை மீட்டுருச் செய்தல்
7. கல்வெட்டுப் பற்றிய பிறர் கருத்தும் மறுப்பும் விளக்கமும்
8. கல்வெட்டு வாசகம்
9. ஆங்கில மொழிபெயர்ப்பு - அச்சு மரபுகள்
10 அடிக் குறிப்புக்களும் விளக்கங்களும்

இவை தவிர நூலின் பிற் சேர்க்கையில் கல்வெட்டுச் சொற் களஞ்சியமும் இணைக்கப்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கது. இக்கூறு பின்னாளைய பதிப்புக்களில் காணப்படவில்லை. இவரது பதிப்பில் கல்வெட்டுகளின் மசிப்படங்கள் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

இம்முறையில் அமையும்போது பதிப்புகள் தமிழக வரலாற்று மீட்டுருவாக்கத்தையும் செய்கின்றன இந்நிலையில் தொடக்கக் காலத்தே பிற பதிப்பாளர் எவ்வெவ் வகையில் பதிப்பு உத்திகளை மேற்கொண்டிருந்தனர் என்பதை அறிந்து கொள்வது பயனுடையதாக இருக்கும். ஹுல்ட்ச் பதிப்பினை ஒட்டி 1892இல் எபிகிராஃபியா இண்டிகா என்ற பதிப்புத் தொடரின் முதல் தொகுதி வெளியானது இதன் பதிப்பாசிரியர் இந்தியத் தெல்லியல் களஆய்வுத் துறையின் பொது இயக்குநர் ஜாஸ் பர்ஜஸ் அவர்கள் இப்பதிப்பின் துணையாசிரியர்கள் ஹுல்ட்சும் ஏஃபூரர் அவர்களும் ஆவர்.

இப்பதிப்பு மேற்கொள்வதற்கான வேண்டுகோள் அரசுக்கு 1887இல் விடப்பட்டது. இதன் நோக்கம் கல்வெட்டுகள், அவற்றின் மொழி பெயர்ப்புக்கள் மட்டுமன்றிப் பிற தொல்லியல் தகவல்களையும் தருவதாகும். இது மற்றொரு வளர்ச்சி நிலை ஆகும் இதன் முன்னுரையில், "இந்தியக் கல்வெட்டுகள் பண்டைய வரலாற்றின் பதிவுகள் என்றும் இவை சம கால நிகழ்ச்சிகளைப் பிரதிபலிப்பன என்றும் இவை வரலாற்றாசிரியனுக்கு மிக்க மதிப்புடையன என்றும் இதனால் இவை முற்றிலும் பாதுகாக்கத் தக்கன" எனவும் பர்ஜஸ் குறிப்பிடுகிறார். மேலும் இவை கால வரிசை, புவியியல்,சமய அமைப்புகள், அரச மரபுகள்,குடும்ப மரபுகள்,வரிகள்,நில மரபுகள்,பழக்க வழக்கங்கள், சமூக அமைப்புக்கள், மொழிகள்,எழுத்து மரபுகள், நீதிபதிகள் போன்ற பல்வேறு இன்றியமையாச் செய்திகளைத் தாங்கி நிற்பன எனவும் குறிப்பிடுகின்றார் எனவே கல்வெட்டுகளைத் தொகுப்பதும் அவற்றை மொழி பெயர்ப்போடும் பல்வேறு விளக்கங்களோடும் பதிப்பிப்பதும் இன்றியமையாத் தேவையுடையன எனச் சிறப்பாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது இந்நோக்கங்கள் ஹூல்ட்ஸ் பதிப்புக்களிலும் சுட்டப்படுவனவே இவர் தம் முன்னுரையில் மற்றொரு முக்கியமான அடிப்படையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது கல்வெட்டுகளைக் காலவரிசைப்படியும் அரச மரபுப்படியும் தனித்தனித் தொகுதிகளாக வெளியிட வேண்டும் என்பதே அது. பிற்காலத்தே இது சில போது பின்பற்றப்பட்டிருப்பினும் முழுமையாக செயற்படுத்தப்படவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

எபிகிராஃபியா இண்டிகா தொகுதியில் முதலாவதாகப் பல்லவ மன்னன் சிவஸ்கந்த வர்மனின் பிராகிருத மொழியிலமைந்த ஹிரஹடஹள்ளிச் செப்பேடுகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன இதனைச் செய்துள்ளவர் ஜிப்யூஹ்லர் இதில் செப்பேடுகள் கிடைத்த விவரம்,செப்பேடுகளின் நிலை, எழுத்துகள், அவற்றின் நிலை, வாசகத்தின் அமைப்பு, மொழி, செப்பேட்டில் காணப்படும் எழுத்து மாறுபாடுகள், சில சிறப்புச் சொல் வழக்குகள்,மொழி இலக்கணம்,ஆகியன முதலில் விளக்கப்படுகின்றன இதை அடுத்து வரலாற்றுச் செய்திகள் விளக்கப்படுகின்றன. இங்கு மொழிபெயர்ப்பு மட்டுமன்றி கல்வெட்டு வாசகம் ஆங்கில ஒலிபெயர்ப்பிலும் தரப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும் ஹூல்ட்ச் இதனை மேற் கொள்ளவில்லை மேலும் செப்பேட்டின் மசிப்படங்களும் தரப்பட்டுள்ளன இதுவும் ஹூல்ட்சின் அடிப்படைகளின் வளர்ச்சி நிலையாகக் கருதலாம். இவற்றோடு ப்யூஹ்லர் செப்பேட்டில் காணப்படும் வரிவடிவங்களின் பட்டியலையும் தனியே கொடுத்துள்ளார். இதுவும் ஒரு வளர்ச்சி நிலையே. இதன் பின்னர்ச் செப்பேட்டு வாசகத்தின் ஆங்கில மொழிபெயர்ப்புத் தரப்பட்டுள்ளது. இறுதியில் மேலும் சில விளக்கங்கள் உள்ளன.இவரும் அடிக்குறிப்புக்களுடன் விளக்கங்களையும் கொடுத்துள்ளார். இத் தொகுப்பில் தமிழ்க் கல்வெட்டுகள் ஏதும் பதிப்பிக்கப்படாத நிலையில் ஒலிபெயர்ப்புப் பற்றி எதுவுங் கூற வியலவில்லை.

இப்பதிப்பில் காலக் கணக்கீடுபற்றிய ஹெர்மான் ஜேக்கப் ஜேகோபி அவர்களின் கட்டுரை காலக் கணக்கீடு செய்வதற்கான பல அட்டவணை களையோடு அமைந்துள்ளது. இது கல்வெட்டில் வரும் நாள்,திதி முதலான விவரங்களைப் புரிந்து கொள்ளப் பெரிதும் உதவுவதாகும். பஞ்சாங்கக் குறிப்புக்களை விளக்கிக் காலத்தை உறுதி செய்யும் முயற்சிகள் தொடக்கக் காலப் பதிப்புக்களில் மட்டும் காணப்படுகின்றன பிற்காலத்தே இக்கணக் கீட்டில் ஈடுபாடு கொண்டிருந்தவர் கும்பகோணம் என் சேதுராமன் அவர்கள் இன்று இவ்வழக்கம் பதிப்புக்களில் பின்பற்றப்படுவதில்லை.

இதற்கு அடுத்ததாக வந்த கல்வெட்டுப் பதிப்பு திருவாங்கூர் தொல்லியல் வரிசை என்ற பெயரிலமைந்தது இதன் முதல் தொகுதி 1908 இல் வெளிவந்தது இதன் பதிப்பாளர் டி ஏ.கோபிநாத ராவ் ஆவார் தம் காலத்துக் கிடைத்த அனைத்துக் கல்வெட்டுகளையும் பத்துத் தொகுதிகளாகப் பதிப்பித்துள்ளார். இப்பதிப்பின் முக்கியத்துவம் குறித்து இதின் இரண்டாம் பதிப்பை 1988 இல் வெளியிட்ட என் வி பி.உனிதிரி தம் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார் கல்வெட்டின் மையக் கருத்தினைத் தருதல், தம் சம கால ஆசிரியர்களது கருத்துக்களை எடுத்துக் காட்டுதல்,தமது சொந்தக் கருத்துக்களை வெளிப்படுத்துவதோடு சேர்த்தல்,மாற்றல்,திருத்தம் ஆகியனவற்றைச் செய்தல், பலரது கவனத்திற்கு வராத பல கல்வெட்டுகளை எடுத்துக் காட்டுதல் என்பவற்றை இவரது பதிப்பின் சிறப்பம்சங்களாக எடுத்துக் காட்டியுள்ளார் கோபிநாத ராவ் அவர்களின் பதிப்பில் கீழ்க்காணும் கூறுகளை இனங் காண முடிகிறது இம்முதல் தொகுதியில் முதலாவதாகக் கோக்கருநந்தடக்கனின் செப்பேடுகள் பதிப்பிக்கப் பட்டுள்ளன. இதில் செப்பேடுகள் பெறப்பட்ட விதம், இவை ஒரே கல்வெட்டினைச் சேர்ந்த பகுதிகள் என்ற விளக்கம் முதற்கண் உள்ளது அடுத்துச் செப்பேடுகள் எவ்வாறு எழுதப்பட்டுள்ளன என்ற விளக்கம், தொடர்ந்து எழுத்தமைதி பற்றிய விளக்கம் என முறையே வந்து பின் இவை இருவரால் எழுதப்பட்டிருக்கலாம் என்ற கருத்து வருகிறது. பின் அரசனின் காலம் பற்றிய விளக்கம் வருகிறது இவரும் அடிக்குறிப்புக்கள் பல தருவதோடு பிற விளக்கங்களும் தந்துள்ளார். கல்வெட்டுகள், செப்பேடுகளின் மைப்படங்களும் ஒப்பீட்டிற்குத் தரப்பட்டுள்ளன. இவரது பதிப்பு மரபும் பெரிதும் முந்தைய பதிப்பாளர் நெறிகளையே பின்பற்றி அமைந்துள்ளது இவரது பதிப்பில் மற்றொரு சிறப்பம்சம் தாம் கருத்து மாறுபடுவதனைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக் கூறுதலாகும். ஆனைமலைக் கல்வெட்டுபற்றிய வெங்கோப ராவின் வாசிப்பையும் விளக்கத்தையும் கடுமையாக விமர்சித்துவிட்டு சில குறைகளிருப்பினும் குடமுழுக்கு நிறைவேறிய பின்னரே மாறங்காரி மறைந்தாரெனவும் குறிப்பிடுவதை இங்கே எடுத்துக் காட்டலாம் இக் கருத்துப் பற்றிய விவாதம் தொடர்ந்து மேற்கொள்ளப்படவில்லை என்பதுஇங்குக் குறிப்பிடத்தக்கது கோபிநாத ராவ் பதிப்பின் மற்றொரு முக்கிய கூறு தமிழ் எழுத்துக்களின் வரலாற்றை விளக்கும் வகையில் அமைந்த பல அட்டவணைகளைத்

தொகுப்புக்களாகும். தமிழ் எழுத்துக்களின் கால வாரியான வளர்ச்சியினை விளக்கும் முழு நூல் இன்னும் தமிழில் மேற்கொள்ளப்படவில்லை என்பது வருந்தற்குரிய நிலை ஆகும் இது போலவே தமிழக வட்டெழுத்துக்களையும் கேரள வட்டெழுத்துக்களையும் ஒப்பிட்டுக் கட்டுரையோ நூலோ வரவில்லை. தமிழ் எழுத்து வளர்ச்சியில் ஈடுபாடு கொண்டோர் இவ்வழியில் கவனம் செலுத்த வேண்டும். கோபிநாத ராவ் கல்வெட்டுச் சொற்களை ஒலிபெயர்ப்புச் செய்யும்போது ஹூல்ட்ச் பின்பற்றிய முறையையே பின்பற்றியுள்ளார்.

இதற்கு அடுத்த நிலையில் வருவது திருப்பதி தேவஸ்தானக் கல்வெட்டுகள் பதிப்பாகும் இதன் முதல் தொகுதி 1930 இல் வெளிவந்தது. இதன் பதிப்பாசிரியர் திருப்பதி தேவஸ்தானத் தொல்லியல் அறிஞரான ஸாது ஸுப்ரமண்ய ஸாஸ்திரி ஆவார். திருமலை திருப்பதி தேவஸ் தானத்தைச் சேர்ந்த கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளைப் படியெடுக்கும் பணி 1920 களில் தொடங்கியது. இப்பதிப்பில் ஏழு தொகுதிகள் வந்துள்ளன பழங்காலக் கல்வெட்டுகள் தமிழிலும் விசயநகர மன்னர் காலக் கல்வெட்டுகள் தமிழ் தவிரத் தெலுங்கு, கன்னட மொழிகளிலும் அமைந்துள்ளன இவ்வரிசையின் முதற் றொகுதியில் பல்லவர் ,சோழர்,பாண்டியர்,தெலுங்குப் பல்லவர், யாதவராயர் கல்வெட்டுகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன இவற்றைத் தொடர்ந்து விசயநகர மன்னர் கல்வெட்டுகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன இப்பதிப்பில் எழுத்து மரபு பற்றியும் மாற்றங்கள் பற்றியும் எதுவும் குறிப்பிடப் படவில்லை கல்வெட்டு வாசகங்களைக் குறில் நெடில் வேறுபாடுகளின்றிக் கல்வெட்டி லுள்ளவாறே பதிப்பித்துள்ளார் வரலாற்று மீட்டுருவாக்க நோக்கில் ஆய்வு முன்னுரைகள் சிறப்பாக அமைந்துள்ளன கல்வெட்டுகளின் வரிசை எண்கள், இருக்குமிடங்கள் ஆகியவற்றுடன் மொழிபெயர்ப்பும் அடிக்குறிப் புக்களும் அமைந்துள்ளன நூலிறுதியில் சொற்களஞ்சியமும் கல்வெட்டு மசிப் படங்களும் தரப் பட்டுள்ளன. இப்பதிப்பும் பெரும்பாலும் முந்தைய பதிப்புக்களை அடியொற்றியே அமைந்துள்ளது குறிப்பாக ஒலிபெயர்ப்பில் முந்தைய மரபையே பின்பற்றியுள்ளார்

அடுத்த முக்கியமான பதிப்புக்கள் தி.நா.சுப்ரமண்யம் அவர்கள் செய்த பல்லவர் செப்பேடுகள் முப்பது, பாண்டியர் செப்பேடுகள் பத்து, தென்னிந்திக் கோயிற் சாசனங்கள் ஆகியனவாகும் இவற்றுள் முதலில் வந்தது தென்னிந்திய கோயிற் சாசனங்கள் தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள் 1953 இல் நான்கு தொகுதிகளாக வெளிவந்தன இப் பதிப்பில் காணப்படும் சாசனங்கள் ஏற்கனவே எடுத்துக் காட்டியது போலக் கர்னல் மக்கன்ஸியால் தொகுக்கப்பட்டவை. மக்கன்ஸியின் பங்கு தொகுப்பதற்கு ஏற்பாடுகள் செய்தமையோடு முடிவடைகிறது. அவற்றைப் படியெடுப்பதற்கு அவர் சிலரைத் தம் சொந்தச் சிலவில் நியமனம் செய்திருந்தார் பிரதிகளை

நோக்குகிறபோது பிரதி செய்தவர்களுக்குக் கல்வெட்டு மொழிப் பயிற்சி இல்லை என்பது தெளிவாகிறது. வாசகங்களை அக்காலத்து வழக்கிலிருந்த தமிழ் வழக்குகளின் அடிப்படையில் எழுதியிருக்கிறார்கள். இதனைத் தி.நா.சுப்ரமண்யம் அவர்களே குறிப்பிட்டுள்ளார் எனினும் இவற்றைக் கூடியவரை கல்வெட்டு மொழி வாசகங்களாகத் திருத்தி அடிக் குறிப்பில் சேர்த்துள்ளார். எடுத்துக்காட்டாகச் சேந்தமங்கலம் என்ற ஊரில் காடவராயன் எடுப்பித்த கோயில் வாணிலை கண்ட வீர ஈச்வரம் எனப் பெயர் பெற்றது இப் பெயரைப் பிரதி செய்தவர் வானிலகண்ட வீர ஈச்வரம் என்று எழுதக் கடைசியிலே அது வர நீலகண்ட வீரேச்வரம் என மாறிவிட்டது மேலும் இவற்றுள் ஏற்கனவே தென்னிந்தியக் கல்வெட்டு வரிசை, எபிகிராபியா இண்டிகா போன்ற பதிப்புகளில் வந்தவற்றையும் வாராது முதன்முதலாகத் தாம் பதிப்பிப்பது பற்றியும் சாசன இலாகாவினால் பிரதி செய்யாதவை பற்றியும் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார் இவற்றுள் சிலவற்றின் மூலங்கள் அழிந்து போன நிலையில் மக்கன்ஸியின் பிரதிகளே ஆதாரங்களாக அமைந்திருக்கின்ற நிலையையும் எடுத்துக் காட்டியுள்ளார் பதிப்பு முறையில் கல்வெட்டுகள் மாவட்ட வாரியாக வரிசைப்படுத்தப் பட்டு ஒவ்வொரு மாவட்டத்திலிருந்த தாலுகாக்களில் வரும் ஊர்களில் காணப்படும் கல்வெட்டுகள் முறையே தரப்பட்டுள்ளன. கல்வெட்டுகளின் பதிப்பில் தாம் பின்பற்றிய குறியீடுகளின் விளக்கத்தையும் கொடுத்துள்ளார் இவை பெரும்பகுதி இந்தியத் தொல்லியல் துறையினரால் இன்றளவும் பின்பற்றப்படுகின்றன மக்கன்ஸியின் காலத்தே தாலுகா என்பது துக்கடி என வழங்கப்பட்ட செய்தியையும் பதிவு செய்துள்ளார் இந்நூலில் காணப்படும் பதிப்பு நெறி : முதலில் சாசன எண், இதற்கு இணையான மக்கன்ஸியின் பிரதி எண், பின் சாசனம் இருக்குமிடம் முதலானவை குறித்த ஆங்கில முன்னுரை , சில சமயம் தமிழில் முன்னுரை, அதன்பின் சாசன வாசகம் என அமைந்துள்ளது. அடிக்குறிப்புக்கள் பிரதிகளில் மேற்கொள்ளவேண்டிய திருத்தங்கள்,எப்படி வாசிக்கவேண்டும் என்ற விளக்கம் ஆகியனவற்றைக் கொண்டுள்ளன இப்பதிப்பில் அவர் ஆங்கில ஒலிபெயர்ப்போ மொழிபெயர்ப்போ செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கது

அடுத்து வருவன பல்லவர் செப்பேடுகள் முப்பது, பாண்டியர் செப்பேடுகள்பத்து ஆகியன தென்னிந்தி கோயிற் சாசனங்கள் பதிப்போடு ஒப்பிடுகின்ற பொழுது இவற்றில் நல்ல முதிர்ச்சியினைக் காண்கிறோம் பதிப்பு நெறிமுறைகளில் நல்ல வரையறை கொண்டமை தெளிவாகிறது. குறிப்பாகத் தமிழக வரலாற்று மீட்டுருவாக்கத்தில் மிகவும் கவனம் செலுத்தியமை மிகவும் முக்கியமானது. பல்லவர் செப்பேடுகள் முப்பது 1966 இல் தமிழ் வரலாற்றுக் கழகத்தாரால் பதிப்பிக்கப்பட்டது. இப்பதிப்புக் குறித்துத் தி நா.சுப்ரமண்யம் "மூல ஏடு, மசிப் படம், புகைப்படம் ஆகியவற்றிலிருந்து வாசித்துப் பெயர்த்து எழுதப்பட்டது" எனக் குறிப்பிடுகிறார். எனவே தாமே நேரில் கண்டு ஆராய்ந்து பதிப்பித்தது

என்பதை விளக்கியுள்ளார். இது ஹூல்ட்சின் கோட்பாட்டையே பின்பற்றியது என்பது தெளிவாகிறது. இப்பதிப்பின் முன்னுரை South India:Peeps intoHistory from Copper-plates எனத் தலைப்பிடப் பட்டுள் ளமையே பதிப்பின் நோக்கங்களுள் தலையாயது வரலாற்றை மீட்டுருவாக்குவது என்பதை மெய்ப்பிக் கிறது இதில் பல்லவர் தோற்றம், அரசு முறை, படை, வருவாய்-வரி விதிப்பு, எடை, அளவுகள், நீர் மேலாண்மை, ஊர்கள், கல்வி குறித்த விளக்கங்கள் அமைந்துள்ளன. பின்னர் பல்லவர் செப்பேடுகள் முப்பதின் விவரங்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. இதன் பின்னர் இம்முன்னுரையின் தமிழாக்கமும் தரப்பட்டுள்ளது. இதன் பின்னர் காலத்தாற் முற்பட்ட சிம்ம வர்மனின் பள்ளன்கோவில் செப்பேடுகள் விரிவான முன்னுரையுடன் தொடங்குகின்றன இவ்விரிவுரை தமிழ்க் கல்வெட்டுகளையும் செப்பேடுகளையும் பதிப்பிக்கும் போது கருத்தில் கொள்ளவேண்டிய அம்சங்கள் பற்றித் தெளிவாக விளக்குவது போல அமைந்துள்ளது இவ்வகையில் தி.நா.சுப்ரமண்யத்தின் கொடை மிகப் பெரியது இவர் விரித்துக் காட்டுகின்ற களங்கள் பல இன்னும் ஆய்வாளர்களால் தொடர்ந்து ஆய்வுக்கு உட்படுத்தப் படாமை தமிழக வரலாற்றிற்குப் பேரிழப்பு எனவே கூறல் வேண்டும். இனி மேலாவது வரலாற்றாய்வாளர்கள் இதில் கவனம் செலுத்துவார்களென நம்புகிறேன்

இவரின் பதிப்பு நெறி முதலில் ஒவ்வொரு செப்பேடுபற்றிய விரிவான முன்னுரை, இதில் முந்தைய பதிப்பு பற்றிய விவரம் முதலியன தருவது, அடுத்துச் சாசன பாடம் தருவது, வாசகத்தின் வரிகளை எண்ணிட்டு செப்பேட்டில் காணப்படும் எழுத்து வடிவிலேயே தருவது - குறிப்பாகக் கிரந்த எழுத்துக்களை அப்படியே அச்சு வடிவிலும் தந்துள்ளமை-அடிக் குறிப்புக்களில் எழுத்து நிலை, மாறுபாடுகள்பற்றிய விளக்கங்கள், பிற விளக்கங்கள் தருவது என்ற முறை காணப்படுகிறது. பின் வடமொழிப் பகுதியின் தமிழாக்கம் அதன்பின் தமிழ்ப் பகுதி ஆகியன அமைந்துள்ளன. இறுதியில் சொல்லட்டவணை, செப்பேடுகளின் மசிப் படங்கள் ஆகியவை தரப்பட்டுள்ளன.

பாண்டியர் செப்பேடுகள் பத்து என்ற நூல் 1967 இல் வெளிவந்தது இதிலும் பல்லவர் செப்பேடுகள் பதிப்பில் பின்பற்றப்பட்ட நெறிமுறைகளே காணப்படுகின்றன. முன்பே குறிப்பிட்டது போல இவ்விரு பதிப்புக்களிலும் தி.நா.சுப்ரமண்யம் அவர்கள் வாசகங்களின் ஆங்கில ஒலிபெயர்ப்பிலோ மொழிபெயர்ப்பிலோ ஈடுபடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஒருவேளை வெளியீட்டாளர்கள் விருப்பம் காரணமாக இருந்திருக்கலாம். தொடக்கநிலைப் பதிப்புக்களில் இவற்றிற்கு முக்கியத்துவம் அளித்திருந்தமை யை நான் ஏற்கனவே எடுத்துக் காட்டியுள்ளேன்

இந்த வரிசையில் தமிழ்க் கல்வெட்டுகளின் ஆங்கிலப் பதிப்பு ஒன்றினை மறைந்த கல்வெட்டறிஞர் கே.ஜி.கிருஷ்ணன் 2002இல் வெளிக்

கொணர்ந்துள்ளார். கி.மு. 300 முதல் கி.பி 984 வரையிலான முற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளைத் தொகுத்துப் பதிப்பித்துள்ளார் இதில் மொத்தம் 119 கல்வெட்டுகள் பதிப்பிக்கப்பட்டுள்ளன பாண்டியர் வரலாறு பற்றி கே.ஏ.நீலகண்ட ஸாஸ்திரியின் ஒரே ஆங்கிலநூல் மட்டும் உள்ள நிலையில் புதிய கண்டுபிடிப்புக்களால் கிடைக்கும் பாண்டியர்பற்றிய புதிய செய்திகளைத் தருவதே இந்நூலின் நோக்கம் எனத் தம் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார் மேலும் இவ்வுரையில் பதிப்பிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் பற்றிய விளக்கங்களும் எழுத்து மரபுபற்றிய விளக்கங்களும் உள்ளன இந்நூல் இந்திய வரலாற்றாய்வுக் குழுவின் இந்தியக் கல்வெட்டுகள் திட்டத்தின் வெளியீடாக வருதலால் அதன் அமைப்பாளர் அஜய் மித்ர ஸாஸ்திரி இந்நூல் அரச மரபினரின் கல்வெட்டுகளை ஒருசேரத் தொகுத்து வெளியிடுதல் என்ற முடிவின்படி முற்காலப் பாண்டியர் கல்வெட்டுத் தொகுப்பாக வெளியிடப்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார். எனவே நாடு முழுமைக்கும் பயன்படும் வகையிலே இந்நூல் ஆங்கிலத்தில் அமைந்துள்ளது கே.ஜி கிருஷ்ணன் பின்பற்றியுள்ள பதிப்பு நெறிகளாகக் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடலாம்.

1. கல்வெட்டு அட்டவணை - அரசன், காலம் ஆகிய குறிப்புகளுடன்
2. குறுக்க விளக்கம்
3. ஒலிபெயர்ப்புபற்றிய குறிப்பு
4. கல்வெட்டுத் தலைப்பு -அரசன் பெயருடன்
5. கல்வெட்டு உள்ள இடம்
6. ஏற்கனவே வெளியான விவரம்
7. மொழி
8 எழுத்து வகை
9. காலம்
10 கல்வெட்டு வாசகத்தின் ஆங்கில ஒலிபெயர்ப்பு
11 கல்வெட்டு வாசகத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு

இங்குப் பெரும்பாலும் முந்தைய பதிப்புக்களில் காணப்படும் மரபுகளே பின்பற்றப்பட்டுள்ளன மேலும் புதிதாகக் கல்வெட்டு வாசகத்தைத் தமிழ்ப் புணர்ச்சி விதிகட்கேற்பப் பிரித்து அச்சிட்டுள்ளமை குறிப்பிடத்தக்க ஒன்றாகும் இடையிடையே முக்கியமான கல்வெட்டுகளின் மசிப் படங்களும் இணைக்கப்பட்டுள்ளன எனினும் இதில் காணப்படும் சில குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுதல் நலமாக இருக்கும் என எண்ணுகிறேன் முதலாவதாகக் கிரந்த எழுத்துக்களை ஹூல்ட்ச், தி.நா சுப்ரமண்யம் முதலானோர் பதிப்பிற் போல அச்சிலும் அவ்வாறே தராமல் கிரந்த

எழுத்துக்களை யெல்லாம் தேவநாகரி எழுத்துக்களால் நிரப்பிப் பதிப்பித்துள்ளார் இது படிப்போரிடையே பழங்காலத்தேயே தேவநாகரி எழுத்துக்களும் தமிழில் கலந்து வழங்கி வந்தன என்ற தவறான எண்ணத்தைத் தோற்றுவிக்கும் மற்றொன்று கல்வெட்டு வாசகத்தை இக்காலத் தமிழ் உச்சரிப்பின்படி ஒலிபெயர்த்திருப்பது இது முன்பே குறிப்பிட்டது போலத் தமிழில் பழங்காலத்தேயே ஒளிப்புடை ஒலிகளும் வழக்கில் இருந்தன என்ற தவறான எண்ணத்தைத் தோற்றுவிக்கும் மூன்றாவது இவர் பதிப்பில் வரலாற்று மீட்டுருவாக்கம் என்ற நிலையில் எதுவும் எழுதப்படவில்லை என்பது கல்வெட்டுகள் பண்டைய வரலாற்றின் ஆவணங்கள் எனக் கூறிவரும் நிலையில் அது குறித்துப் பதிப்புக்களில் கூறாது விடுவது இவ்வாவணங்களைப் பயனற்றனவாக ஆக்கிவிடும்

அடுத்து நாம் காண இருப்பது ஐராவதம் மகாதேவன் அவர்களின் பண்டைய தமிழ்க் கல்வெட்டுகள் பதிப்பு 2003 இல் வெளிவந்த இப்பதிப்பில் தமிழின் தொன்மையான கல்வெட்டுகளும் பின்னர் வந்த தொடக்க நிலை வட்டெழுத்துக் கல்வெட்டுகள் வரையிலானவை அடங்கியுள்ளன தமிழ்-பிராமி எழுத்துகட்கும் அவற்றை மொழிப்படுத்துவதற்கும் முக்கியத்துவம் தந்து இப்பதிப்பு அமைந்துள்ளது கல்வெட்டு வாசகத்தை மொழிப்படுத் துவதில் பல சிக்கல்கள் உள்ள நிலையில் இப்பதிப்பில் மற்ற பதிப்புக்களில் போலன்றி முதலில் கல்வெட்டில் உள்ளவாறே எழுத்துக்களைப் பதிப்பித்துவிட்டுப் பின்னர் பதிப்பாசிரியர் தாம் கொண்டுள்ள அடிப்படையில் வாசகத்தை ஆங்கில ஒலிபெயர்ப்பில் தந்துள்ளார் இவ்வாசிப்பையே பின்பு இக்காலத் தமிழ் வடிவில் கொடுத்துள்ளார் ஒப்பீட்டிற்காக இவற்றிற்கருகில் பார்த்துக் கையால் எழுதப்பட்ட கல்வெட்டுப் படிகள் தரப்பட்டுள்ளன பின்னிணைப்பில் கல்வெட்டுப் புகைப்படங்களும் மைப்படங்களும் கூடுதலாக ஒப்பீட்டு நோக்கில் இணைக்கப்பட்டுள்ளன தமிழ் வாசகத்தைத் தொடர்ந்து அதன் ஆங்கில மொழிபெயர்ப்பு தரப்பட்டுள்ளது அடிக்குறிப்புக்கள் முன்னைய வாசிப்புக்கள் முதலான தகவல்களைத் தருகின்றன வரலாற்று மீட்டுருவாக்கமும் ஆங்கில முன்னுரைப் பகுதியில் முயலப்பட்டுள்ளது. எனினும் சமய மரபுகள், இவற்றின் வளர்ச்சி குறித்து மேலும் விளக்க இடமுள்ளது கல்வெட்டுகள் தமிழ்-பிராமி, வட்டெழுத்துக்களில் அமைந்துள்ள நிலையில் இவற்றின் வளர்ச்சிப் போக்குகள் இந்நூலில் இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது

தமிழகத் தொல்லியல் துறையினர் தமிழ்க்கல்வெட்டுகளை மாவட்ட வாரியாகவும் ஊர்வாரியாகவும் பல தொகுதிகளைப் பதிப்பித்துள்ளனர் இவற்றில் காணப்படும் பதிப்பு நெறிகள் இந்தியத் தொல்லியல்துறையினர் பின்பற்றியனவற்றை ஒட்டியே அமைந்துள்ளன சில தொகுதிகளில் மைப்படங்களும் காணப்படுகின்றன எனினும் எழுத்து மாறுபாடுகள், வளர்ச்சிகள், மொழிப் பயன்பாடு போன்ற கூறுகளுக்கு முக்கியத்துவம் தரப்படவில்லை இவற்றைப் போலவே வரலாற்று மீட்டுருவாக்கம் என்ற கூறும் பெரும்பகுதி இல்லை என்றே சொல்லவேண்டும்

இவ்வாசிரியர் பதிப்பித்த புதுச்சேரி மாநிலக் கல்வெட்டுகள் தொகுதி ஒன்று 2004இல் வெளிவந்துள்ளது இதனுடைய ஆங்கில மொழிபெயர்ப்பு 2010இல் வெளிவந்தது வரலாற்று மீட்டுருவாக்கத்தோடு சமூக செய்திகளும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன குறிப்பாக மொழி வரலாற்று நோக்கில் தமிழ்மொழியில் காலந்தோறும் ஏற்பட்ட ஒலி மற்றும் சொல் மாற்றம் போன்றவை விரிவாக எடுத்துக்காட்டி ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

புதுதில்லி இந்திய வரலாற்றுக் குழுமம் (ICHR) வெளியிட்ட விஜய நகர அரசர்களின் கல்வெட்டுகள் தொகுதி - 5 தமிழ்க் கல்வெட்டுகள் என்ற ஆங்கில நூல், பேராசிரியர்கள் எ சுப்பராயலு, சு இராசவேலு அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு 2014இல் வெளிவந்துள்ளது விஜய நகர மன்னர்களின் வரலாறு கால நிரல்படி வரிசைப்படுத்தப்பட்டுள்ளது தமிழ் மொழி ஒலி உச்சரிப்பிற்கு ஏற்றவாறு கல்வெட்டுப் பாடங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன

இதுகாறும் கூறியவற்றின் அடிப்படையில் சில முடிவுகளுக்கு வரலாம்

1. தொடக்க காலப் பதிப்புக்கள் இந்திய அல்லது உலகப் பார்வை என்ற நோக்கில் செய்திகளை ஆங்கிலத்தில் வெளிப்படுத்தின

2 கல்வெட்டு உள்ள இடங்கள், கல்வெட்டின் எழுத்து நிலை, தொடர்ச்சி, காணப்படும் வேறுபாடுகள் முதலானவை தெளிவாக விளக்கப்பட வேண்டும்

3 கல்வெட்டுப் பதிப்பில் ஈடுபடுபவர் தாமே நேரில் பார்வையிட்டுப் பதிப்பை மேற்கொள்ள வேண்டும் எழுத்துக்கள் கல்வெட்டில் உள்ளவாறே பதிப்பிக்க வேண்டும் இப்படி இல்லாத பட்சத்தில் தகவல்கள் உண்மைக்குப் புறம்பாக அமைந்து விடலாம்

4 பதிப்பின் போதே வரலாற்றுக் கூறுகளும் மீட்டுருவாக்கம் செய்யப்பட வேண்டும்

5 பதிப்புக்கள் எழுத்து வளர்ச்சியிலும் மொழி வளர்ச்சியிலும் கவனம் செலுத்த வேண்டும் கல்வெட்டில் காணப்படும் எழுத்து மாறுபாடுகள், வளர்ச்சிப் போக்குகள் முதலானவற்றை விரிவாக விளக்க வேண்டும்

6 பதிப்புக்கள் கட்டாயம் மைப்படங்களையோ புகைப்படங்களையோ அல்லது இரண்டையுமே கட்டாயம் இணைக்கவேண்டும்

7 பதிப்புக்கள் சிக்கல்களை எடுத்துக்காட்டுவதோடு இவை குறித்த விவாதங்களையும் எடுத்துரைக்க வேண்டும்

இவையெல்லாம் அமையும் போதே கல்வெட்டுகள் வரலாற்று ஆவணங்கள் என்ற கூற்று உறுதிப்படும் இவ்வடிப்படைகளில் இனி வரும் கல்வெட்டுப் பதிப்புகள் அமைய வேண்டும்

# 83. நடுநாட்டுப் பகுதியில் கிராமதெய்வச் சிற்பங்கள்

**சி. வீரராகவன், விழுப்புரம்**

தொண்டைமண்டலத்தின் தென்பகுதியில் அமைந்துள்ள நடுநாட்டுப் பகுதியில் அண்மைக்காலங்களில் கள ஆய்வுகள் மேற்கொண்டதின் விளைவாக இப்பகுதியின் சிற்றூர்களில் வயல் பகுதிகளிலும் ஏரிப் பகுதிகளிலும் தனித்த தெய்வச் சிற்பங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன. சில ஊர்களில் இவை வழிபாடற்று காணப்படினும் சில ஊர்களில் அய்யனார் கோயில்களாகவும் கொற்றவை சிற்பமாக இருப்பின் பல்வேறு பெயர்களுடைய அம்மன் கோயில்களாகவும் மக்களால் வழிபடப் பெற்று வருகின்றன.

பல்லவர்கள் தொண்டைமண்டலப் பகுதியில் தங்களது ஆதிக்கத்தை ஏற்படுத்திய பின் வைதீகத்திற்கு உட்பட்ட தெய்வ வழிபாடு படிப்படியாக வளர்ந்து ஏற்கனவே இருந்த வழிபாட்டு முறைகளும் தெய்வங்களும் வைதீகத்திற்கு உட்பட்ட தெய்வங்களாக மாற்றப் பட்டன. அவ்வகையில் நடு நாட்டுப் பகுதியில் கிடைக் கின்ற கிராம தெய்வச் சிற்பங் களான சாத்தன் (அய்யனார்) கொற்றவை, ஏழுகன்னியர் தெய்வங்கள், மூத்த தேவி (ஜேஸ்டாதேவி) ஆகிய தெய்வங்கள் குறித்து இக் கட்டுரை ஆய்வு செய்கிறது.



நடுநாட்டுப் பகுதியில் பல்லவர்களின் குடைவரை களும் பாடல் பெற்ற தலங் களும் மிகுந்திருப்பினும் பல்வேறு கிராமங்களில் கிராம தேவதைகள் என்ற பெயரில் உள்ளூர் பூசாரிகளால் வழி படுகின்ற கோயில்கள் பல காணப்படுகின்றன. இவற்றைத்

---

கோவிலூர் ஆதினத் தலைவர் தவத்திரு நாச்சியப்பன் ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் நிறுவியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 14ஆவது சொற்பொழிவு நாள் 20-07-2014

தவிர தனித்த சிற்பங்கள் பல வயல் பகுதிகளிலும் ஏரிகளை ஒட்டிய பகுதிகளிலும் காணப்படுகின்றன. இவை வழிபாடு அற்றும் உள்ளன.

இச்சிற்பங்களின் பெரும்பாலும் உள்ளூர் கலை அமைப்பைப் பெற்றும் தொடக்க கால பல்லவர் கலை அமைப்பைப் பெற்றும் விளங்குகின்றன. தனிக்கல்லாகவே இவை பெரிதும் காணப்படுவதால் இவை தனித்தெய்வங்களாகவே மக்களால் வணங்கப்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிய வருகிறது. பிற்காலத்தில் உள்ளூரில் உள்ள சிவன் கோயில்களிலோ அல்லது பிற தெய்வக் கோயில்களிலோ இவை உள்ளூர் மக்களால் கோயில் வளாகங்களில் எடுத்து வைக்கப்பட்டும் வணங்கப்பட்டு வருகின்றன.

சக்தி வழிபாடு எனப்படும் தாய்த்தெய்வ வழிபாடு உலகெங்கினும் முதலில் தோன்றிய வழிபாடு எனக் கருதப்படுகிறது. தமிழகத்திலும் வரலாற்றிற்கும் முற்பட்ட காலத்தில் தாய்த்தெய்வ வழிபாடு தோன்றியுள்ளமையை அகழாய்வுகளில் கிடைத்த பல்வேறு பெண் தெய்வ சுடுமண் உருவங்கள் மூலமாகவும் ஆதிச்ச நல்லூர் அகழாய்வில் கிடைத்த மட்கல ஓட்டுருவம், இரும்புக்காலப் பண்பாட்டில் கிடைக்கின்ற உருவங்களின் மூலமாகவும் அறிய முடிகிறது. நடுநாட்டில் திருக் கோயிலூர் பகுதியில் கீழ்வாளை ஓவியங்களில் உள்ள பெண் தெய்வ உருவமும் திருக்கோவிலூர் அருகிலுள்ள விசிறிப்பாறை எனப்படும் முந்து தாய்த்தெய்வ உருவமும் திருவண்ணாமலைப் பகுதியில் கிடைத்துள்ள மோட்டூர் தாய்த்தெய்வ உருவமும் இப்பகுதியின் தாய்த்தெய்வ வழிபாட்டிற்கு முன்னோடியாக விளங்குகின்றன.



சங்க இலக்கியங்களில் பாலைத்திணையின் கடவுளாக கொற்றவை விளங்கி வந்தார். நால்வகை நிலமும் திரிந்த நிலப்பகுதியே பாலை ஆகும். இப்பகுதியில் வாழ்ந்த வேட்டுவர் இதனை வணங்கியதாக சிலப்பதிகாரம் சுட்டும். வெற்றிவேல் போர் கொற்றவை என்றும் பழையோல் என்றும் பாய்கலைப்பாவை என்றும் வழங்கப்பட்ட கொற்றவைக்கு பலி கொடுக்கும் வழக்கமும் இருந்துள்ளதை சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. நடுநாட்டுப் பகுதியில் வழிபாட்டில் உள்ள கொற்றவை கோயில்களில் இன்றளவும் பலி இடும் வழக்கம் இருந்து வருகிறது. தொல்காப்பியம் குறிஞ்சிக் கடவுளாக

முருகனையும் கொற்றவையும் இருந்ததாகக் குறிப்பிடுகிறது. வெட்சித் திணையில் கொற்றவை நிலை ஒரு துறையாகக் காணப்படுவதால் போரில் வெற்றி பெற்ற மறவர்கள் இத்தெய்வத்திற்கு பலி இட்டு தங்களது வெற்றியைக் கொண்டாடுவர்.



## நடு நாட்டுப் பகுதியில் கொற்றவை சிற்பங்கள்

மேற்கூறியவாறு நடுநாட்டுப் பகுதியில் கொற்றவை சிற்பங்கள் பல ஏரிக்கரைகளிலும் வழித்தடங்களிலும் காணப்படுகின்றன. சில இடங்களில் தற்காலக் கோயில்கள் கட்டப்பட்டு இத்தெய்வம் வழிபடப் படுகின்றது. கீழ்கண்ட இடங்களில் கொற்றவைச் சிற்பங்கள் கிடைக்கின்றன. இவற்றுள் சில சிற்பங்களில் எழுத்துப் பொறிப்புகளும் உள்ளன. இவை பல்லவர் கால எழுத்தமைதியை உடையவையாக உள்ளன. எழுத்துப் பொறிப்புள்ள கொற்றவை சிற்பங்கள் கிடைத்த இடங்கள் 1.சீக்காடு, 2. அயன்குஞ்சரம், 3.சித்தலிங்க மடம், 4.மாதிரி மங்கலம், 5. எசாலம், 6. ஓங்கூர். எழுத்துப் பொறிப்பற்ற கொற்றவை சிற்பங்கள் கீழ்கண்ட இடங்களில் உள்ளன. 1. மாரங்கியூர், 2. ஓரத்தூர், 3. அவியனூர், 4. ஏமாப்பூர்,5. ஓலக்கூர், 6. வைரபுரம், 7.ரெட்டனை. இவற்றை விரிவாக இங்கு காண்போம்.

சீக்காடு: விழுப்புரம் மாவட்டம் உளுந்தூர் பேட்டை வட்டத்தில் சீக்காடு என்னும் ஊரின் ஏரிப்பகுதியில் கொற்றவையின் சிற்பமொன்று காணப்படுகிறது. பலகைக்கல்லில் செதுக்கப்பட்டுள்ள இச்சிற்பத்தில் கொற்றவை மஹிஷன் மேல் சமபங்க நின்ற நிலையில் எண்கரங்களுடன் காட்சியளிக்கின்றாள். கைகளில் சங்கு, சக்கரம், நீண்ட வாள், மணி, கத்தி கேடயம் ஆகியவை பெற்றும் அபயம் மற்றும் தொடை மீது இருத்திய நிலையிலும் காணப்படுகின்றாள். தலையில் கரண்ட மகுடம் காதுகளில் பத்திர குண்டலம் கழுத்திலும் மார்பிலும் அணிகலன்கள் வலத்தோளில் அம்பாரக்கூடு ஆகியவற்றைப் பெற்று கொற்றவை விளங்குகின்றாள். கொற்றவையின் இருபுறமும் இரண்டு அடியவர்கள் மண்டியிட்ட நிலையில் உள்ளனர். இவர்களுள் வலப்பக்கம் இருக்கும் அடியார் தன் தலையைத் தானே அரிந்து கொள்ளும் நிலையிலும் மற்றவர் கொற்றவையை வணங்கும்

நிலையிலும் காட்டப்பட்டுள்ளனர். கொற்றவையின் மேலிரு பக்கங்களிலும் மானும், கிளியும், சிம்மமும், சூலாயுதமும் காட்டப்பட்டுள்ளன. இப்பலகைக்கல்லில் ஸ்ரீ நந்திவர்மன் என்ற எழுத்துப் பொறிப்பு தமிழ் எழுத்தில் வெட்டப்பட்டுள்ளது. இவர் இரண்டாம் நந்திவர்ம பல்லவனாகலாம். எனவே இச்சிற்பம் பல்லவர் காலத்தைச் சார்ந்தது.

அயன்குஞ்சரம் : விழுப்புரம் மாவட்டம் உளுந்தூர் பேட்டை வட்டத்தில் எலவானாசூர் கோட்டையிலிருந்து வடமேற்கே 8 கி.மீ. தொலைவிலுள்ள ஊர் அயன்குஞ்சரம். இவ்வூரிலுள்ள குளக்கரையில் 130 செ.மீ 72 செ.மீ. அளவுடைய கற்பலகையில் கொற்றவையின் புடைப்புச் சிற்பம் காணப்படுகிறது. மகிஷன் மீது சமபங்க நின்ற நிலையில் எண்கைகளுடன் கொற்றவை விளங்குகின்றாள். மேற்கைகளிரண்டில் பிரயோக சக்கரம், சங்கு காணப்படுகிறது. முன்கரங்களில் அபயமும் ஊரு முத்திரைகளும் காணப்படுகின்றன. பிற நான்கு கைகளில் முறையே நீண்டவாள், கோடரி, கேடயம், அம்பு ஆகியவை பெற்று இத்தேவி விளங்குகின்றாள். கொற்றவையின் இட, வலப்புறங்களில் பாய்ந்து வரும் சிம்மமும் நின்ற நிலை மானும் காட்டப்பட்டுள்ளன. கொற்றவையின் காலடியின் இருபக்கங் களிலும் மீசையுடன் உள்ள அடியார்கள் உட்குடி ஆசனத்தில் மண்டியிட்டு அமர்ந்தும் அவர்களில் ஒருவர் தன் தலையைத் தானே அறுத்துக் கொள்ளும் நிலை யிலும் காணப்படுகின்றார். கொற்றவை அனைத்து அணி கலன்களும் பெற்று விளங்கு கிறாள். இப்பலகைக் கல்லின் கீழ் பகுதியில் வட்டெழுத்தில் கல்வெட்டு பொறிக்கப்பட் டுள்ளது. இக்கல்வெட்டு பரமேஸ்வர வர்மனின் 7 ஆவது ஆட்சி யாண்டில் (பொ.ஆ.676) கொற்றவையின் சிற்பத்தை திருக்குன்றத்து தீரஞ்சேந்தங் கோடன் என்பார் செய்வித் துள்ளார். இதனை இவ்வூரின் (குஞ்சுர) பெருமக்களும் இள மக்களும் வழிபாடு செய்வதற்கு வழி வகை செய்கின்றனர். இக்கல்வெட்டின் மூலம் இக் கொற்றவைச் சிற்பம் பல்லவர்



கால கட்டத்தைச் சார்ந்தது என அறிய முடிகிறது.



சித்தலிங்கமடம் : இம்மாவட்டத்தில் திருக்கோவிலூர் வட்டத்தில் சித்தலிங்க மடம் என்ற ஊரில் இராசு உடையார் காட்டில் எழுத்துப் பொறிப்புடன் கூடிய கொற்றவை சிற்பம் ஒன்று கண்டறியப்பட்டது. இச்சிற்பம் நீண்ட சதுர கற்பலகையில் நின்ற நிலையில் புடைப்புச் சிற்பமாக வெட்டப் பட்டுள்ளது. எட்டு கைகளுடைய இச்சிற்பத்தில் உள்ள கொற்றவை சங்கு, சக்கரம், வில் அம்பு, கேடயம் நீண்ட வாள் ஆகியவற்றுடன் அபயம் மற்றும் கடி முத்திரைகளுடன் காட்சி அளிக்கின்றாள். தலையில் கரண்ட மகுடமும் நெற்றியில் கண்ணி மாலையும் காதுகளில் காதணிகளும் கழுத்தில் ஆரங்களும் கொற்றவையை அழகு செய்கின்றன. இடையாடை மார்புக்கச்சு ஆகியவற்றுடன் விளங்கும் கொற்றவையின் வலப்பக்கம் மானும் இடப்பக்கம் மஹிஷனின் தலையும் காணப்படுகின்றன. இப்பகுதியில் வட்டெழுத்து கல்வெட்டு சிதைந்த நிலையில் காணப்படுகிறது. இக்கல்வெட்டில் தூம்பு ஒன்றின் பெயர் உள்ளது. புலிமல்லையன் நீர் தூம்பு என பொறிக்கப்பட்டுள்ளது. ஏரித்தூம்பு அருகே கொற்றவைக்கு சிலை எடுத்து தூம்பை இவர் அமைத்திருக்கவேண்டும். எழுத்தமைதியில் இச்சிற்பமும் பல்லவர் காலத்தைச் சார்ந்தது.

மாதிரி மங்கலம் : இம்மாவட்டத்தில் விழுப்புரத்திலிருந்து 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள மாதிரி மங்கலம் என்ற ஊரில் கொற்றவையின் புடைப்புச் சிற்பம் ஒன்று உள்ளது. பலகைக்கல்லில் கொற்றவை சிற்பம் அமைக்கப்பட்டு எட்டு கைகளுடன் நின்ற நிலையில் காணப்படுகின்றாள். தமிழ் எழுத்துக்களில் கல்வெட்டுடன் காணப்படும் இச்சிற்பத்தில் உள்ள கொற்றவை மகிஷன் தலைமீது சமபங்க நிலையில் நின்ற நிலையில் கொற்றவைக்குரிய அனைத்து கருவிகளையும் பெற்று விளங்குகிறாள். இச்சிற்பத்தில் உள்ள கல்வெட்டின் மூலம் இக்கொற்றவையை கருப்பூழ் என்ற ஊரைச் சார்ந்த இருமக்கள் தீச்சாத்தான் செய்வித்துள்ளான். இக்கல்வெட்டு எழுத்தமைதிப்படி பொ.ஆ.7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. எனவே இச்சிற்பமும் பல்லவர் காலத்தைச் சார்ந்ததாகலாம்.

எசாலம் : முதலாம் இராஜேந்திர சோழனின் குல குருவான சர்வசித பண்டிதர் கட்டுவித்த எசாலம் சிவன் கோயிலுக்கு அருகில் சாலைப்பகுதியில் கொற்றவையின் சிற்பம் ஒன்று காணப்படுகிறது. இச்சிற்பத்தில் உள்ள

கொற்றவை நின்ற நிலையில் எண்கைகளுடன் சமபங்க நிலையில் காட்சியளிக்கின்றாள். கொற்றவையின் கைகளில் சங்கு, சக்கரம், அம்பு நீண்ட வாள், கேட்யம், நீண்ட வாள் நாகம் ஆகியவை காணப்படுகிறது. தோளின் மீது கிளி ஒன்று அமர்ந்துள்ளது. அபய முத்திரையுடன் கொற்றவை காட்சி அளிக்கின்றாள். அணிகலன்கள் பெற்றுத்திகழும் கொற்றவையின் இடப்பக்கத்தில் மான் உருவம் ஒன்றும் வலப்பக்கம் வீரன் ஒருவனும் பொறிக்கப்பட்டுள்ளனர். வீரனின் கால்களுக்கு இடையில் உள்ள பகுதியில் இளமக்கள் நிறுத்த... என்ற சிதைந்த கல்வெட்டு காணப்படுகிறது. இக்கல்வெட்டின் எழுத்தமைதைப்படி கல்வெட்டும் இச்சிற்பமும் பல்லவர் காலமாகலாம்.

மேற்குறித்த கல்வெட்டுகளுடன் கூடிய கொற்றவை சிற்பங்களுடன் கல்வெட்டுப்பொறிப்பு இல்லாத கொற்றவைச் சிற்பங்கள் பல நடு நாட்டில் காணப் படுகின்றன. குறிப்பாக மயிலம் அருகில் உள்ள கள்ளக் கொளத்தூர் என்ற ஊரில் உள்ள ஏரியின் கீழ்கரையில் கரண்ட மகுடம், கன்னி மாலை காதுகளில் தட்டைக்காதணிகள் கழுத்தில் ஆரங்கள் பிற அணிகலன்கள் பெற்ற எண் தோள் கொற்றைவியின் புடைப்புச் சிற்பம் ஒன்று உள்ளது. கைகளில் தனக்கே உரித்தான ஆயுதங்களைப்பெற்றுள்ள இக்கொற்றவை யின் வலப்பகுதியில் மான் ஒன்றும் இடப்புறம் சிம்மம் ஒன்றும் காட்சிதருகிறது. கொற்றவை நின்ற நிலையில் சம பங்கத்தில் அருள் பாவிக்கின்றாள். கொற்றவையின் கீழ்ப்பகுதியில் ஆடவர் இருவர் உள்ளனர். ஒருவர் தன் தலையை தானே அரிந்து கொள் ளும் நிலையிலும் மற்றொருவர் கும்பிட்டவாறும் உள்ளனர். இச்சிற்பமும் பல்லவர் கால மாகலாம்.



இதேபோன்று திருக் கோவிலூர் செல்லும் வழியில் தெய்வானை என்ற ஊரில் பலகைக்கல்லில் துவிபங்க நிலை யில் மகிஷன் மீது நின்ற நிலையில் கொற்றவை சிற்பம் காணப் படுகிறது. எட்டு கைகளை உடைய இவள் காலடியின் இருமருங் கிலும் அடியவர் இருவர் காணப்

படுகின்றனர் இவர்களில் ஒருவர் கொற்றவையை வணங்கும் நிலை யிலும் பிறிதொருவர் தன் தலையை அரிந்து பலி கொடுப்பது போன்றும் காணப்படுகின்றனர் இச்சிற்பம் பல்லவர் காலமாகலாம்

இதே வட்டத்தில் உள்ள சிறு மதுரை என்ற ஊரிலும் பலகைக்கல்லில் கொற்றவையின் சிற்பம் ஒன்று காணப்படுகிறது இச்சிற்பத்தில் உள்ள கொற்றவை மகிஷன் மீது சமபங்க நிலையில் நின்றவாறு காட்சியளிக்கின்றாள் எட்டு கைகளையுடைய கொற்றவையின் கீழ்ப்பகுதியில் இரு அடியார்களில் ஒருவர் தன் தலையை அரிந்து பலி கொடுக்கின்றார் பிறிதொருவர் கொற்றவையை வணங்குவது போல் காட்டப்பட்டிருக்கின்றார் இச்சிற்பம் உள்ளூர் கல்தச்சரால் அமைக்கப்பட்ட சிற்பமாகலாம்

இரண்டு மான்கள் உள்ள கொற்றவையின் புடைப்புச் சிற்பம் ஒன்று உளுந்தூர் பேட்டை வட்டத்தில் ஒரத்தூர் என்ற ஊரில் கண்டறியப்பட்டது இச்சிற்பமும் ஏரிக்கரைக்கு அருகில் உள்ளது எட்டு கைகளுடைய கொற்றவையின் வலப்பக்கம் ஒரு மானும் இடப்பக்கம் பார்த்த நிலையில் ஒரு மானும் ஆக இரண்டு மான்கள் உள்ளன இரண்டு மான்கள் உள்ள சிற்பம் இப்பகுதியில் மிக அரிதானதாகும்

நடுநாட்டுப் பகுதியில் களமருதூர், அவியனூர்,வடகுச்சிபாளையம் மேல மங்கலம், ஆளி, தென் மங்கலம், கொண்டங்கி, தளவானூர், கள்ளக்கொளத்தூர்,சிங்கவரம்,வட நெற்குணம் அகிய இடங்களில் உள்ள கொற்றவைகளும் கொற்றவைக்குரிய அனைத்து அம்சங்களையும் பெற்ற பல்லவர் கால கொற்றவையுருவங்களாகும்

## நடு நாட்டுப் பகுதியில் மூத்தோள் சிற்பங்கள்

மூதேவி என்றும் மூத்த தேவி என்றும் மூத்தோள் என்றும் வழங்கப்படும் ஜேஸ்டா தேவி தமிழ்நாட்டின் வடபகுதியான தொண்டைமண்டலத்திலும் நடுநாட்டுப் பகுதியிலும் உள்ளூர் மக்களால் வழிபட்ட பெண் தெய்வங்களில் முதன்மையானவராகக் கருதப்படுகின்றார் இன்று வழிபாடு அற்ற இத்தெய்வம் பல்லவர் காலத்திற்கு முன்பாகவே தமிழர்களின் தாய்த்தெய்வ கடவுளாக இருந்திருத்தல் வேண்டும் பின்னர் பல்லவர்களும் பாண்டியர்களும் இத்தெய்வத்தை சைவ சமயக் கடவுளர்களில் ஒருவராகக் கருதி கோயில்களில் இடம்பெறச் செய்து வழிபடத்தொடங்கினர் ஆனால் இத்தெய்வ வழிபாடு 10 ஆம் நூற்றாண்டிற்குப்பின் ` வழிபாட்டிலிருந்து ஒதுக்கப்பட்ட தெய்வமானது மூத்த தேவி மூதேவி ஆகி இன்று பல்வேறு இடங்களில் கேட்பாரற்ற தெய்வமாக விளங்கி வருகிறது இத்தெய்வ வழிபாட்டை குறித்து ஆசிரிய நிகண்டு, சூளாமணி நிகண்டு ஆகியவை சுட்டுகின்றன மூத்ததேவி வளமைக்கடவுளாக கருதப்பட்டாள் வளமையையும் நல்லதையும் செய்கின்ற தெய்வமாகிய மூத்தவள் துன்பத்தைப் போக்கும் கடவுளாகவும் தூய்மையையும் ஊரில் எவ்வித நோயும் வராமல் தடுக்கின்ற தெய்வமாகவும் அக்காலத்தில் கருதப்பட்டாள்



இவளது வாகனம் கழுதை. இவளுக்கு மாந்தன், மாந்தி என்ற மகனும் மகளும் இருப்பர். மூத்ததேவி பெரும்பாலும் அமர்ந்த நிலையில் காணப்படுவாள். சில சிற்பங்களில் அமர்ந்தும் அமராத நிலை போன்று தொங்கிய கால்களுடன் காட்சி யளிப்பாள். மூத்த தேவியின் ஒருபுறம் காக்கையும் (காக்கைக்கொடி) மறுபுறம் துடைப்பமும் காணப்படும் . சில சிற்பங்களில் மாந்தன், மாந்தி காணப்படாது. இவர்கள் இல்லாத சிற்பங்கள் காலத்தால் முற் பட்டது என அறிஞர் கருதுவர். மாந்தன் நந்தி முகம் கொண்டு தடியுடன் விளங்குவார். சில சிற்பங் களில் அமர்ந்த நிலையிலும் சில சிற்பங்களில் நின்ற நிலையிலும் இவர் காணப் படுவார். பிறிதொரு பக்க முள்ள மாந்தி தனது கையில் தாமரை மொட்டைப் பிடித்திருப்பார். இவளும் நின்ற நிலை அல்லது அமர்ந்த நிலையில் காட்சியளிப்பார். பொதுவாக மூதேவியின் வலப் புறம் தூய்மைப் பணியைச் செய்யும் துடைப்பம் காட்டப் பட்டிருக்கும்.

நடுநாட்டுப்பகுதியில் மூத்த தேவி மிகுந்த அளவில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இவற்றுள் குறிப்பாக எழுத் துடன் உள்ள மூத்த தேவி சிற்பமொன்று திருக்கோவிலூர் வட்டம் ஜம்பை என்ற ஊரில் தனியார் நிலத்தில் காணப் படுகிறது. மூத்த தேவி கால்களை அகல விரித்து அமர்ந்த நிலையில் புடைப்பாக காணப் படுகின்றாள். தலையில் கிரீட மகுடமும் காதுகளில் பத்திர குண்டலங்களும் கைகள் கழுத்துப் பகுதிகளில் அணி கலன்களும் பெற்றுள்ள இத் தெய்வத்தின் மார்புப் பகுதியில் கச்சை காணப்படவில்லை. மூத்த தேவியின் வலப்பக்கம் அவரது மைந்தன் மாந்தனும் இடப்பக்கம் மகள் மாந்தியும் காணப்படுகின்றனர். மாந்தனின் தலைக்கு மேல் கொடியில் காக்கையின் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. மாந்தியின் தலைக்கு மேல் பகுதியில் துடைப்பம் காணப்படுகிறது. இச்சிற்பத்தில் உள்ள கல்வெட்டில், “இச்சிற்பத்தை செய்வித்தவன் ஆச்ச நேயன்” என்று பொறிக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகலாம்.

நடுநாட்டுப்பகுதியில் பின்வரும் ஊர்களில் மூத்த தேவிச் சிற்பங்கள் உள்ளன. கூடலூர், பாண்டூர், கிராமம், அகரம் சித்தாமூர், பேரங்கியூர், மேலமங்கலம், தென்மங்கலம், கீழ்பெரும்பாக்கம், திருவெண்ணெய் நல்லூர், சித்தலிங்கமடம், டிபுதுப்பாளையம், திம்மச்சூர், முன்னூர், ஓங்கூர், சோமாண்டார்குடி, கொத்தமங்கலம், விக்கிரவாண்டி, வைரபுரம், அவியனூர், பிடாகம், திருவாமாத்தூர், தென்சிறுவளூர், கீழ்வீதி, மேல் ஒழுக்கூர், பனமலை ஆகிய இடங்களில் மூத்த தேவி சிற்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவையாவும் மேற்குறித்த சிற்ப அமைதியைப் பெற்று விளங்குகின்றன.

## நடுநாட்டுப்பகுதியில் அய்யனார் சிற்பங்கள்

சாத்தன் வழிபாடு தமிழகத்தின் தொன்மையான வழிபாடுகளில் ஒன்றாகும். நடுநாட்டுப் பகுதியில் பெரும்பாலான கிராமப் பகுதிகளில் அய்யனார் கோயில்கள் உள்ளன. சாத்தனுடைய சிற்பங்களும் காணப்படுகின்றன. சாத்து என்ற சொல்லிலிருந்து சாத்தன் என்ற பெயர் வந்ததாகக் கருதுவர். சாத்து என்பது வாணிகக் கூட்டத்தைக் குறிக்கும் சொல்லாகும். சாத்தன் பல்வேறு பெயர்களில் வழங்கப்படுகின்றார். காரி, புறத்தவன், கடல் வள்ளன், பூரணை கேள்வன், யோகி, புட்கலை மணாளன், மாசாத்தன், செண்டாயுதன், வெள்ளையானையூர்தி, ஆரியபுருஷன், அறத்தைக் காப்போன், அரிகர குமாரன், அய்யன், அய்யப்பன் என பல்வேறு பெயர்களில் சாத்தன் வழங்கப்படுகின்றார். அய்யப்பன் என்ற பெயர் பிற்காலத்தில் வழக்கத்திற்கு வந்துவிட்டது.



சாத்தன் அல்லது அய்யனார் படிம அமைப்பு பற்றி ஸ்ரீபாகவதம் குறிப்பிடுகிறது. சாத்தானின் உருவம் தொடக்க காலத்தில் சாதாரண மனித அமைப்பாக இருந்தது. இருகைகள், கருத்த மேனி, வலக்கரத்தில் செண்டும் இடக்கரத்தில் பழங்களும் கொண்டு இவர் விளங்குவார். இவருக்கு மதனா மற்றும் வர்ணனி என்னும் இரு மனைவியர். இவரது வலப்புறத்தில் தமனகா என்னும் அழகற்ற உருவம் இருத்தல் வேண்டும். பீடத்தின் மீது அமர்ந்து தனது இடக்காலை தொங்க விட்டு வலக்காலை குத்திட்ட நிலையில் இவர் வைத்திருப்பார். வலக்காலின் மீது வலக்கை முட்டி படுமாறு இடக்கையில் சாட்டையைப் பிடித்தவாறும் இவர் காட்சியளிப்பார். சாத்தனின் வாகனம் யானை. கொடியில் சில இடங்களில் சேவல் இருக்கும். பிற்கால சாத்தன் சிற்பங்களில் சாத்தனுக்கு நான்கு கைகள் காட்டப்பட்டிருக்கின்றன. இரு கைகளுடைய சாத்தன் சிற்பங்களே பழமையானதாகும் . விழுப்புரம் பகுதியில் ஆலப்பாக்கம் என்ற இடத்தில் உள்ள சாத்தன் சிற்பம் இரு கைகளையுடைய சிற்பமாகும். இச்சிற்பம் அமர்ந்த நிலையில் வலக்காலைக் குத்திட்டு இடக்காலை பீடத்தின் கீழ் தொங்கவிட்டவாறு வலக்கரத்தின் முட்டி வலகால் முட்டி மீது படும் வண்ணம் கரத்தை நீட்டி வைத்து இடக்கரத்தைத் தொடை மீது ஊரு முத்திரையாக வைத்து உள்ளது.



சாத்தனின் வலப் பக்கத்தில் குதிரை மீது அமர்ந்து செல்லும் வீரன் ஒருவன் காணப்படுகின்றான். இடப்பக்கம் பெண் ஒருவள் கலசத்தைத் தாங்கி நிற்கின்றாள். வலக்கரத்தின் கீழ் குரங்கு தன் குட்டிகளுடன் விளையாடுகிறது. நாய் ஒன்றும் சேவலும் இச்சிற்பத்தில் காட்டப்பட்டுள்ளன. அழகற்ற ஆண் உருவம் ஒன்று நின்ற நிலையில் இச்சிற்பத்தில் உள்ளது. இதே ஊரில்

மற்றொரு சாத்தன் சிற்பமும் உள்ளது. இச்சிற்பத்தில் இரு பெண்கள் நின்ற நிலையில் காட்சி அளிக்கின்றனர்.



நடுநாட்டில் அய்யனார் எனப்படும் சாத்தன் சிற்பங்கள் கீழ்கண்ட ஊர்களில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் சில சிற்பங்களில் எழுத்துப் பொறிப்பும் உள்ளன. எழுத்துப்பொறிப்புள்ள சிற்பங்கள் தென்மங்கலம், செண்டியம்பாக்கம் ஆகிய ஊர்களிலும் எழுத்துப் பொறிப்பு இல்லாதவை சித்தேரிக்கரை, நெற்குணம், பிடாகம், ஒரு கோடி, ச.பாசார், பாண்டூர், அரசூர், கொண் டங்கி, நெடிமோழியனூர், எசாலம், கரும்பூர், ஆல கிராமம், கொத்தமங்கலம் அகிய இடங்களில் உள்ளன. இவற் றுள் சிறப்பான சில சாத்தன் சிற்பங்களைப் பார்ப்போம்.

தென்மங்கலம் அய்யனார் சிற்பத்தில், "தேர்க்காலர் சருக் கினார் செய்வித்தது" என்ற கல்வெட்டுப் பொறிப்பு உள்ளது. உயர்ந்த ஆசனத்தில் திண்டின் மீது சாய்ந்தவாறு அமர்ந்த நிலையில் அய்யனார் காணப்படுகின்றார். தலைமுடி ஜடாமகுடத்துடன் சுருள் சுருளாக காணப்படுகிறது. இவரது காலடியில் சாந்த நிலை யில் பணிமகள் ஒருவள் காட்சியளிக்கின்றாள். நாய் ஒன்றும் அருகில் அமர்ந்துள்ளது.

விழுப்புரம் பகுதியில் உள்ள அரசூரில் உள்ள அய்யனார் சிற்பம் திண்டின் மீது அமர்ந்த நிலையில் இடையில் குறுவாள், யோகபட்ட அமைப்பு, அணிகலன்கள் பெற்று விளங்குகின்றார். இச்சிற்பத்தில் நாய், யானை பணிப்பெண், குடையைப் பிடித்த நிலையில் பணியாள், குதிரை ஆகியவையும் காணப்படுகின்றன.

பாண்டூர் என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்ட அய்யனார் சிற்பத்தில் குதிரைத் தலையும் குத்திட்டு அமர்ந்த நிலையில் உள்ள நாயும்

காட்டப்பட்டிருக்கின்றனர் பணிமகள் ஒருவர் தாமரை மலரை தாங்கிய நிலையில் உள்ளாள்

சங்கராபுரம் வட்டத்தில் உள்ள சாப் பாசார் என்னும் இடத்திலுள்ள அய்யனார் சிற்பம் உட்குடி ஆசனத்தில் அமர்ந்த யோக நிலையில் காட்சியளிக்கின்றார் வலது கை குத்திட்ட வலது காலின் முட்டியின் மீது வைக்கப்பட்டுள்ளது இடது கையில் ஒரு குடுவையை இவர் பற்றியுள்ளார் தலையைச் சாய்த்து அழகான நிலையில் சடாபாரத்துடன் இச்சிற்பம் காணப்படுகிறது இது பல்லவர் கால சிற்பமாகலாம்

திண்டிவனம் வட்டத்தில் மைலம் ஊருக்கு அருகில் உள்ள ஊர் கள்ளக்கொத்தூர் இவ்வூரின் ஏரிக்கரைப்பகுதியில் அய்யனார் புடைப்புச் சிற்பம் கண்டுபிடிக்கப்பட்டது. அமர்ந்த நிலையில் உட்குடி ஆசனத்தில் உள்ள அய்யனாரின் இருமருங்கிலும் ஆண் ஒருவரும் பெண் ஒருவரும் நிற்கின்றனர் பெண் நளினமாகத் தலையைச் சாய்த்த நிலையில் காட்சியளிக்கின்றார் அய்யனாரின் தலையில் நேர்த்தியான தலைப்பாகை அமைப்பு காணப்படுகிறது இது பல்லவர் கால சிற்பமாகலாம்

திருக்கோயிலூர் வட்டத்தில் நெற்குன்றத்தில் கண்டுபிடிக்கப்பட்ட அய்யனார் சிற்பம் வலது காலை தொங்க விட்ட நிலையிலும் இடது காலை குத்திட்ட நிலையிலும் காட்சிதருகின்றது இடது பக்கத்தில் குதிரை ஒன்று உள்ளது இச்சிற்பம் சோழர் கால சிற்பக்கலை அமைதியில் காணப்படுகிறது

மீசையுடன் உள்ள அய்யனார் சிற்பங்கள் விழுப்புரம் அருகில் சித்தேரிக்கரை, நெற்குணம் மற்றும் ஒருகோடி ஆகிய இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டன அய்யனாரின் முகத்தில் மீசை உள்ளது புதுமையாக உள்ளது ஜடாபாரம் கொண்ட இச்சிற்பங்களில் அய்யனார் உட்குடி ஆசனத்தில் அமர்ந்துள்ளார் சித்தேரிக்கரை அய்யனார் சிற்பத்தில் குதிரையும் பெண் ஒருவரும் காட்டப்பட்டுள்ளனர் நெற்குண அய்யனாரில் நாய் உருவம் இடம் பெற்றுள்ளது ஒருகோடியில் உள்ள அய்யனார் சிற்பத்தில் அய்யனாரின் வலக்கை அருகில் குதிரை ஒன்றும் இடக்கை அருகே நின்ற நிலையில் பெண் ஒருவரும் காட்சி தருகின்றனர் அய்யனார் பாதத்தின் கீழ் பகுதியில் மட்கலன் இடப்பகுதியில் நாய் உருவம் காணப்படுகின்றது

தமிழகத்தின் சிற்பக் கலை வரலாற்றில் நடுநாட்டில் உள்ள மேற்குறித்த தெய்வங்களுக்கான சிற்பங்கள் பெரும்பாலும் ஒவ்வொரு ஊரிலும் தனித்த சிற்பங்களாகவே காட்சியளிக்கின்றன சில இடங்களில் இத்தெய்வங்களுக்குக் கோயில்கள் கட்டப்பட்டு பூஜைகள் செய்யப்பட்டு வருகின்றன. பெரும்பாலும் இத்தெய்வங்கள் நீர் நிலைப்பகுதியான ஏரிக்கரைப் பகுதியிலேயே காணப்படுகின்றன இத்தெய்வங்கள் யாவும்

பல்லவர் காலத்திற்கு முன்பிருந்தே கிராம தெய்வங்களாக ஊர் மக்களால் வழிபடப்பட்டு வந்திருக்கின்றன இவற்றுள் கொற்றவை துர்க்கையாக மாறி சிவன் கோயில்களின் வடக்குப் பகுதியில் உள்ள மாடத்தில் வைத்து வழிபடப்படுகின்றாள் சாத்தன் கோயில் பல்வேறு இடங்களில் இன்று அய்யப்பன் கோயிலாக உருமாற்றம் பெற்று யானை, குதிரை மற்றும் சிறிய அளவிலான தெய்வ உருவங்கள் மண்ணால் செய்யப்பட்டு வழிபடப்பட்டு வருகின்றன பல்லவர் காலத்தில் புகழ் பெற்று விளங்கிய மூத்த தேவி 10-11 ஆம் நூற்றாண்டிற்குப் பின் வழிபாடற்ற தெய்வமாக மாறி மறைந்தது பழமை வாய்ந்த கிராம தெய்வங்களின் வழிபாடு வைதீகத்திற்கு உட்பட்ட தெய்வ வழிபாட்டின் தாக்கத்தால் தனது சிறப்பை இன்று இழந்திருப்பினும் பல்லவர் காலத்தில் உள்ளூர் மக்களால் பெரிதும் போற்றப்பட்டு வழிபாடு மிக்க தெய்வங்களாக விளங்கியிருந்தமையை அறிய முடிகிறது

# 84. செய்தித் திரட்டு – புதிய கண்டுபிடிப்புகள்

## 84:1 கூகையூர் நடுகற்கள்

விழுப்புரம் மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டம் சின்னசேலம் அருகே உள்ள கூகையூரில் பஞ்சாட்சர நாதர் சிவாலயத்திற்கு அருகே உள்ள முட்புதரில் நடுகற்கள் இரண்டு உள்ளன. இச்சிற்பங்களில் காணப்படும் ஆண் சிற்பங்கள் இரண்டும் ஒரு கையில் தன் தலையை தானே அரிந்து கொள்ளும் வகையிலும் பிறிதொரு கையில் வாளை மண்ணில் தொடும் நிலையில் தொங்கவிட்டவாறு காட்டப்பட்டுள்ளன. இவை தூங்கு தலைச் சிற்பங்களாகும். தன்னைத்தானே தலையை அரிந்து வேண்டுதலுக்காக இறைவனுக்கு அர்ப்பணிக்கும் வீரர்களின் சிற்பங்களாகும்

**வெ. பாண்டுரங்கன், கல்பூண்டி**

## 84 : 2 பிச்சாங்கரை இடிந்த சிவன் கோயில்

தேனி மாவட்டம், போடிநாயக்கனூர் வட்டம் மேற்கு மலைப்பகுதியில் போடியிலிருந்து குரங்கணி செல்லும் மலைப்பாதையில் பிச்சாங்கரை என்ற பகுதியில் சிதிலமடைந்த சிவன் கோயில்(கீழ்கைலாயநாதர் ஆலயம்) ஒன்று உள்ளது. இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றைக் கொண்டு உள்ளது. அதிட்டானப் பகுதி கருங்கல்லிலும் சுவர்பகுதி செங்கல்லிலும் கட்டப்பட்டுள்ளது. கருவறையின் வடக்கு அதிட்டானப் பகுதியில் கல்வெட்டு சுண்ணம் பூசி காணப்படுகிறது. முற்காலப் பாண்டியர் கால கலை அமைப்பை இக்கோயில் கொண்டுள்ளது.

**பா. ஜோதீஸ்வரன், சென்னை**

## 84 : 3 திருப்பனந்தாள் நவகண்ட சிற்பங்கள்



தஞ்சாவூர் மாவட்டம், திருவிடைமருதூர் வட்டம், திருப்பனந்தாளில் வீரியம்மன் கோயில் வளாகத்தில் மூன்று தூங்குதலைச் சிற்பங்கள் உள்ளன. ஆண் வீரர்கள் மூவரும் தங்களுடைய கழுத்தை வலக்கையில் உள்ள வாளால் தானே அரிந்து கொள்ளும் நிலையில் உள்ளனர். இருவரின் கச்சையில் சிறு குறுவாள் காணப் படுகிறது. இவர்கள் காதணிகள், கைகளிலும் காப்புகள் போன்றவற்றை அணிந்துள்ளனர். முதலாவது சிற்பத்தில் உள்ள வீரன் தனது இடக்கையை தரையை நோக்கியும் பிற இரண்டு வீரர்கள் தங்களது இடக்கைகளை மேலே

உயர்த்தியும் காட்டியுள்ளனர். இறந்த பின் மேலுலகம் செல்வதை காட்டுவதாக இது அமைகின்றது.

அ. ஜெயபாரதி
இரா. சந்தனம், தஞ்சாவூர்

84 : 4 ஹயகிரிவர்



திருவள்ளூர் மாவட்டம் பொன்னேரி வட்டத்தைச் சேர்ந்த சோழவரத்தில் புதிய எருமை வெட்டிபாளையம் செல்லும் வழியில் வயல்வெளி ஓரமாக விஜய நகர காலத்து சிற்ப அமைதியில் ஹயகிரிவர் சிற்பம் கண்டுபிடிக்கப் பட்டது. இம்மூர்த்தியானவர் உயர்ந்த பீடத்தில் சுகாசனத்தில் வலது காலை ஊன்றி இடது காலை மடித்தும்; அமர்ந்த நிலையில் காணப்படுகிறார். மடித்துள்ள காலின் மீது லஷ்மி தேவியனை அமர்த்தியாவறு காட்சியளிக்கிறார். தலையில் கிரிட மகுடமும் காதுகளில் மகரகுண்டலமும், காதின் மேல் கர்ண புஷ்பத்துடன் காணப் படுகின்றார். கழுத்தில் அணிகலான் களாக மாலை சரப்பளி மற்றும் முப்புரிநூல் பிரம்ம முடிச்குடன் காணப்படுகிறது. வலது தோளில் தோல்வாலையுடனும் கைகளில் சுடகம் அணிந்தும்; நான்கு கரங்களுடன் காட்சியளிக்கின்றார். மேல் கரங்கள் முறையே வலது மற்றும் இடது கரங்களில் கத்திரி ஹஸ்த்தத்தில் சங்கு மற்றும் சக்கரம் எந்தியும் காணப்படுகின்றன. கீழ்கரங்கள் முறையே வலது கரமானது அபய முத்திலையிலும், இடது கரமானது தேவியின் இடுப்பினை அணைத்த வாறும் காணப்படுகிறது. தேவியின் வலது கரம் காட்டப்படவில்லை. இடது கரம் கடக ஹஸ்த்தத்தில் தாமரை மலரினை ஏந்தியும் கரண்ட மகுடம் தரித்தும் தேவிக்குரிய அனைத்து ஆபரணங்கள் அணிந்தும் காட்சியளிக் கிறாள். தேவியின் முகம் மலர்ந்த தாமரையினைப் போல சிறு புன்னகையுடன் காட்சியளிக்கிறாள். ஹயகிரிவரின் முகம் வராக முகத்தைக் கொண்டுள்ளது இச்சிற்பத்தின் நாசி மற்றும் வாய் பகுதி வரை உடைந்த நிலையில் காணப்படுகிறது. இச்சிற்பத்தின் காலம் பொ.ஆ.14,15ஆம் நூற்றாண்டாகக் கருதப்பருகிறது.

பி. சத்யா, டி. காமாட்சி, சென்னை

## 84 : 5 கொங்குப்பகுதி நடுகற்கள்

இச்சிப்பட்டி நடுகல் : கோவை, சோமனூருக்கு அருகில் இச்சிப்பட்டி சிற்றூரில் சாலையோரம் வீரன் ஒருவனுக்கு எடுக்கப்பட்ட நடுகல் காணப்படுகிறது. சாலையோரத்தில் உள்ள ஒரு மரத்தடியில் இருக்கும் இந்த நடுகல் ஒரு புடைப்புச் சிற்பமாகும். கொடி வேலைப்பாடுடன் திருவாசி இச்சிற்பத்தில் காணப்படுகிறது. சிற்பத்திலுள்ள வீரனின் தலையின் வலப்புறத்தில் கொண்டை காணப்படுகிறது. வலக்கையில் நீண்ட வாளும், இடக்கையில் குறுவாள் ஏந்தியும் செவிகள், கழுத்து, முன்கைகள், தோள்கள் ஆகியவற்றில் அணிகலன்களும் காணப்படுகின்றன. முழங்கால்வரை ஆடை உள்ளது. இடைப்பகுதியில் ஆடைக்கச்சுகள் பெரிதாகக் காணப் படுகின்றன. இச்சிற்பம் நாயக்கர் கால அமைப்புடையதாகும்.



வடசித்தூர் நடுகல் : கோவை, கிணத்துக்கடவு - நெகமம் ஊர்களுக்கு அருகே அமைந்துள்ள வடசித்தூரின் எல்லையில் சோழியாத்தா கோவி லுக்குப் போகும் வழியில் கோணக்காடு என்னும் இடத்தில். வீரன் பக்கத்திற்கு ஒருவராக இரு பெண்களுடன் இருக்கும் சிற்பத்தொகுதி நடுகல் ஒன்று உள்ளது. வீரன் பெரிய மீசையுடன் ஒரு கையில் ஊன்றிய வாளும் மற்றொன்றில் கேடயம் போன்ற ஆயுதம் ஏந்திய நிலையில் காணப்படுகிறான். வீரனின் இடைக்கச்சில் குறு வாள் உள்ளது. இரு பெண்களும் கைகளைக் கூப்பி வணங்கும் நிலை யில் இருக்கிறார்கள். மூவருக்கும் தலையில் கொண்டை உள்ளது. வீரன் இடுப்பு ஆடையுடனும், பெண்கள் கணுக்கால் வரை ஆடையுடனும் காணப்படு கின்றனர். மூவருக்குமே, செவிகள், கழுத்து, கைகள் ஆகிய உறுப்பு களில் அணிகள் உள்ளன. பெண் களின் இரு புறமும் இரண்டு குடுவைகள் செதுக்கப்பட்டுள்ளன. இச்சிற்பம் பொ.ஆ. 17-18ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்



கோதவாடி புலிகுத்திக்கல் : கோவை மாவட்டம் கிணத்துக்கடவு வட்டத்தில் உள்ள கோதவாடி, மாலக்கோயிலில் (ஆல் கொண்ட திருமால் கோயில்). இக்கோயிலின் வெளிப்புற வளாகத்தில் புலிக்குத்திக்கல் ஒன்றில் வீரன் ஒருவன் புலியின் வாய்ப்பகுதியில் தன் நீண்ட வாளைப் பாய்ச்சிக் கொண்டிருப்பதுபோல வடிக்கப்பட்ட புடைப்புச் சிற்பம். புலி தன் பின்னங்கால்களைத் தரையில் ஊன்றியவாறு முன்னங்கால்களால் வீரனைத் தாக்குவது போன்ற தோற்றம். பொ.ஆ.16-17-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. இதனை. ஊரார் நரி கடிச்ச இராமய்ய கவுண்டர் கல் என அழைக்கின்றனர்.



கிணத்துக்கடவு – பெரியகளந்தை கல்திட்டை : கோவை மாவட்டம் கிணத்துக் கடவு வட்டத்தில், பெரிய களந்தை ஊரிலுள்ள ஆதீசுவரர் கோயிலுக்கு அண்மையில் கல்திட்டை ஒன்று காணப்படு கிறது. இக்கல்திட்டையில், இடு துளை ஒன்றும் உள்ளது., கல்திட்டையின் உட்புறப் பகுதியில் ஒரு பலகைகல்லில் புலியும் பிறிதொன்றில் குதிரையுடன் இருக்கும் வீரன் சிற்பமும் காட்சி அளிக்கிறது. வீரனும் புலியும் தனித்தனியே இக்கல்திட்டையில் காட்டப் பட்டுள்ளனர்.

பெருமாநல்லூர் நடுகல் : கோவை-ஈரோடு நெடுஞ்சாலையில் உள்ள பெருமாநல்லூருக்கருகில் பொங்குபாளையம் என்னும் சிற்றூர் அமைந்துள்ளது. இங்கு இடிந்த நிலையில் சதுர வடிவிலான அமைப்புடன் ஒரு சிறு கோயில் காணப்படு கிறது. நான்கு மூலைகளிலும் கல் பாறைத்தூண்கள். கூரைப் பகுதியில் மூடுகற்கள். கற் களைக்கொண்டு அமைக் கப்பட்ட ஒரு சிறிய நுழை வாயில். உள்ளே, பாறைக்கல் ஒன்றில் புடைப்புச் சிற்பமாக நடுகல் காணப்படுகிறது. ஒரு வீரனும் பெண்ணும் காணப்படுகின்றனர். வீரன் தன் வலது கையில் வாள் ஒன்றினை உயர்த்திப் பிடித்தவாறு இடது கை அவனது தொடைப்பகுதியில்





வைக்கப்பட்டுள்ளது. தலையில் நேர்முகமாக அமைந்த கொண்டை, மார்பில் அணிகளும், இடையில் ஆடைக்கச்சுகளும் உள்ளன. பெண்ணின் சிற்பத்தில் வலப்புறமாக அமைந்த கொண்டையும், இடைப் பகுதியில் ஆடை அமைப்பும் காணப்படு கின்றன. ஊரார் இதை குப்பாத்தம்மன் கோயில் எனப்பெயரிட்டு வணங்குகிறார்கள்.

**து. சுந்தரம், கோவை**

## 84 : 6 தேவிகாபுரம் நடுகற்கள்

திருவண்ணாமலை மாவட்டம் ஆரணி வட்டம் தேவிகாபுரத்தில் மூக்கநாச்சியார் கோயில் அருகில் வீரனின் ஒரு கையில் கேடயமும் மறுகையில் வாளும் அருகில் ஒருமாடும் உள்ள சிற்பம் காணப்படுகிறது. காலம் பொ.ஆ.12 ஆம் நூற்றாண்டு.

இவ்வூரில் ஊர்க்காளியம்மன் கோயில் அருகில் குதிரை மீதர்ந்த நிலையில் தலை சாய்ந்த வண்ணம் மற்றொரு சிற்பம் உள்ளது. கையில் கத்தியும் குதிரைக்கு முன்பும் பின்பும் பெண்கள் உருவங்கள் உள்ளன. காலம் பொ.ஆ.12-13 ஆம் நூற்றாண்டு.

இவ்வூரின் தேவரடியார் குளக்கரையில் தலைப்பலிக்கல் ஒன்று உள்ளது. அமர்ந்த நிலையில் தலையை வாளால் அறுத்த நிலையில் இச்சிற்பம் காணப்படுகிறது. இது பொ.ஆ.15 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

தேவிகாபுரம் ஊருக்கு அருகிலுள்ள வண்ணாங்குட்டை என்னும் பகுதியில் வீரன் அம்பெய்யும் நிலையில் தலைக்கொண்டை இடைக்கச்சை உறை வாளுடன் உள்ள சிற்பம் உள்ளது. இதன் காலம் பொ.ஆ.14-15 ஆம் நூற்றண்டாகலாம்.

**தச்சாம்பாடி நடுகல் :** திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டம் தச்சாம்பாடி கிராமத்தில் இடது கையில் கேடயமும் வலது கையில் வாளும் வைத்துள்ள வீரனின் நடுகல் ஒன்று உள்ளது. கையில் கேடயம் மற்றும் உருவ அமைதி கொண்டு இச்சிற்பம் பொ.ஆ. 9ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பல்லவர் காலமாகக் கருதலாம்.

**ச. பாலமுருகன், தேவிகாபுரம்**

## 84 : 7 நாகபட்டினம் பகுதி சிற்பங்கள்



நாகபட்டினம் மாவட்டம், நாகபட்டினம் வட்டத்தில் தஞ்சாவூர்-நாகபட்டினம் தேசிய நெடுஞ்சாலையில் உள்ள அழியூர் மற்றும் சிக்கலில் இருந்து தெற்கே 4 கி.மீ தெலைவில் உள்ள ஆவராணி ஆகிய இடங்களில் அரிதான சோழர் காலச் சிற்பங்கள் காணப்படுகின்றன. ஆழியூர் கங்காலேசுவரர் கோயிலின் கிழக்கு திருச்சுற்றில் அகோரபைரவர் சிற்பம் சமபாத ஸ்தானத்தில் நின்ற நிலையில் பத்மபீடத்தில் நாய் வாகனத்துடன் உள்ளது. உக்ரமான முகம், மூன்று கண்கள், நான்கு கைகளுடன் செந்நிற திருமேனி உடையவராய், திகம்பரராய், ஜடா மகுடத்துடன் தலைமுடியில் மகர தீச்சுடர் முடி அலங்காரத் துடன் பைரவர் சிற்பம் அமைந்துள்ளது. வலது, இடது மேற்கரங்களில் முறையே உடுக்கை, பாசமும் வலது, இடது கீழ்கரங்களில் முறையே சூலம் மற்றும் கபாலமும் காட்டப்பட்டுள்ளன. காதுகளில் முறையே மகர குண்டலம், பத்ர குண்டலம் மற்றும் மார்பில் முப்புரிநூல் ஆகியவற்றைக் கொண்டுள்ளது.



ஆவராணியில் ஆபரணதாரி பெருமாள் கோயிலுக்கு எதிரே கிழக்கு புறத்தில் இடிந்த நிலையிலுள்ள சிவன் கோயிலில் காளி சிற்பம் ஒன்று உள்ளது. பத்ம பீடத்தில் இடது காலை மடங்கியும் வலது காலை தொங்கவிட்டும் அமர்ந்த நிலையில் தலையில் தீச்சுடருடனும் நான்கு கைகளுடனும் காளி அமைக்கப்பட்டுள்ளது. வல மேற்கரம் உருமாறிய நிலையிலும், இடது மேற்கரத்தில் சக்கரமும், இடது கீழ்க் கரம் முத்திரையிலும் உள்ளது. வலது கீழ்க் கரம் உடைந்துள்ளது. இச்சிற்பங்கள் பொ.ஆ.12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகலாம்.

**பா. ஜெயக்குமார், ஆ. ராஜா**
**இரா. சந்தனம், தஞ்சாவூர்**

## 84 : 8 சிவலிங்கம் மற்றும் நந்தி

காஞ்சிபுரம் மாவட்டம், மதுராந்தகம் வட்டத்தில் உள்ள மெய்யூரில் புதையுண்டிருந்த இலிங்கத்தின் மேல் பகுதியும் நந்தியின் சிற்பம் ஒன்றும்

கண்டுபிடிக்கப்பட்டது. இவ்வூரின் வயல் பகுதியில் புதைந்த நிலையில் உள்ள இவை பல்லவர் கால கட்டத்தைச் சார்ந்த கோயிலின் மூலவராக இருந்திருத்தல் வேண்டும். இலிங்கம் 5.5 X2.8 அடி உடையதாக உள்ளது. நந்தி 2 அடி நீளமும் 3 அடி அகலமும் கொண்டதாக உள்ளது.

**ப. முருகன், சென்னை**

## 84 : 9 மூத்த தேவி

சிதம்பரத்தில் உள்ள நாகசேரி வடகரையில் கிழக்கு நோக்கிய நிலையில் 3.5 அடி உயரத்துடன் 2.75 அடி பருமனுடன் காணப்படும் மூத்ததேவியின் சிற்பம் பெருத்த உடம்பும், பருத்த வயிறுமாக காட்சி அளிக்கிறது. மூத்ததேவியின் வலப்பக்கம் நந்தி வடிவத்தில் காணப்படும் உருவம், தேவியின் மைந்தன் மாந்தன் என்பவனின் சிற்பமாகும். இடப்பக்கம் காணப்படும் அழகிய பெண் உருவம், தேவியின் புதல்வியான மாந்தியை குறிக்கிறது. மூத்ததேவியின் ஆயுதமான துடைப்பம் இடப்புறமும், ஊர் தோட்டியான காக்கை இவளது கொடியாக வலப்புறமும் வடிக்கப்பட்டுள்ளது. தேவி தனது நீள் செவிகளில் மகர குண்டலங்களை அணிந்து, வலக்கை கடக முத்திரையிலும் இடக்கை மாந்தியின் தொடை மீது கை வைத்தவாரும் அமர்ந்த நிலையில் அழகுற அமர்ந்துள்ளார்.

**இல. கணபதி முருகன்**
**ஆ. முத்துக்குட்டி, சிதம்பரம்**

## 84 : 10 கொங்குப் பகுதியில் தொல்லியல் எச்சங்கள்

நெடுங்கல் : திருப்பூர் மாவட்டம், தாராபுரம் வட்டம், குண்டடம் ஒன்றியம் சடையபாளையம், அருகில் தாராபுரத்திற்கு வட - மேற்கில் 15கி.மீ உப்பாற்றங்கரை அருகே உள்ள சிங்காரிபாளையத்தில் வழிபாட்டில் கல்வட்டத்துடன் நெடுங்கல் கண்டுபிடிக்கப்பட்டது. இவ்வூர் மக்கள் இந்நெடுங்கல்லை சங்கிலி கருப்பன சாமி என வழிபடுகின்றனர்.

இரும்புக்கால எச்சங்கள் : கோவை மாவட்டம், கோவை- திருச்சி நெடுஞ்சாலையில் உள்ள பாப்பம்பட்டிப் பிரிவில் இருந்து தெற்கே 7கி.மீ தொலைவில் உள்ள இடையர்பாளையம் மற்றும் பொன்னாக்காணி. கிராமங்களில்2300 ஆண்டுகள் பழைமையான நெடுங்கல், இரும்பு உருக்கப்பயன்படுத்தப்பட்ட 10-க்கும் மேற்பட்ட ஊது உலைகள் (மண்குழாய்) கருப்பு சிவப்புப் பானை ஓடுகள், குறியீடுகள், சங்கு வளையலகள், கல் மணிகள்,



சில்லுகள், மான் கொம்புகள், இரும்புக் கசடுகள் போன்றவை காணப்படுகின்றன. இடையர்பாளையத்தில் நெடுங்கல் காணப்படுகிறது.

திருப்பூர் மாவட்டம், உடுமலை வட்டம், சோமவாரப்பட்டி கிராமத்தில் உள்ள எஸ்.அம்மாபட்டி, பெதப்பம்பட்டி, மற்றும் கொங்கல் பகுதிகளில் மேற்பரப்பு கள ஆய்வில் சங்ககாலச் சேர மன்னர்களின் முத்திரை, பல அரியவகைக் குறியீடுகள், தறிக்கோல் ஒன்று, தாங்கிகள், இரண்டு மண்விளக்குகள், மூன்று பலகறைப் பாசிகள்(சோழிகள்), 30 பல வண்ண மணிகள் எனப் பல தொல்பொருட்கள் கண்டுபிடிக்கப்பட்டு உள்ளன.

15 செ.மீ சுற்று அளவும் 5 செ.மீ விட்டமும் உள்ள வட்ட வடிவ சில்லோட்டில் வில் அம்பும் மேல் பகுதியிலும் கீழ்ப் பகுதியிலும் அங்குசமும் உள்ளன. இவை மூன்றும் ஒரு வட்டத்துள் உள்ளன. இது சேர மன்னர் முத்திரையாக இருக்கலாம்.

இப்பகுதியில் இரும்புக்காலத்தைச் சார்ந்த சிவப்பு நிறத் தாங்கிகள் 10க்கும் மேல் கிடைத்துள்ளன. மேலும் இங்கு ஆடை நெசவு செய்யும் போது நூலைச் சுற்றி வைப்பதற்க்குப் பயன்படும் தறிக்கோல் ஒன்று 6செ.மீ உயரத்தில் கிடைத்து உள்ளது.பானை ஓடுகளில் கீறல் குறியீடுகள் காணப்படுகின்றன.



செங்கந்துறை தொல்லியல் எச்சங்கள் : சூலூர் அருகே, சூலூர் விமான நிலையத்தில் இருந்து 4 கிமீ வடக்காக நொய்யல் ஆற்றங்கரையில் அமைந்துள்ள செங்கந்துறை என்ற ஊரில் உடைந்த நிலையில் புதிய கற்காலக் கற்கருவி மற்றும் ம என்ற எழுத்துள்ள தமிழ்-பிராமி எழுத்துக் குறியீடு பொறிக்கப்பட்ட இரண்டு கறுப்பு சிவப்பு மட்கல ஓடுகள், கறுப்பு, சிவப்பு நிற உடைந்த பானை ஓடுகள், சங்கு வளையல்கள், கல்மணிகள், இருப்புக்கசுடுகள், அரைக்கும் கற்கள், எடைக்கற்கள், மற்றும் விளையாட்டுச் சில்லுகள் போன்றவை கண்டுப்பிடிக்கப்பட்டுள்ளன. இக்கண்டுபிடிப்பில் ச. இரஞ்சித் அவர்களும் இடம் பெற்றார்.

திருப்பூர் செப்புச் சாசனம் : திருப்பூரில் விசயநகரப் பேரரசர் கொடுத்த செப்பேட்டுச் சாசனம் ஒன்றை திரு நாகராசன் என்பவர் கொடுத்த தகவலின் பேரில் கண்டறியப்பட்டது. இச்செப்பேடு வெண்கலக்கண்ணார் சமூகத்தின் வணிக நலனுக்காக உயிர்த்தியாகம் செய்த வேலப்ப செட்டியார் நினைவாக அச்சமூகத்திற்குக் கொடுத்த செப்பேட்டு சாசனம் ஆகும். சூரியன் சந்திரன் முத்திரை கொண்ட இச்செப்பேடு நாற்பத்தொன்பது வரிகளைக்

கொண்டது. அனுப்பர்பாளையத்தை சேர்ந்த காலஞ்சென்ற பட்டக்காரர் சுப்ரமணியச் செட்டியார் அவர்களின் வம்சத்தில் சுமார் 475 ஆண்டுகளாகப் பாதுகாக்கப்பட்டு வந்த இந்த செப்பேடு அவரின் மறைவிற்குப்பின் திரு. அர்ச்சுனன் அவர்களிடம் தற்போது உள்ளது. பொ.ஆ.1533ஆம் ஆண்டு ஜெய வருடம் ஐப்பசி மாதம் 21ஆம் தேதி குரு வாரமும், சோதி நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் கொடுத்த சாசனம் ஆகும். இது விசய நகரப் பேரரசில் இராமராயர் தலைமையில் சதாசிவராயர் பரிபாலனம் செய்த போது அதிகாரி நஞ்சப்பையனின் கீழ் தமிழ்நாட்டில் தாராபுரம் பகுதியின் அதிகாரியாக இருந்தவர் திம்மராசையயன். இவர் தாராபுரத்தில் வெண்கலப் பொருட்களுக்கு சுங்கம் செலுத்த வேண்டுமென ஆணை பிறப்பிக்கிறார். இதற்குவியாபாரம் செய்யும் வெண்கலக் கன்னார் எங்களுக்கு எப்போதும் சுங்கம் இல்லை என்றும், இதற்கு காரணமான முன்னர் நிகழ்ந்த வரலாற்று நிகழ்வை திம்மராயனிடம் கூறுகின்றனர். அதற்குத் திம்மராசையன் அந்தக் காலம் முடிந்தது, இப்போது சுங்கம் கொடுக்க வேண்டுமெனக் கூறுகின்றார். தலையை வேண்டுமானாலும் கொடுப்போம், ஆனால் சுங்கம் கொடுக்க மாட்டோம் என்றுவெண்கலக்கன்னாரில் ஒருவரான தாராபுரத்தை சேர்ந்த வேலப்ப செட்டியார் அவர்கள் நாட்டார் அனைவரும் அறியத்தனது தலையை அறுத்துத் திம்மராசன் முன் வைத்து உயிர் தியாகம் செய்கிறார்.

இவர்களின் மனோ திடத்தையும், வைராக்கியத்தையும் கேள்விப்பட்டு வியந்த இராமராயர் தலையை கொடுத்து உயிர் தியாகம் செய்த வேலப்ப செட்டியார் தலைக்கு ஈடாகப் பொன்னால் செய்த தலையைக் கொடுத்து 74 ஆகணத்தாருக்கும் எசமானன் என்ற பட்டம் கொடுத்து அரச மரியாதையுடன் ஊர்வலத்திற்கு வெண்கொற்றக் குடை, வெண் சாமரம், பகல் தீவெட்டி, நடைப்பாவடை, கொம்பு, திடுமம் ஆகியன பயன்படுத்திக் கொள்ள அனுமதியும் கொடுத்து பல விருதுகள் கொடுத்து இவர்களை பல்லக்கில் பட்டணப்பிரவேசமும் செய்வித்து மரியாதை செய்து இனி வெண்கலத்திற்கும் அதை சார்ந்த உற்பத்திப் பொருட்களுக்கும் சுங்கம் இல்லை என எழுதிக்கொடுத்த செப்பேட்டு சாசனம் இது ஆகும். இதற்க்கு விஜய நகர பேரரசின் தலைவர் இராம ராயர் ஒப்புதல் கொடுத்து மூன்று பேர் சாட்சிக் கையொப்பம் இட்டுள்ளனர்.



**வெள்ளலூர் உரோமானியக் காசுகள் :** கோவை மாவட்டம் வெள்ளலூரில் செ.ரா.ரவிச் சந்திரன், ர.செந்தில்குமார், க.தனகோபால் மற்றும் சு.ரவிக் குமார் ஆகியோர் நடத்திய

மேற்பரப்பு ஆய்வில் ஆறு ரோமனிய காசுகளைக் கண்டறிந்தனர். முதல் காசு ரோமனியப்பேரரசர் லுசியல் கார்னிலியஸ் சுல்லா பொ.ஆ.மு. 82 இல் வெளியிட்ட வெள்ளியாலான டடேனாரியஸ் (காசு) ஆகும். இதில்ஒரு பக்கத்தில் செங் கதிர்க்கடவுளான ஜுபிடர் நான்கு புரவிகள் பூட்டிய தேரில் பவனி வருகிறார். இன்னொரு பக்கத்தில் உள்ள அப்பலோ கருங்காலி மரத்தாலான ஒரு மாலை அணிந்துள்ளார். இக்காசு 1:160 கிராம் எடை கொண்டது. 20 மி.மீ. ஆரம் உடையது.



காசுகள் 2, 3 மற்றும் 4 சால்வசிரே பெலிக்கே குடியரசின் தியோடோசியஸ், முதலாம் தியோடோசியஸ் I, இரண்டாம் வேலண்ட்டினியன் , ஆர்க்கேடியஸ் மற்றும் ஹானரோயஸ்னால் பொ.ஆ. 383 முதல் பொ ஆ. 408 வரை பல காலகட்டங்களில் வெளியிடப்பட்டவை. இக்காசுகளில் இடது கையால் ஓர் அடிமையை இழுத்துச்செல்லுதலும், இடப்பக்கப் பகுதியில் ஒரு சிலுவையும் இடம் பெற்றுள்ளன. ஐந்தாவது காசு, இரண்டாம் தியோடோசியஸ் பொ.ஆ. 402 முதல் 450 வரையிலும், மார்சியன்னால் பொ.ஆ. 450 முதல் 457 வரையிலும் வெளியிடப்பட்ட செம்புக் காசு ஆகும். இது 1.020 கிராம் எடை கொண்டது. இது ஒற்றைத் தலைப்பு எழுத்துடன் அரிமாவின் பதுங்கிப்பாயும் நிலையில் உள்ளது. இதில் இரண்டும் இரண்டுக்கும் மேற்பட்ட நேர்த்தியான அழகு வாய்ந்த எழுத்துக்கள் அச்சுக்கோர்த்தது போல உள்ளே பொறிக்கப்பட்டுள்ளன.

ஆறாவது காசில் இரண்டாம் கானிஸ்ட்டன்டியஸ் மன்னன் பொ.ஆ. 324-337 வரை வெளியிடப்பட்ட செம்புக்காசு ஆகும். இது1.410கிராம்எடை கொண்டது. மேலும் இவ்வகை காசுகள் கானிஸ்ட்டன்ஸ் , கிரேட்டியன், முதலாம் தியோடோசியஸ், முதலாம் வாலண்ட்டினியன் முதலாம் மற்றும் இரண்டாம் காலத்திலும் ஆர்க்கேடியஸ் ஆகியோரால் பொ.ஆ. 378-383 வரையிலும் வெளியிடப்பட்டன.

**சு. இரவிக்குமார், திருப்பூர்**

## 84 : 11 குடுமியான்மலை பாறை ஓவியங்கள்

புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டம், குடுமியான் மலையில் பாறை ஓவியங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. குடுமியான்மலை பரம்பூர் சாலைக்கு வடக்காக அமைந்துள்ள நெடிய பாறைக்கு ஏறிச்செல்லும் பாதையின் இடது புறம் அழிந்த கற்படுக்கைகளில் மேல்



விதானப் பகுதியில் கிழக்கு முகம் நெடுகிலும் பாறை ஓவியங்கள் காணப்படுகின்றன. ஓவியங்கள் சிவப்பு மஞ்சள் கருப்பு ஆகிய வண்ணங் களில் வரையப்பட்டுள்ளன.

அம்பு ஏந்தி வேட்டைக்கு செல்லும் மனித உருவம் (சிவப்பு வண்ணம்) ஓடும் மனித உருவம் (கருப்பு வண்ணம்) தேள் பொற நொத லகு (கருப்பு வண்ணம்) பலவிதமான பறவைகள் கூட்டம் (மஞ்சள் வண்ணம்) ஆகியன மிகவும் நல்ல நிலையில் உள்ள ஓவியங்களாகும். ஓவியம் வரையப்பட்டுள்ள பாறை மிகவும் செங்குத்தாக அமைந்துள்ளது. குடுமியான்மலையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள ஓவியங்கள் விழுப்புரம் மாவட்டம் ஆலம்பாரம் திண்டுக்கல் சிறுமலை ஆகிய இடங்களில் காணப்படும் பாறை ஓவியங்களை ஒத்துள்ளன.

**ஜெ. ராஜாமுகமது**
**கரு. இராஜேந்திரன், புதுக்கோட்டை**

**84 : 12 புதுக்கோட்டை மாவட்டத்தில் சிதைந்த சிற்பங்கள்**



புதுக்கோட்டை மாவட்டத்தில் சிதைந்த சிற்பங்கள் பல புதியதாக கண்டுபிடிக்கப் பட்டன. குளத்தூர் வட்டத்தில் வீரக்குடி சிவன் கோயில் வளாகத்தில் பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த மூத்த தேவி, நாண்முகன் ஆகிய சிற்பங்களும் வைத்திக்கோயில் வளாகாத்தில் 13-14 ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த மூத்த தேவி சிற்பமொன்றும் முருகன், தீர்த்தங்கரர் சிற்பங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. குளத்தூர் வட்டத்தில் பனங்குடி அகஸ்தீஸ்வரம் கோயிலில் அய்யனார் சிற்பமும் பாறைப்பகுதியில் ஆதீண்டு குற்றிக்கல் ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டன. இவையாவும் வழிபாடு அற்ற நிலையில் தற்பொழுது காணப்படுகிறது.

**ஜெ. ராஜாமுகமது, புதுக்கோட்டை**

## 84 : 13 சிதைந்த சோழர் காலக் கோயில்

சென்னை - செங்கற்பட்டு நெடுஞ்சாலையில் அமைந் துள்ள மறைமலை நகர் அருகில் சுமார் 6 கி.மீ. தொலைவில் கரும்பூர் அமைந்துள்ளது. இவ்வூரில் சிதிலமடைந்த சிவன் கோயில், கரிய மாணிக்கப் பெருமாள் கோயில்கள் அமைந்துள்ளன.

ஏரிக்கு அருகாமையில் சிதைந்த சிவன் கோயில் செங்கற்களால் ஆன கருவறையை உடையது. விமானம் இல்லை. சதுர வடிவமான ஆவுடையாரில் தொன்மையான சிவலிங்கத் திருமேனி உள்ளது. மேலும் கருவறையில் சோழர் கால சூரியன், அம்மன் சிற்பங்கள் வழிபாட்டில் உள்ளன.



கோயில் முன்பு நல்ல நிலைமையில் இருந்திருக்கிறது. அதிட்டானப் பகுதி கல்லால் கட்டப்பட்டும், மேற் (சுவர்) பகுதி செங்கற்களால் கட்டப்பட்டிருந் ததைக் காணமுடிகிறது.

இக்கோயிலில் அதிட்டானப் பகுதியிலிருந்த கல்வெட்டுகள் மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறையால் படியெடுக்கப்பட்டு 1934-35ஆம் ஆண்டு கல்வெட்டு அறிக்கையில் சுருக்கம் வெளியிடப்பட்டுள்ளது.

கல்வெட்டுகளின் மூலம் இவ்வூர் முன்பு 'கருமூர்' என அழைக்கப் பட்டிருக்கிறது. இக்கோயில் ஆமூர் கோட்டத்தில், குமிழி நாட்டில் அமைந்துள்ள 'பெருந்தோட்டத்து ஆழ்வார்' என்ற இக்கோயில் இறைவனின் வழிபாட்டிற்காக தானம் அளித்த செய்தியை இராஜராஜனின் 26ஆம் ஆட்சி ஆண்டு கல்வெட்டு கூறுகிறது. மேலும் மூன்றாம் இராஜராஜனின் 4வது ஆட்சி யாண்டில் தில்லை நாயக அறையன் கூத்தன் நந்தா விளக்கு எரிய தானம் அளித்த செய்தியும், மாம்பாக்கத்தைச் சேர்ந்த பெரியான் அரசன் என்பவன் தானம் அளித்த செய்தியும் கல்வெட்டில் காணப்படுகிறது.

தற்பொழுது இக்கோயிலைச் சுற்றி மரங்கள், செடிகள் வளர்ந்த நிலையில் உள்ளது. கல்வெட்டுகள் பொறிக்கப்பட்ட கற்கள் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன.

கோயிலுக்கு கிழக்கே சற்று தொலைவில் வயல்வரப்பில் ஒரு சிற்பத்தின் தலைப்பகுதி மட்டும் தெரிந்தது. இச்சிற்பத்தைச் சுற்றி உள்ள மண்ணை அகற்றி பார்த்தபொழுது அது ஜேஷ்டா தேவியின் சிற்பம் என அறியப்

பட்டது இதுநாள் வரை இதனை இவ்வூர் மக்கள் துர்க்கை என வழிபட்டு வந்தனர்

இச்சிற்பம் பல்லவர் கால கலைப்பாணியுடன் காணப்படுகிறது ஜேஷ்டை அமர்ந்த கோலத்தில், காலின் அருகில் இருபக்கங்களிலும் பெண் உருவங்கள் காட்டப்பட்டுள்ளன வலது கையை சிறு பெண் பூத கணம் போன்றவள் தலைமீது கையை வைத்துக் கொண்டிருப்பது போலவும். இடப்புறம் பெண் வடிவமும் சிற்பத்தில் காணப்படுவது புதுமையாக அமைந்துள்ளது

இவ்வூரில் மேற்குப் பகுதியில் கரியமாணிக்கப் பெருமாள் கோயில் அமைந்துள்ளது இக்கோயிலுக்கு முன்னர் நிறுத்தி வைக்கப்பட்டுள்ள பலகைக் கல்லில் 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்தமைதியுடன் கல்வெட்டு காணப்படுகிறது ஒளிவெம்பாடி என்ற வணிகள் கருமூரில் உள்ள 'பெரிய நாயனார்' கோயிலுக்கு நெல் தானமாக அளித்த செய்தி காணப்படுகிறது இக்கோயில் இறைவன் 'பெரிய நாயனார்' என அழைக்கப்பட்டிருக்க வேண்டும்

கரும்பூர் என்ற 'கருமூர்' வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராக விளங்கியதை கல்வெட்டு மற்றும் சிற்பச் சான்றுகளால் அறிய முடிகிறது

**கி. ஸ்ரீதரன், சென்னை**

## 84 : 14 ஆனந்ததாண்டவபுரம் ஊரிருக்கை

மயிலாடுதுறைக்கு வடகிழக்கே சுமார் 6 கி.மீ தொலைவில் ஆனந்ததாண்டவபுரம் உள்ளது ஊரின் மையப் பகுதியில் தற்போதைய அக்ரஹார குடியிருப்பு உள்ள இடத்தில் இரும்புக்கால - வரலாற்றுத் தொடக்க கால வாழ்விடப்பகுதி மேடு சுமார் ஒரு மீட்டர் உயரம் கொண்டுள்ளது இங்கு கருப்பு - சிவப்பு, கருப்பு நிற மட்கல ஓடுகள் சேகரிக்கப்பட்டன ஊரின் வயற்பகுதியில் உள்ள செங்கமேட்டுத் திடல் என்றழைக்கப்படும் இடத்தில் பிற்கால வாழ்விடப் பகுதியும் கண்டறியப்பட்டது

**வீ. செல்வகுமார், செ. கௌரிசங்கர்,**
**இரா. செந்தில், தஞ்சாவூர்**

## 84 : 15 மகாவீரர் சிற்பம்

கும்பகோணம் - திருவாரூர் பேருந்து வழித்தடத்தில் கும்பகோணத்தி லிருந்து 11 கி.மீ தொலைவில் உள்ள திருச்சேறைக்கு அருகில் அமைந்துள்ள அத்திக்கடை பாலம் பேருந்து நிறுத்தத்திலிருந்து ஒரு கி.மீ வடக்கில் உள்ள திருமெய்ஞானத்தில் உள்ள சிவன் கோயிலின் முன்புறத்தில் வலப்பக்கத்தில்

சிதிலமடைந்த (165 செ.மீ. நீளம், 45 செ.மீ. அகலம்) மகாவீரர் சிற்பத்தின் துண்டுப்பகுதி கண்டுபிடிக்கப்பட்டது. இச்சிற்பத்தின் இடது பகுதி மட்டும் கிடைத்துள்ளது. தலைக்குப் பின் உள்ள பிரபையும், தலைக்கு மேல் உள்ள கொடிகளும், பின்பகுதியில் உள்ள திண்டும் மற்றும் இடது பக்கத்தில் உள்ள துணைமாந்தரின் உருவமும், இது மகாவீரரின் சிற்பம் என்பதை உறுதி செய்கின்றது.

இதே வட்டத்திலுள்ள தீபங்குடி என்னும் ஊரிலுள்ள ஆதிநாதர் கோயிலில் முகமண்டபத்தின் இடதுபுறத்தில் மற்றொரு மகாவீரர் சிற்பம் (125 செ.மீ. உயரம், 56 செ.மீ. அகலம்) உள்ளது. சில காலத்திற்கு முன்பு வடகண்டம் அருகில் உள்ள வெட்டாற்றில் கிடந்த இச்சிற்பத்தை எடுத்து வந்து இக்கோயிலில் வைத்ததாக இக்கோயில் குருக்கள் கூறுகின்றார்.

**வீ. செல்வகுமார்,**
**இரா. கார்த்திகேயன், கோ. மதிவாணன்,**
**இரா. சுரேஷ், தஞ்சாவூர்**

## 84 : 16 பல்லவர் கால சிற்பங்கள்



விழுப்புரம் மாவட்டம் பனையபுரம் அருகிலுள்ள துறவி ஊரிலுள்ள கைலாசநாதர் கோயிலின் திருச்சுற்றில் தென்மேற்கு மூலையில் உள்ள விநாயகப் பெருமான் கால்களை மடித்து அமர்ந்த கோலத்தில் நான்கு கரங்களுடன் காட்சி தருகிறார். மேலிரு கரங்களில் இடது கரத்தில் மலர் கொத்து தாங்கியுள்ளது குறிப்பிடத்தக்கது. சிற்பத்தின் அடிப்பகுதியில் விநாயகருக்கு முன்பாக பழங்கள் ஒரு தட்டில் வைத்திருப்பது போன்ற சிற்ப வேலைப்பாடு காணப்படுகிறது. பலகைக் கல்லில் செதுக்கப்பட்டுள்ள இச்சிற்பம் போன்று பனையபுரம், திருவாமாத்தூர் போன்ற இடங்களிலும் சிற்பங்கள் பல்லவர் கால கலை அம்சத்துடன் காட்சி அளிக்கின்றன.

இக்கோயிலின் திருச்சுற்றில் மேற்குப் பகுதியில் அமர்ந்த நிலையில் தலையில் கரண்ட மகுடம் அணிந்து, தனது மேல் இரு கரங்களில் வேல் மற்றும் கமண்டலமும் தாங்கியுள்ளதைக் காணலாம். முன் இரு கரங்கள் இடையில் வைத்துள்ளார். நீள் செவிகளில் குண்டலங்கள் காலடியின் கீழே மலர்ந்த தாமரைக் காட்டப்பட்டுள்ளது. தாமரை மலர் மீது முருகப்பெருமான் அமர்ந்த நிலையில் இங்கே காணப்படுவது சிறப்பாகக்

கருதப்படுகிறது. இச்சிற்பங்கள் இரண்டும் பொ.ஆ.9ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

**சீ. ஸ்ரீதர், புதுச்சேரி**

## 84 : 17 வீரக்கற்கள்



தேனி மாவட்டம், கம்பம் நகருக்கு அருகிலுள்ள புதுப்பட்டியில் நடுகற்கள் காணக் கிடைக்கின்றன. நான்கு நிலைகளில் இரு வீரர் களுடைய வீரச்செயல்கள் காட்டப் பட்டுள்ளது. கீழிருந்து மேலாக முதல் நிலையில் வீரன் ஒருவன் குதிரையின் மீது அமர்ந்து எதிரியை ஈட்டியைக் கொண்டு எறியும் நிலையில் காட்டப்பட்டுள்ளது. அவ்வீரனுக்குக் கீழ் காணப்படும் பெண் அவன் மனைவியாக கருத இடம் உண்டு. இரண்டாம் நிலையில் வீரன் ஒருவன் இரு ஆநிரைகளின் மூக்கணாங் கயிற்றைப் பிடித்து மீட்டு அல்லது கவர்ந்து வரும் நிலையில் காட்சிப் படுத்தப்பட்டுள்ளது. மூன்றாம் நிலையில் காணப்படும் இரு பெண்கள், இரண்டாம் நிலையில் காட்டப்பட்டுள்ள வீரனின் மனைவியாகக் கருதலாம். நான்காம் நிலையில் இவ்விரு வீரர்களும் எதிரியுடன் நடந்த சண்டையில் இறந்த பின்னர், அவ்வீரர்களின் மனைவிகளும் இறந்து வீர சொர்க்கம் அடைந்ததை வெளிப்படுத்தும் விதமாக சிவ லிங்கத்தின் இருபுறமும் சூரியன், சந்திரன் உருவங்கள் பொறிக்கப் பட்டுள்ளன. இரண்டாவது நடுகல்லில் வீரன் ஒருவன் இடையில் குத்துவாள் செருகிய நிலையிலும், ஆக்ரோசத்துடன் வலது கையில் வாளை உயர்த்திப் பிடித்தும், இடது கையில் தடியை ஊன்றி நின்ற நிலையில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. இந் நடுகற்கள் 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

**மு. கனகராஜ், போடிநாயக்கனூர்**

## 84 : 18 பல்லவர் கால ஜேஷ்டை சிற்பம்

காஞ்சிபுரம் மாவட்டம், மதுராந்தகம் வட்டத்தில் அரையப் பாக்கம் அருணாதீசுவரர் திருக்கோயி லின் வடமேற்குப் பகுதியில் இச்சிற்பம் வழிபடப் பெறுகிறது. ஜடாபாரம் என்ற தலையலங்காரத்துடன் தேவி



அமர்ந்த கோலம். நீள் செவிகள் குண்டலங்களுடன் இரு கைகள். வலது கை மலர் ஏந்திய நிலை. இடையிலிருந்து கணுக்கால் வரை ஆடை செல்கிறது. கால்களின் இரு பக்கங்களிலும் சேடிப் பெண்கள் காணப்படுவது இச்சிற்பத் தின் தனிச்சிறப்பு. சிற்பத்தின் மேல் பகுதியில் வலப்புறம் மாந்தி, கலப்பையும், இடப்புறம் ஆந்தை கொடியும் காணப் படுகிறது. இச்சிற்பத்தின் காலம் 9ஆம் நூற்றாண்டாகலாம்.

**கி. ஸ்ரீதரன், சென்னை**

## 84 : 19 ஈரோடு பகுதியில் நடுகல், கல்தூண்



காசிபாளையம் நடுகல் : ஈரோடு மாவட்டம் கோபிசெட்டிபாளையத்திற்கு அருகில் காசி பாளையம் கிராமத்தில் தின்னித்துமேடு என்ற இடத்தில் நடுகல் ஒன்று உள்ளது. இந்நடுகல்லை வேட்டைக்காரன் கல் என்றும் வீரக்கல் என் றும் அழைக்கின்றனர். இடக்கையில் வில்லும் வலக்கையில் குறு வாளும், தலையில் குடுமியும் கைகால்களில் அணிகள் அமையப் பெற்றும் இந்த நடுகல் தோற்றமளிக்கிறது. இது 15ஆம் நூற்றாண் டைச் சார்ந்தது எனக் கொள்ளலாம்.

கல்வெட்டு கல்தூண் : பவானிக்கு அருகிலுள்ள தளவாய்ப்பேட்டை அக்ர ஹாரத்திற்கு நேர் தென்புறத்தில் பவானி யாற்றங்கரையோரமாக வைர மங்கலம் ஊரில் சிதிலமடைந்த பெருமாள் கோயிலின் கிழக்கில் ஏறத்தாழ 20 அடி உயரம் உள்ள கற்றூணும் குறிஞ்சியும் உள்ளன. இவற்றை ரங்கதாசன் என்னும் திருமால் பக்தர் உபயமாகச் செய்து தந்துள்ளார். "ரங்கதாசன் உபையம் சதாசொாவை" என்று கல்வெட்டில் உள்ளது.



சிதறிக் கிடக்கின்ற தூண்களில் ராமானுஜர், காலிங்கர் நடனம், யாழிக்கல், அனுமன் மற்றும் அழகிய சிற்பங்கள் உள்ளன

இக்கோயிலைப் புதுப்பிக்கக் குழி தோண்டியபோது பூமிக்கடியில் அழகிய ஐம்பான் சிலைகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றின் காலம் பொ.ஆ 17ஆம் நூற்றாண்டு.

**அ. பழனியப்பன், ஐம்பை**

## 84 : 20 கீழ்நாட்டுக்குறிச்சி நினைவுக்கல்

தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள எட்டையபுரம் வட்டத்தில் எட்டையபுரத்திலிருந்து 16 கி.மீ தொலைவில் அமைந்துள்ள ஊர் கீழ்நாட்டுக்குறிச்சி இங்கு நடுகல் ஒன்று தோண்டி எடுக்கப்பட்டது இந்நடுகல்லில் ஆண் பெண் சிற்பங்கள் அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. ஆணின் கையில் வாலினை வைத்தவாறும், பெண் தன் கையில் மலரை வைத்தவாறும் அமர்ந்துள்ளனர் இருவரும் ஆபரணங்களையும் மற்றும் கீழுடையும், தலையின் கூந்தலை அலங்கரிக்கும் அணிகலன்களையும், காலில் அணிகலனும் அணிந்துள்ளனர் இந்த நினைவுக் கல்லின் உயரமானது 60 செ.மீ அகலமானது 6 செ.மீ கொண்டுள்ளது. மேல் பகுதியில் முக்கோண வடிவிலான ஓர் அடுக்கு அமைந்துள்ளது இது சதி கல்லாகும் இச்சிற்பம் நாயக்கர் காலத்தைச் சார்ந்ததாகலாம் இந்த நினைவுக் கல்லிற்கு அருகில் பெருங்கற்காலத்தைச் சார்ந்த கல் திட்டைகள் காணப்படுகின்றன இவையாவும் காலத்தால் முற்பட்டவையாக இருக்கக் கூடும்

**ஜி. மணிகண்டன், தூத்துக்குடி**

## 84 : 21 சதி மற்றும் வீரக்கற்கள்

தேனி மாவட்டம், போடிநாயக்கனூர் தீர்த்தத் தொட்டிக்கு அருகிலுள்ள ஒத்தவீடு என்ற இடத்தில் சதிக்கல் மற்றும் வீரக்கல் கண்டுபிடிக்கப்பட்டது சதி கல்லில் கணவன், மனைவி இருவரின் உருவம் அமர்ந்த நிலையில் பொறிக்கப்பட்டுள்ளது ஆணுருவத்தில் இடது காலை மடக்கி, இரு கைகளை அவனின் தொடைகளில் வைத்து அமர்ந்த நிலையில் காணப்படுகிறது பெண் உருவத்தில் வலது கையை உயர்த்தியும், இடது கையை தொடையில் வைத்து அமர்ந்த நிலையில் காட்சிப்படுத்தப் பட்டுள்ளது.

வீரக்கல்லில் உள்ள சிற்பத்தில் இடது கையில் வில்லைப் பிடித்தும், வலது கையில் வாளைப் பிடித்து தரையில் ஊன்றியும், முதுகில் அம்புக் கூடையுடன் சண்டைக்கு தயார் நிலையில் இருக்கும் ஆணின் புடைப்புச் சிற்பம் உள்ளது மேலுள்ள இரண்டு சிற்பங்களும் பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை யாகும்

**சி. மாணிக்கராஜ், தேனி**

## 84 : 22 திருக்கச்சூர் நடுகல்

சென்னை - திருச்சி தேசிய நெடுஞ்சாலை யில் உள்ள சிங்கபெருமாள் கோயிலுக்கு மேற்கே அமைந்துள்ள திருக்கச்சூர் ஊரின் வடக்கில் உள்ள திரௌபதியம்மன் கோயிலின் வடகிழக்கில் நடுகல் ஒன்று காணப்படுகிறது. இடது கை தொடையில் தொங்க விடப்பட்ட நிலையில் இவ்வீரன் நின்றுள்ளார். தலையில் முன்குடுமி இட்டுள்ளார். இச்சிற்பங் களிலுள்ள அணிகலன்கள் மிக அழகாக காணப்படுகின்றது. இச்சிற்பம் விஜயநகர காலத்தைச் சார்ந்திருக்கலாம்.

**ந. தனசேகரன், தஞ்சாவூர்**

## 84 : 23 பூமியில் புதையுண்ட திருக்கோயில்கள்

வேலூர் மாவட்டம், திருவல்லம் அருகில் தெற்கில் கம்பராஜபுரம் என அழைக்கப்படும் பகுதி உள்ளது. திருவல்லம் கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்றில் கங்கஅரசன் விஜயநந்தி விக்கிரமவர்மன் என்ற அரசன் குறிப்பிடப்படுகிறான். இம்மன்னன் பெயரால் 'கங்கராஜபுரம்' என அழைக்கப்பட்டு காலப்போக்கில் மருவி இன்று கம்பராஜபுரம் என அழைக்கப்படுவதை ஊகிக்க முடிகிறது. இவ்வூர் எல்லையில் சுமார் ஒரு கிமீ. தொலைவில் பனந்தோப்பு என்ற பகுதியில் சிதிலமடைந்த சிவன் கோயில் புதைந்த நிலையில் காணப்படுகிறது. கறுப்பு நிறக் கல்லால் கட்டப்பட்ட இக்கோயில் ஊர் மக்களால் 'கறுப்புக் கோயில்' என அழைக்கப்படுகிறது. கோயிலின் மீது மரங்கள், செடிகள் வளர்ந்துள்ளன. மரங்களின் வேர்கள் ஊடுருவியதால் கோயிலின் கட்டடப் பகுதிகள் கீழே விழுந்து சிதறிக் கிடக்கிறது. கோயிலுக்கு வெளியே உடைந்த நிலையில் தட்சிணாமூர்த்தி, நந்தி தேவர் சிற்பங்கள் காணப்படுகின்றன.

தெற்குப் பகுதியில் ஒரு வாயில், கிழக்குப் பகுதியில் ஒரு வாயில் அமைந் துள்ளது. கருவறையின் உத்திரப் பகுதியில் சிறு சிறு சிற்பங்களாக முனிவர் வழிபடும் காட்சி, நடனமாடும் நங்கை, இசைக்கருவி வாசிக்கும் ஒருவன்





போன்ற சிற்பங்கள் அழகாகக் காட்சி அளிக்கின்றன. ஓரிடத்தில் அடியார் ஒருவர் சிவலிங்கத்தை வழிபடும் காட்சி புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகிறது.

கருவறை வெளிச்சுவரில் காணப்படும் தேவகோட்டத்திற்கு மேலே அழகிய சிற்ப வேலைப்பாடு மிக்க மகர தோரணங்கள் காட்சி அளிக்கின்றன. மகர தோரணத்தின் நடுவே அழகிய பெண் ஒருத்தி, இருவர் இசைக் கருவிகளை வாசிக்க நடனமாடும் காட்சி அழகிய சிற்பமாக விளங்குகிறது.

இக்கோயிலுக்கு விக்கிரம சோழன் (கி.பி. 1118-1135) வழிபாட்டிற்காக தானமாக வழங்கப்பட்ட செய்தியினைக் கூறும் இரு கல்வெட்டுகள் இக்கோயிலில் காணப்படுவதாக 1878இல் படியெடுக்கப்பட்ட கல்வெட்டு அறிக்கை குறிப்பிடுகிறது.

**கி. ஸ்ரீதரன், சென்னை**

## 84 : 24 இராஜபாளையம் வட்டார நினைவுக் கற்கள்



இடையன்குளம் நடுகல் : விருதுநகர் மாவட்டம் ராஜபாளையத்தில் இருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் செல்லும் வழியில் 4 கி.மீ. தொலைவில் இடையன்குளம் அருகே 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த குதிரை வீரன் நடுகல். குதிரைக்கல் என்று அழைக்கப் படுகிறது. இச்சிற்பத்தில் வீரன் ஒருவன் குதிரை மீது அமர்ந்துள்ள நிலையில் அருகில் ஒரு பெண் மேடையில் அமர்ந்து காட்டப்பட்டுள்ளது. வீரனின் வலது கையில் உள்ள ஈட்டியை உயர்த்தி எறிவது போலவும், இடது கை உடைந்தும் உள்ளது. இடதுபுறத்தில் அமர்ந்துள்ள பெண் வலது காலை மடக்கி, இடது காலை தொங்கவிட்டுள்ள நிலையில், வலது கையில் முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்று வைத்திருப்பது போலவும், இடது கை குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து இருப்பது போலவும் வடிக்கப் பட்டுள்ளது. மேலும் அப்பெண்ணின் காதணிகள் சடை பின்னிய நிலையில் காணப்படுகிறாள். கீழ்ப்பகுதியில் ஒரு கோப்பையும், பண முடிப்பு போன்ற பை ஒன்றும் காணப்படுகிறது.

வடக்கு மலையடிப்பட்டி : மேற்படி மாவட்டம், வட்டம் மலையடிப் பட்டியில் அமைந்துள்ள நினைவுக்கல் சிற்பத்தில் வீரன் ஒருவன் நடுவில் அமர்ந்துள்ள நிலையில் இருபுறமும் இரு பெண்களும் அமர்ந்துள்ளனர். இடதுபுறம் அமர்ந்துள்ள பெண் இடது காலை மடக்கி வலது காலை கீழே



தொங்கவிட்டவாறு இரு கைகளையும் சற்று உயர்த்திய நிலையில் ஒரு கையில் எலுமிச்சை பழம் ஒன்றை வைத்துள்ளார். இதேபோல வலதுபுறம் அமர்ந்துள்ள பெண் வலது காலை மடக்கி, இடது காலை தொங்கவிட்டபடி உள்ளது. இதேபோன்று நடுவில் அமர்ந்துள்ள வீரனும், தனது வலது கையில் ஒரு ஆயுதம் வைத்துள்ளது போன்றுள்ளது. மூன்று பேரும் தலைக்கொண்டை, காதணிகள் அணிந்த நிலையில் அலங்காரத்துடன் காட்டப்பட்டுள்ளது. இதில் இரு பெண்களும் மேலாடை இல்லாமல் உள்ளனர். வீரன் கைக்காப்பு அணிந்த நிலையில் கீழ்ப்பகுதியில் பண முடிப்பு போன்ற ஒரு பையும், தூபக்காலும் காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பம் 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.



மாலையாபுரம் : இராஜபாளையத்திலிருந்து அய்யனார் கோயில் செல்லும் வழியில் உள்ள மாலையா புரம் கண்மாய் அருகே இரண்டு நினைவுச் சிற்பங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று மேடைத் தளத்தில் அமைந்துள்ளது. இச்சிற்பத்தில் ஓர் ஆணும், பெண்ணும் நின்ற நிலையில் ஆண் தனது வலது கையை உயர்த்தியவாறும், பெண்ணும் வலது கையை உயர்த்திருப்பதும், ஆண் தன் இடையில் வாள் காணப்படுகிறது. மடிப்புடன் கூடிய கீழாடை காணப்படுகிறது. ஆண், பெண்ணின் தலைமுடிகள் கொண்டைகளாக காட்டப்பட்டும் காதணிகள் தொங்கிய நிலையில் அழகாகக் காட்டப்பட்டுள்ளது. இதன் உருவ அமைப்பைக் கொண்டு இச்சிற்பம் 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

இவ்வூரிலுள்ள இரண்டாவது சிற்பத்தில் ஆணும் பெண்ணும் கை கோர்த்து நின்ற நிலையில் உள்ளனர். ஆண் தனது வலது கையில் ஆயுதம் ஒன்றைப் பிடித்துள்ளது போன்றும், இருவரின் தலைக்கொண்டைகளும் அழகாக வடிவமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பமும் 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**சேத்தூர்:** இராஜபாளையத்திலிருந்து தென்காசி செல்லும் சாலையில் சுமார் 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள சேத்தூர் மாரியம்மன் கோயில் அருகே ஒரு நினைவுக்கல் சிற்பம் அமைந்துள்ளது. ஆணும், பெண்ணும்



அமர்ந்த நிலையில் ஆண் தனது வலது காலை கீழே தொங்க விட்டவாறும், இடது காலை மடக்கி வைத்திருப்பது போன்றும், பெண்ணும் வலது காலை மடக்கியும் இடது காலைத் தொங்கவிட்ட நிலையில் சிற்பம் அமைந்துள்ளது. ஆண் வலது கையில் அல்லி மலர் ஒன்றை வைத்திருப்பது போன்றும், இடது கையைத் தன் தொடையில் வைத்து உள்ள நிலையில் அமைந்துள்ளது. அதேபோல பெண்ணின் வலது கையில் கண்ணாடிக் கெண்டி ஒன்றை பிடித்திருப்பது போன்று காணப்படுகிறது. ஆணின் தலையலங்காரம் கீரிடம் போன்றும், பெண்ணின் தலைக்கொண்டை அலங்காரமுடனும் இருவரின் காதணிகளும் தொங்கிய நிலையில் தோளில் தொட்டவாறு காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் கீழ்ப்பகுதியில் மற்றொரு பெண் அமர்ந்த நிலையில் செதுக்கப் பட்டுள்ளது.

சேத்தூரில் உள்ள சுடுகாட்டில் இரண்டு நினைவுக்கல் சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றில் ஒன்று மண்ணில் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. இந்நினைவுக்கல் சிற்பத்தில் ஆணும், பெண்ணும் அமர்ந்த நிலையில் ஆண் தனது வலது காலை தொங்கவிட்டு இடது காலை மடக்கி வைத்தும், பெண் தனது வலது காலை மடக்கியும், இடது காலை தொங்கவிட்டும், இருவரும் தங்களது வலது கையில் பூச்செண்டை வைத்திருப்பது போலவும், இடது கையைத் தங்கள் தொடை மீது வைத்துள்ளது போன்று காட்டப்பட்டுள்ளது. இரண்டு உருவங்களும் அணிகலன்கள், காதணிகள், கைக்காப்பு, கை - கால் தண்டை இடை ஆடை போன்ற அலங்காரங்களால் வடிக்கப்பட்டுள்ளது. இருவரின் தலைக்கு மேலே மாலைகள் போடப்பட்டுள்ளது. பொது ஆண்டு 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.



இரண்டாவது நினைவுக்கல் சிற்பத்தில் ஆண், பெண் அமர்ந்த நிலையில் ஆணின் வலது கையில் வாள் ஒன்றை பிடித்து தரையில் ஊன்றியபடியும், பெண்ணின் வலது கை சற்று உடைந்தும் காணப்படுகிறது. இச்சிற்பத்திலும் ஆண், பெண்ணின் தலை

யலங்காரம், கொண்டைகளுடனும், காதணிகள், கழுத்தணிகள் சிதைந்த நிலையிலும், கைக்காப்பு, கைத்தண்டை அணிந்திருப்பதும் காட்டப் பட்டுள்ளது. இச்சிற்பமும் பொ.ஆ.17ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும்.

**போ. கந்தசாமி, இராஜபாளையம்**

## 84 : 25 சதி கற்கள்

திருநெல்வேலி மாவட்டம், வள்ளியூர் அருகில் கேட்டைமேடு என்ற பகுதியில் 3 நடுகற்கள் கண்டுபிடிக்கப் பட்டன. மூன்று கற்களிலும் ஆண் பெண் புடைப்புச் சிற்பங்களில் ஒரு காலை தொங்கவிட்டவாறு அமர்ந்த நிலையில் உருவங்கள் காட்டப்பட்டுள்ளன. இவையாவும் பொ.ஆ.18ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

**மு. ஆறுமுகம், திருநெல்வேலி**

## 84 : 26 தலையாமங்கலம் ஓவியம்



திருவாரூர் மாவட்டம், மன்னார்குடி வட்டம் தலையா மங்கலம் ஊரின் கிழக்கே சந்திர மாரியம்மன் கோயிலின் தெற்கு சுவரில் மன்னன் ஒருவர் குதிரை மீது அமர்ந்தவாறு போர் செய்வது போலவும் அக்குதிரையினை ஒருவர் முன்புறம் இழுப்பது போலவும், பின்புறம் போர் வீரன் ஒருவன் நின்ற நிலையிலும் காணப்படுகின்றனர். இக்கோயிலின் மேற்கு சுவரில் முனிவர் ஒருவர் பெண்ணுக்கு தாமரைப்பூ கொடுக்கும் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. கோயிலின் வடக்குச் சுவரில் சிதைந்த நிலையில் பெண் ஒருவள் சிவன் முன்பாக தீ பந்தம் ஏந்திய ஓவியம் உள்ளது. இவ்வோவியம் மராத்தியர் காலத்தைச் சார்ந்தது.



**ஆ. துளசேந்திரன்,**
**க. சுரேஷ்,**
**நா. ராஜலெட்சுமி,**
**இரா. ஆனந்த குமார்,**
**இரா. கார்த்திகேயன்,**
**தஞ்சாவூர்**

## 84 : 27 கொற்கை இடைக்கால வாழ்விடப் பகுதி

தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் வட்டம் கும்பகோணத்திலிருந்து தெற்கே 6 கி.மீ. தொலைவில் கீழகொற்கை எனும் ஊரின் தென்மேற்கு திசையில் தம்ராஜ் நகருக்கு அருகில் நாரன் வாய்க்காலின் வடகரையில் சுமார் 3 ஏக்கர் பரப்பளவில் இடைக்காலத்தைச் சார்ந்த வாழ்விடப்பகுதி காணப்படுகிறது. இப்பகுதியில் இடைக்காலத்தைச் சார்ந்த சிவப்புநிற பானை ஓடுகள் பெருமளவிலும் அவற்றுடன் உறைகிணற்றின் துண்டுகளும் கிடைக்கப்படுகின்றன. மேலும் இப்பகுதியிலிருந்து வடக்கு புறமாக சுமார் 500 அடி தூரத்தில் சிதிலமடைந்த நிலையில் செங்கற் (13 x 30 செ.மீ.) கோயில் சண்டிகேஸ்வரர் சிற்பத்துடன் காணப்படுகிறது. இச்சிற்பத்தின் உருவமைப்பினைக் கொண்டும் செங்கற்களின் அளவினைக் கொண்டும் இவற்றின் காலத்தினை சுமார் பொ.ஆ.16 - 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக கருதலாம்

**க. சுரேஷ், சிறுநெசலூர்**

## 84 : 28 நாயக்கர் காலச் சிற்பங்கள்

சென்ற இதழ் 25 – செய்தித் திரட்டு புதிய கண்டுபிடிப்புகளில் 57:14 குதிரை வீரன் சிற்பங்கள் என்ற தலைப்பில் வெளிவந்துள்ள குறிப்பில் மதுரை மாவட்டம், உசிலம்பட்டி வட்டம் கொடிக்குளம் ஊரில் கண்டுபிடிக்கப்பட்ட சிற்பங்களில் ஒரு ஒளிப்படம் மட்டும் வெளியிடப்பட்டு சுருக்கமான குறிப்பும் பதிவாகி உள்ளது. இக்குறிப்பை அளித்த முனைவர் பா. ஜெயக்குமார் மேலும் சில தகவல்கள் விடுபட்டிருப்பதாகக் கூறி இவ்விதழில் அதனைப் பதிப்பிக்குமாறு கேட்டுக்கொண்டதின் பேரில் இச்செய்தியினை மீண்டும் இங்கு வெளியிடுகின்றோம். ஆசிரியர் கொடுத்த குறிப்பை பதிப்பு மாற்றம் எதுவுமின்றி அவர் குறித்துள்ளவாறே இங்கு வெளியிட்டுள்ளோம். (ப.ஆ.)



நேர்த்தியான, கனமான கற்பலகைகளில் நாயக்கர் காலக் கலை நுட்பத்துடன் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. சிற்பங்கள் நூற்றாண்டு காலமாக மண்ணில் புதைந்து கிடந்ததால் உருவங்களின் முகத்தில் சற்று தேய்மானம் ஏற்பட்டுள்ளது. ஒரு சிற்பத்தில் உயர் ரக வகையைச் சேர்ந்த, கம்பீரமான தோற்றத்தை உடைய ஆண் குதிரையின் மீது அமர்ந்துள்ளவர் விறைப்புடன் கூடிய அக்குதிரையை சாட்டையை ஓங்கியவாறு தனது கட்டுப்பாட்டில் கொண்டுவருவது போலவும், கீழே நிற்கும் பணியாள்



குதிரையின் மீது அமர்ந்துள்ளவருக்கு உதவுவது போலவும் பெண் ஒருவர் அச்சத்துடன் நிற்பதுபோலவும், நாய் ஒன்றும் காட்டப்பட்டுள்ளன. இது வேட்டைக்குச் செல்லுகின்ற காட்சியை நினைவூட்டுகிறது. அடுத்த சிற்பத்தில் ஒருவர் நடந்துசெல்வது போலவும் வில்லின் நாணினை இழுத்து அம்பினை எய்துவது போலவும் காட்டப்பட்டுள்ளது. வலப்பக்கத் தோளின் பின்புறம் தூணி (அம்புகள் வைக்கும்கூடு) காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பத்திலும் பெண் ஒருவர் அச்சமுடன் அவரின் பின்னால் செல்வது போலக் காட்டப்பட்டுள்ளது. இரு சிற்பங்களிலும் உள்ளவரின் தோற்றம் மற்றும் ஆடை அணிகலன்கள் ஒரு சாதாரண மனிதனுக்கான தோற்ற மல்லாது அரசருக்குரிய தோற்றத்தைக் காட்டுகின்றன. ஒரு சிற்பத்தில் குதிரையின்மீது அமர்ந்துவந்து அடுத்த சிற்பத்தில் வேட்டைக்குச் செல்வதுபோல் காட்டப்பட்டுள்ளதாகக் கருத இடமுண்டு. மேலும், மதுரை நாயக்கர் மன்னர்களில் சிறந்தவராகக் கருதப்படும் திருமலைநாயக்கர் நாகமலை, விக்கிரமங்கலம், மேலக்கால் மற்றும் கொடிக்குளம் பகுதிகளில் அடிக்கடி வேட்டையாடுவதற்காக வந்து சென்றதற்கான சான்றுகள் ஏற்கனவே சில பட்டயங்களின் வாயிலாக அறியப்பட்டவையே (காட்டாக: ஆவணம்-23, 2012, பக். 196-198). திருமலைநாயக்கர் ஒரு சிறந்த குதிரை வீரராகவும் இருந்துள்ளார். (K. Rajaram, *History of Thirumalai Nayak*, Ennes Publications, Madurai, 1982, p.16). இதனடிப்படையிலும், சிற்பங்களில் உள்ளவரின் உருவத் தோற்றம் குறிப்பாக முகம் மதுரை புதுமண்டபத்தில் உள்ள திருமலை நாயக்கரின் சிற்பத்தினை ஒத்திருப்பதாலும் இச்சிற்பங்கள் இரண்டும் திருமலைநாயக்க மன்னனாக இருக்கலாம். மன்னன் தோற்றத்தில் குதிரை வீரராகவும் வேட்டையாடும் காட்சியினையும் வெளிப்படுத்தும் நாயக்கர் காலச் சிற்பங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளமை இதுவே முதல் முறையாகும். நாயக்கர் காலச் சிற்பக்கலைப் பாணிக்கு இவ்விரு சிற்பங்களும் சிறந்த சான்றுகளாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

**பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்**

## 84 : 29 செய்யாறு – பிரமதேசம் ஆதித்த கிரஹம்

திருவண்ணாமலை மாவட்டம், செய்யாறு வட்டம், பிரமதேசம் என்னும் ஊரில் உள்ள சந்திரமௌலீஸ்வரர் கோயிலில் இராஜேந்திர சோழனின்

மைந்தனும் அவனுக்குப்பின் பட்டம் ஏற்ற இராஜாதிராஜனின் பொ.ஆ.1044 ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்றில் முதலாம் இராஜேந்திரன் இறந்தபின் அவரது துணைவியார் வீரமாதேவி, கணவர் இறந்த இடத்தில் உடன்கட்டை ஏறுகின்றார். அவரது தாக சாந்தியைப் போக்க வீரமாதேவியன் தமையன் மதுராந்தகன் என்னும் பரகேசரி வேளார் என்பவர் தண்ணீர் பந்தல் ஒன்றை பிரமதேசத்தில் அமைக்கின்ற செய்தி காணப்படுகிறது.

இக்கல்வெட்டு உள்ள சந்திர மௌலீஸ்வரர் கோயில் பல்லவர் காலக் கோயிலாகும். இக்கோயிலின் காலத்தால் முற்பட்ட கல்வெட்டு பல்லவ மன்னன் கம்ப வர்மனின் 866ஆம் ஆண்டைச் சார்ந்தது. எனவே முதலாம் இராஜேந்திரனின் இறப்பிற்கு முன்பே பல்லவர் காலத்திலேயே இக்கோயில் இருந்துள்ளது. இக்கோயிலுள்ள இராஜாதிராஜனின் 1044ஆம் ஆண்டுக் கல்வெட்டைத் தவறாகப் புரிந்து கொண்ட சில ஆர்வலர்கள் இராஜேந்திரன் இறந்தபின் எடுக்கப்பட்ட பள்ளிப்படை கோயில் இதுவாகும் எனக் குறிப்பிடுகின்றனர். இவ்வூரில் வீரமாதேவியின் இறப்பிற்காக தண்ணீர் பந்தல் வைக்கப்பட்டதே அன்றி இராஜேந்திர சோழனின் பள்ளிப்படை இவ்வூரில் இருந்துள்ளதாக எவ்வித குறிப்பும் இல்லை.

இதனை முழுமையாக ஆய்வு செய்ய இவ்வூரில் கள ஆய்வு மேற்கொண்ட பொழுது ஊரின் வடக்கிலுள்ள ஏரிக்கு அருகில் வழிபாடுள்ள ஒரு சிறிய கோயிலையும் வழிபாடு அற்று முற்றிலும் அழிந்த அதிட்டானம் மட்டும் உள்ள மற்றொரு சிவன் கோயிலையும் காண முடிந்தது. அழிந்த சிவன் கோயிலின் அதிட்டானப்பகுதியில் பார்த்திவேந்திராதிபதி வர்மனின் 3 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் பராந்தக சோழன் கால கல்வெட்டுகளும் கானப்படுகின்றன. (இவ்விதழில் செய்யாறு – பிரமதேசம் கல்வெட்டுகள் என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ளன). இராஜேந்திர சோழனின் உடைந்த



கல்வெட்டும் சில துண்டுக் கல்வெட்டுகளும் இக்கோயிலின் அருகில் உள்ளன.

அருகருகில் இரண்டு சிவன் கோயில்கள் இருப்பதும் அவற்றுள் ஒன்றை கைலாசநாதர் கோயில் என்றும் மக்கள் வழங்குகின்றனர். பார்த்தி வேந்திராதிபதி கல்வெட்டுகளில் ஆதித்த கிரகம் என்ற பெயர் குறிப்பிடப் படுகிறது. இக்கோயில் வடக்குப் பகுதியில் தெற்கு நோக்கிய சிறிய கோயிலாக உள்ளது. பார்த்திவேந்திராதிபதி வர்மன் ஆதித்த கரிகாலனின் நெருங்கிய நண்பர் ஆவார். பார்த்திவேந்திராதிபதி வர்மருக்கும் ஆதித்தன் என்ற பெயர் கல்வெட்டுகளில் உள்ளன. ஆனால் இடிந்த கோயிலில் உள்ள பார்த்திவேந்திராதிபதியின் 3ஆம் ஆட்சியாண்டில் முன்மண்டபம், சோபானம் ஆகியவற்றைப் புதியதாக அமைத்து விமானத்தைப் புதுப்பித்து உள்ளனர்.

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**
**வி.பி. யத்திஸ் குமார், சென்னை**

## 84 : 30 செஞ்சி – தெலுங்கு கல்வெட்டு

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டம், செஞ்சி இராஜகிரிக்கோட்டை சர்க்கரைக் குளத்தின் மேற்குப்புற மலைச் சரிவில் 300 மீட்டர் உயரத்தில்




உள்ள சரிவுப் பாறையில் தெலுங்கு கல்வெட்டு உள்ளது. இக்கல்வெட்டு பொ.ஆ.17-18ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. நந்தன வருடம் வைகாசி மாதம் சத்தியமங்கலத்தைச் சேர்ந்த அனுமந்த நாயினி என்பவர் தனது தந்தை கொண்டம நாயினி நலம் பெற வேண்டி திருவேங்கடநாதருக்கு நைவேதியத்திற்கு பூந்தோட்டம் ஒன்றை அமைத்த செய்தி.

**பெ. லெனின், புதுச்சேரி**

## 84 : 31 வேலூர் வட்டத்தில் புதிய கண்டுபிடிப்புகள்

தீர்த்தங்கரர் சிலை: வேலூர் மாவட்டத்தின் வேலூர் வட்டத்தில் வேலூர் மாநகருக்குக் கிழக்கில் தேசிய நெடுஞ்சாலையில் பாலாற்றின் தென்கரையில்



புது வெங்கடாபுரம் என்ற ஊரில் நஞ்சை நிலத்தின் வரப்பில் கிழக்கு நோக்கிய நிலையில் 72X41 செ.மீ. மீட்டர் அளவு உடைய தீர்த்தங்கரர் சிற்பமொன்று அமர்ந்த நிலையில் கைகள் மடியின் மீது தியான முத்திரை கொண்டு உள்ளது. தீர்த்தங்கரரின் தலைக்கு மேல் முக்குடை உயரமாகச் செதுக்கப் பட்டிருக்கிறது. எனினும் முக்குடையும் தீர்த்தங்கரருடைய முகமும் காலப்போக்கில் தேய்ந்துள்ளன. தலைக்கும் முக்குடைக்கும் இடையில் சிறிய பிரபை காணப்படுகிறது. முக்குடைக்கு மேல் பக்கத்தில் உச்சியிலிருந்து இரண்டுப் பக்கங்களிலும் பூவேலைப்பாடுகள் காட்சியளிக்கின்றன. தீர்த்தங்கரரை பின் பக்கத்தில் தாங்கும் திண்டின் முனைகளுக்குப் பின்புறத்தில் தீர்த்தங்கரருக்குப் பக்கத்திற்கு ஒருவராக இரண்டு இயக்கர்கள் நிற்கின்றனர். தீர்த்தங்கரருக்கு அருகில் இருக்கின்ற இயக்கர்களுடைய கைகள் தொடைகளின் மீது கட்டிய வலம்பிதமாகவும் பிறிதொரு கைகள் சாமரம் பிடிக்கும் நிலையிலும் உள்ளன. இயக்கர்களின் தலைகளில் நெடிய மகுடங்கள் அலங்கரிக்கின்றன. இச்சிற்பம் பொ.ஆ. 9ஆம் நூற்றாண்டின் மேலைக்கங்கர் கலைப் பாணியைக் கொண்டுள்ளது. வேலூர் பகுதியில் இக்கால கட்டத்தில் மேலைக்கங்கர்களின் தாக்கம் உள்ளது. சிலையின் ஆகும். நிலத்தின் உழவர்கள் அவர்களுடைய நிலத்தில் புதிய உழவு துவக்கும் பொழுதும் அறுவடையின் பொழுதும் இந்தத் தீர்த்தங்கரருக்குப் படையல் இட்டுக் கற்பூரம் ஏற்றித் தங்களுடைய பணியைத் துவக்குகின்றனர்.



**மேல்மாயில் தீப்பாய்ந்தாள் கல்:** இம்மாவட்டத்தில் காட்பாடி வட்டத்தில் மேல் மாயில் என்ற ஊரின் சாலை யின் கிழக்குப் பக்கத்தில் தீப்பாய்ந்தாள் கல் ஒன்று உள்ளது. இக்கல்லில் ஆண் பெண் இருவர் புடைப்பாகச் செதுக்கப்பட்டுள்ளனர். வீரனின் தலையில் காணப்படும் தலைப்பாகையின் முனை

*இடது பக்கம் சாய்ந்திருக்கிறது இவருடைய வலது கை ஒரு வாளை ஏந்தியிருக்க இடது கை இடது பக்கத்தில் இடுப்பில் இருக்கின்ற ஒரு குறுவாளின் மீது இருத்தப்பட்டிருக்கிறது பெண்ணின் வலது கை தன்னுடைய கணவனை நோக்கி ஒரு மலரைப் பிடித்திருக்கிறது இவளுடைய இடது கை இடுப்பின் மீது இருக்கின்றது தீப்பாய்ந்தாள் சிலையின் உயரம் 70சென்டி மீட்டர் அகலம் 60 சென்டி மீட்டர் ஆகும். இந்தக் கலைப் படைப்பு கி.பி 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது*

**மா. காந்தி, வேலூர்**

## கருத்துப் பரிமாற்றம்

# 85. கல்வெட்டுக் காவலர்கள்

சு. இராசவேலு, தஞ்சாவூர்

*இந்திய வரலாற்றை முறையாக எழுதுவதற்கு முதன்மைச் சான்றுகளாக விளங்கும் கல்வெட்டுகள் இந்தியத் தொல்லியல் துறையின்கீழ் இயங்கும் கல்வெட்டியல் துறை, மாநில அரசுகளின் தொல்லியல் துறைகள், பல்கலைக்கழகங்கள், தனி ஆர்வலர்கள் ஆகியோரால் கடந்த நூற்றாண்டிலிருந்து படி எடுக்கப்பட்டு பதிப்பிக்கப்பட்டு பல தொகுதிகளாக வெளிவந்துள்ளன இவற்றை வரலாற்றாசிரியர்களும் அறிஞர் பெருமக்களும் முதன்மைச் சான்றுகளாகப் பயன்படுத்தியே இந்திய வரலாற்றை எழுதி வருகின்றனர் எனினும் இக்கல்வெட்டுகளைப் பல்வேறு இடர்ப்பாடுகளுக் கிடையில் கண்டுபிடித்து படி எடுத்து பதிப்பித்து பல தொகுதிகளாகவும் ஆய்வுக் கட்டுரைகளாகவும் வெளியிட்டுள்ள கல்வெட்டறிஞர்களின் பங்களிப்பு குறித்து எவ்வித குறிப்புகளும் இதுவரை வெளிவரவில்லை என்பது வியப்பாக உள்ளது கடந்த நூற்றாண்டில் படி எடுக்கப்பட்ட பல இடங்களை நாம் நேரில் சென்று பார்க்கும்பொழுது எவ்வித வசதிகளும் இல்லாத காலகட்டத்தில் இவ்வித ஆய்வுகளை மேற்கொண்ட அறிஞர் பெருமக்களை எண்ணி பெருமிதம் கொள்ளவும் அத்தகைய தன்னலமற்ற பணியை இன்று நம்மால் செய்ய முடியவில்லையே என்ற எண்ண வெளிப்பாடும் வெளிப்படுகிறது அப்பெருமக்களின் கடின உழைப்பும் நம் கண்முன் நிற்கத்தான் செய்கிறது அதன் வெளிப்பாடே இக்கட்டுரை*

*அண்மையில் நானும் பேராசிரியர் சுப்பராயலு மற்றும் ஆய்வு மாணவர் அருண்ராஜ் ஆகியோர் கரூர் மாவட்டத்திலுள்ள இரத்தினகிரி (அய்யர்மலை)யில் 1914ஆம் ஆண்டு படி எடுக்கப்பட்டு ஆண்டறிக்கையில் வெளிவந்துள்ள கோயில் கல்வெட்டுகளை நேரில் சென்று ஆய்வு செய்யச் சென்றோம் 1200 படிக்கட்டுக்கள் கொண்ட மிக உயரமான மலை உச்சியில் இருந்த கோயிலுக்கு செல்ல முடியுமா என்ற தயக்கம் மலை அடிவாரத்திலேயே ஏற்பட்டது கல்வெட்டுத் துறையில் பணியாற்றிய பொழுது தமிழகத்தின் பல்வேறு மலைப் பகுதிகளிலும் மலைகளிலும் கல்வெட்டுத் தொல்லியல் ஆய்வுகள் மேற்கொண்டிருந்திருப்பினும் எனக்கு இம்மலை மீது ஏறுவதற்கு தயக்கம் ஏற்பட்டது பேராசிரியர் அவர்களிடம் வெயில் அதிகமாக உள்ளது, மலை மீது ஏறுவது கடினம் என்றேன் தயக்கத்துடன் இருந்த நாங்கள் பேராசிரியர் மலை மீது செல்ல படி ஏற ஆரம்பித்ததும் இன்று மலை மீது ஏறுவதைத் தவிர வேறு வழி இல்லை என ஏறத் தொடங்கினோம் ஆங்காங்கே இளைப்பாறி மெல்ல மெல்ல இன்னும்*

கொஞ்ச தூரம் தான் கல்வெட்டுகளை பார்த்து விடுவோம் என்ற ஆர்வத்தில் மலை உச்சியை அடையும் முயற்சியில் ஈடுபட்டோம்

அம்மலை மீது இருக்கும் கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்ய விரும்பி வந்திருக்கின்ற சிலர் சிறிது உயரம் ஏறியவுடன் சார் கோயிலுக்குத் தானே செல்கிறீர்கள்? இந்த பூஜைப் பொருட்களை கோயிலில் கொடுத்து விடுங்கள் என எங்களிடமும் சில இளைஞர்களிடமும் கொடுத்துவிட்டு நீண்ட கும்பிடு ஒன்றைப் போட்டுவிட்டு வேண்டுதலை நிறைவேற்றிய நிம்மதியுடன் திரும்பிச் சென்றனர் மலையின் உச்சியில் உள்ள பாறைப் பகுதிகளிலும் உச்சியில் உள்ள கோயில் சுவர்களிலும் கல்வெட்டுகள் காணப்பட்டன கண்டிப்பாக ஒருமுறை மலைமீது ஏறுவதற்கும் இறங்குவதற்கும் 3 மணி நேரத்திற்கு மேல் ஆகும் நாள்தோறும் கோயிலுக்கு மலை அடிவாரத்தில் இருந்துவந்து பூஜை செய்யும் பூசாரியை விசாரித்தோம் காலையில் வந்தால் மாலை தான் திரும்பிச் செல்வாராம், நண்பகல் உணவாக கோயில் நைவேத்திய உணவையே சிறிது உண்பாராம்

நூறு ஆண்டுகளுக்கு முன் இந்த கோயிலின் நிலை எப்படி இருந்திருக்கும்? கே.வி சுப்ரமணிய அய்யர் 1914இல்தான் தனது முதல் கல்வெட்டுக் கள ஆய்வுப் பயணத்தை மேற்கொண்டார் மலையிலேயே தங்கி கல்வெட்டுகளைப் படி எடுத்திருப்பாரா? மலையின் அடிவாரத்தில் இப்பொழுது சில வீடுகளே உள்ளன. நூறு ஆண்டுகளுக்கு முன் வீடுகளே இருந்திருக்காது நாள்தோறும் மலைக்குச் சென்று மலைக் கோயிலில் இருந்த 47 நீண்ட கல்வெட்டுகளை கே வி சுப்ரமணிய அய்யர் படி எடுக்க குறைந்தது 10 நாட்களாவது ஆகியிருக்கும் கண்டிப்பாக இரண்டு மைப்படிகள் எடுக்கவேண்டும் என்பது கல்வெட்டுத் துறையில் நடைமுறையில் உள்ளவழக்கம் உணவிற்கு நிச்சயமாக அவ்வூரில் எவ்வித வசதியும் இல்லை. (நாங்கள் கோயில் மடைப்பள்ளியில் நைய்வேத்திய சாப்பாட்டைத் தான் மதிய உணவாக 3 மணிக்கு மேல் அங்கிருந்தவர்களிடம் கேட்டுச் சாப்பிட்டோம்)

கல்வெட்டாய்வாளர்களின் களப் பயணம் சென்ற 50 ஆண்டுகளுக்கு முன் எவ்வாறு இருந்திருக்க வேண்டும் என்பதைப் பற்றி அறிவதற்கு சில குறிப்புகள் இந்தியக் கல்வெட்டு ஆண்டறிகையில் காணக்கிடக்கின்றன

இந்தியத் தொல்லியல் துறையின் கருவாக 1887ஆம் ஆண்டு முதல் செயல்பட்ட கல்வெட்டுப் பிரிவில் ஒரு சில அலுவலர்களே இருந்துள்ளனர் இருப்பினும் அவர்கள் செய்த மகத்தான பணியில் ஒரு விழுக்காட்டைக்கூட நாம் இப்போது செய்யவில்லை என்ற எண்ணம் தொகுதிகளைப் படிக்கும்பொழுது ஏற்படுகிறது

இரத்தினகிரி மலையிலுள்ள கோயில் சுவர்களில் மட்டுமன்றி மலைச்சரிவுப் பகுதிகளிலும் ஏறுவதற்கும் இறங்குவதற்கும் வழி இல்லாத சரிவான இடங்களிலும் உள்ள கல்வெட்டுகளில் ஒரு கல்வெட்டைக்கூட விடாமல் படிஎடுத்துள்ளனர். எவ்வித வசதியும் அற்று இருந்த காலத்தில் மலைகளிலும் ஆள் அரவமற்ற கோயில்களிலும் கேட்பாரற்றுக் கிடந்த கோயில்களிலும் பல நாட்கள் தங்கி கல்வெட்டுப் படி எடுத்து ஆய்வு செய்து பதிப்பித்துள்ள அறிஞர் பெருமக்களின் பங்களிப்பை நாம் என்றும் மறக்கலாகாது. இன்று ஒளிப்படம் எடுத்து கணினியில் இட்டு பல்வேறு நவீன வசதிகளையும் பயன்படுத்தி பதிப்பிக்கப்பட்ட கல்வெட்டுகளைப் பிரித்து ஆய்வு செய்து பட்டம் பெற்று ஆசிரியர்கள் எனவும் ஆய்வாளர்கள் எனவும் நாம் பெருமை கொள்வது மிகையாகத் தெரிகிறது.

ஜெர்மனி நாட்டைச் சார்ந்த ஹுல்ட்ச் (Hultzsch) *1887* நவம்பர் மாதம் *21* ஆம் நாள் தென்னிந்தியக் கல்வெட்டுகளை படி எடுத்துப் பதிப்பிக்கும் பணியை மேற் கொள்வதற்கு ஆங்கிலேய அரசாங்கம் அவரை நியமித்தது. இவருக்கு முன்னரே பல கல்வெட்டுகள் கண்ணால் பார்த்து கையெழுத்துப் படியாக எடுக்கப்பட்டு சில கல்வெட்டுகளையும் வெளியிட்டுள்ளனர்.

ஜெர்மானியராக இருப்பினும் திராவிட மொழிகளிலும் வடமொழியிலும் புலமை பெற்றிருந்த ஹுல்ட்ச் வேலூர் பகுதியில் தனது ஆய்வு மேற்கொண்டபொழுது அவருக்கு உதவியாக வேலூரைச் சார்ந்த வெங்கையா என்பவரை நியமித்துக் கொண்டார். அக்கால கட்டத்தில் தமிழும் வடமொழியும் தெரிந்தவர் இருப்பின் அவர்கள் எத்துறையில்



இருந்தாலும் அவர்களைக் கல்வெட்டுப் பணிக்கு அரசாங்கம் நியமித்துக் கொள்ளும் உரிமையை ஹுல்ட்ச் பெருமகனாருக்கு அரசு வழங்கி இருந்தது. அவ்வகையில் வெங்கையா அவர்கள் ஹுல்ட்ஸின் முதல் உதவியாளராக தற்காலிக நியமனம் பெற்றார்

அப்பொழுது கல்வெட்டுப் பிரிவின் முகாம் அலுவலகம் பெங்களூரில் செயல்பட்டது. இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறையின் தலைமை இயக்குநராக ஜெ பர்கஸ் (Burgess) என்பவர்இருந்தார் இவரது அலுவலகம் சிம்லாவில் செயல்பட்டது ஆங்கில அதிகாரிகளையும் அயல்நாட்டினரை யும் கோயிலுக்கு சென்று கல்வெட்டுகளைப் படி எடுக்க அன்றைய கோயில்களின் நிருவாகத்தினர் மறுப்புத் தெரிவித்துள்ளதை ஹுல்ட்ச் அவர்களே குறிப்பிட்டுள்ளார் ஸ்ரீரங்கம், திருப்பதி கோயில் கல்வெட்டுகளைப் படி எடுக்க அக்கோயில் நிருவாகிகள் மறுத்துள்ளனர் அவ்வகையில் அவரால் நியமிக்கப்பட்ட வெங்கையா பல கோயில்களுக்கு உள்ளே சென்று கல்வெட்டுகளைப் படி எடுத்து ஹுல்ட்சிற்கு உதவி புரிந்துள்ளார் இருப்பினும் திருப்பதி கோயில் கருவறையைச் சுற்றியுள்ள பகுதிகளில் உள்ள கல்வெட்டுகளைப் படி எடுக்க அவருக்கும் அனுமதி வழங்கப்படவில்லை

இவர்களுடைய பயண விவரங்களில் ஆண்டில் ஏறக்குறைய 3 மாதம் முதல் 6 மாதம் முடிய தொடர்ந்து தென்னிந்தியாவின் பல ஊர்களுக்குப் பயணம் மேற்கொண்டுள்ளதை அறியமுடிகிறது பெரும்பாலும் ரயில் வண்டிப் பயணங்களை மேற்கொண்டு உள்ளூர்ப் பகுதிகளுக்கு மாட்டு வண்டிகளில் சென்றுள்ளனர்

கல்வெட்டு ஆய்விற்குச் செல்லும்பொழுதே இவர்களுடன் கல்வெட்டுப் படி எடுக்கும் உதவியாளர் ஒருவரும் ஒளிப்பட வல்லுநர் ஒருவரும் சென்று உள்ளனர் இவர்கள் நீண்ட நாட்கள் தங்குவதற்கான துணிக் கூடாரம், மற்றும் அவர்களுக்குத் தேவையான பொருட்கள் உள்ள பெரிய இரும்புப் பெட்டிகளையும் எடுத்துச் சென்றுள்ளனர் கல்வெட்டுகளைப் படி எடுத்து அலுவலகம் வந்த பிறகு அவற்றைப் படித்து இன்றைய எழுத்தில் முதல்பாடம் (Transcript) பதிப்பிக்கும் பணியையும் இவர்கள் மேற்கொண்டுள்ளனர். ஒவ்வொரு ஆண்டு அறிக்கையையும் தயாரித்து அவ்வாண்டில் சென்ற இடங்கள், படி எடுக்கப்பட்ட கல்வெட்டு விவரம், சம்பளம் கொடுக்கப்பட்ட செய்தி, பயணப் படி பெற்றமை ஆகியவற்றை சென்னை மாகாணத்தின் ஆளுநருக்கு நேரிடையாகவோ அல்லது தொல்லியல் தலைமை இயக்குநர் வழியாகவோ அனுப்பி அதனை அச்சகத்திற்கு அளித்துள்ளனர். கல்வெட்டு ஆய்வாளர்களுக்கு அவ்வவ் மாவட்ட



ஆட்சியர்கள் பெரிதும் உதவி புரிந்துள்ளனர். மாவட்ட ஆட்சியர்கள் பலர் இவர்களுடன் களப் பணிகளுக்கும் வந்துள்ளனர்.

அக்கால கட்டத்தில் தமிழ்நாட்டின் பல இடங்களில் நாட்டுக்கோட்டை நகரத்தார் கோயில் திருப்பணிகளை மேற்கொண்டிருந்தனர். உள்ளூர் பெருமக்களுக்கு ஆட்சியர் கடிதங்கள் எழுதி அவ்வாறு திருப்பணிகள் மேற்கொள்ள இருப்பின் முதலில் அக்கோயிலின் கல்வெட்டுகளை படி எடுக்க கல்வெட்டு அலுவலகத்திற்குத் தெரிவித்த பிறகே திருப்பணிக்கு அனுமதி வழங்க வேண்டும் என உரிய ஆணை பிறப்பித்துள்ளார். இருப்பினும் சில கோயில்களில் இவற்றையும் மீறி கல்வெட்டு உள்ள சுவர்களை இடித்துப் பிரித்து திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

கல்வெட்டு ஆய்வாளர்களின் மற்றொரு சிறந்த பணி அக்காலத்தில் முக்கியத்துவம் வாய்ந்த கோயில்களையும் கல்வெட்டுகளையும் தேசிய நினைவுச் சின்னமாக அறிவிப்பதற்கு உரிய நடவடிக்கைகளை மேற்கொண்டதுதான். அவ்வாறு பல கோயில்கள் இந்தியத் தொல்லியல் துறையின் கீழ் இன்று உள்ளமை கல்வெட்டுச் சான்றுகளை அடிப்படையாக வைத்து கல்வெட்டு ஆய்வாளர்கள் பரிந்துரைத்ததின் பயனே.

ஆள் அரவமற்ற கோயில்களிலும் வழிபாட்டுத் தலங்களிலும் கல்வெட்டுகளைப் படி எடுப்பதற்கு அக்காலத்தில் சிரமப்பட்டுள்ளனர். வேலூர் அருகில் உள்ள திருவல்லம் கோயிலின் கருவறைச் சுவர் முழுவதுமாக எண்ணெய்ப் பசையை தேய்த்து எடுத்து வெளிச்சமற்ற இருட்டுப் பகுதியில் லாந்தர் விளக்கை வைத்து படி எடுத்துள்ளமையை வெங்கையா குறிப்பிடுகின்றார்.

1903ஆம் ஆண்டு ஹுல்ட்ச் பெருமகனார் நாடு திரும்பி ஹாலே பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகச் சேர்ந்த பிறகும் தென்னிந்திய தொகுதி, எபிகிராபியா இண்டிகா பதிப்புப் பணியில் ஈடுபட்டார் அஞ்சல் வழியாக அவை பெறப்பட்டு பதிப்பிக்கப்பட்டன. கல்வெட்டு அலுவலகம் இக்காலகட்டத்தில் உதகமண்டலத்தில் செயல்பட்டது இக்காலகட்டத்தில் தான் தி.அ கோபிநாதஇராவ், கிருஷ்ணசாஸ்திரி, வெங்கோபராவ் போன்றோர் தற்காலிக கல்வெட்டாய்வு மாணவர்களாக நியமிக்கப் பட்டனர் வெங்கையாவிற்கு கல்வெட்டுஉதவியாளர் என்ற பதவி வழங்கப்பட்டு நிரந்தரம் செய்யப்பட்டார் மேற்குறிப்பிட்ட ஆய்வாளர்கள் கல்வெட்டு ஆய்வு மாணவர்கள் என அழைக்கப்பட்டனர் இவர்களுக்கு கல்லூரி விரிவுரையாளர்களைவிட உயர் ஊதியம் வழங்கப்பட்டது திங்கள் ஒன்றிற்கு ரூ 50 என ஊதியம் அக்காலகட்டத்தில் வழங்கியுள்ளனர் இக்காலகட்டத்தில்தான் உதகமண்டல அஞ்சல் அலுவகத்தில் அலுவலக எழுத்தராகப் பணியாற்றிய கேவி. சுப்பிரமணிய அய்யர் தற்காலிக கல்வெட்டு மாணவர் பதவிக்கு பணியமர்த்தப்பட்டார்.

பெரும்பாலும் கோயில் கல்வெட்டுகளைப் படி எடுக்கும்பொழுது அக்கோயில் வளாகத்திலேயே முகாமிட்டு தேவையான உணவைத் தாங்களே சமைத்து கல்வெட்டுகள் பணி முடியும் வரை அப்பகுதியில் தங்கி படி எடுத்துள்ளனர் கோயிலின் சிற்பங்கள் கல்வெட்டுகளை ஒளிப்படம் எடுக்கும் அலுவலரும் ஒரு உதவியாளரும் எப்பொழுதும் இவர்களுடன் இருப்பர் ஆண்டறிக்கையில் தாங்கள் செல்ல வேண்டிய ஊர்களை முன்னதாகவே வரையறுத்து அதற்கேற்றவாறு களப் பணிகளை மேற்கொள்வர் ஒவ்வொரு ஆண்டும் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுகள் இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கையில் வெளிவந்துள்ளன தொடக்க காலத்தில் அரச மரபுகளின் கால வரிசைப் பட்டியலும் கல்வெட்டுகள்மூலம் வரையறுக்கப்பட்டன. சிறப்புமிக்க கல்வெட்டுகள் அரச மரபுகள் முக்கிய குறிப்புகள் ஆகியவை சிறு குறிப்புகளாக பகுதி இரண்டில் விரிவாக ஆண்டறிக்கைகளில் இடம்பெற்றன பகுதி இரண்டு 1940 வரை வந்த ஆண்டறிக்கைகளில் உள்ளன அதன்பிறகு அப்பகுதி கைவிடப்பட்டது பகுதி ஒன்றில் அட்டவணைப்படுத்தப்பட்ட அ, ஆ, இ, ஈ, உ, ஊ என பிரிக்கப்பட்டது. அட்டவணையில் பகுதி அ என்பது சென்ற ஆண்டில் படி எடுத்துப் படிக்கப்பட்ட கல்வெட்டுகளின் விடுபட்ட குறிப்புகள் (பகுதி இ-ன் தொடர்ச்சி அல்லது செப்புப் பட்டயக் குறிப்புகள்) பகுதி ஆ என்பது அவ்வாண்டில் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுக் குறிப்புகளும் பகுதி இ என்பது நடைமுறை ஆண்டில் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுக் குறிப்புகளும்

பகுதி ஈ என்பது அவ்வாண்டில் எடுக்கப்பட்ட ஒளிப்படங்கள் பட்டியலும் பகுதி உ என்பது வரைபடங்கள் குறித்தும் பகுதி ஊ என்பது இனம் காணப்பட்ட நாணயங்கள் குறித்தும் தெரிவித்தன பின்னர் வந்த ஆண்டறிக்கைகளில் விரிவான வரலாற்றுத் தகவல்கள் கொண்ட பகுதி 2 முற்றிலுமாக 1740ற்குப் பிறகு நிறுத்தப்பட்டது இதற்கு பதிலாக முன்னுரை என்னும் தலைப்பில் வரலாற்றுத் தகவல்கள் குறிப்பாக இடம்பெற ஆரம்பித்தன கல்வெட்டாய்வாளர்களின் கள ஆய்வுப் பயணச் செய்திகளும் இடம் பெறாது சுருக்கமாக அவை குறிக்கப்பட்டன

இந்தியாவின் கல்வெட்டுகள் இல்லையெனில் இந்திய தொன்மை வரலாறு இல்லை என்பது அறிஞர் கேவி. இரமேஷ் அவர்களின் கருத்தாகும். அத்தகைய கல்வெட்டுகள் மக்களின் அறியாமையாலும் நம்பிக்கை களாலும் பாதுகாக்கப்பட்டும் உள்ளன அழிக்கப்பட்டும் உள்ளன பல கோயில்களில் புனரமைப்பு என்ற பெயரில் கல்வெட்டுகள் அழிக்கப் பட்டுள்ளன. ஊர்ப் பகுதிகளில் உள்ள கல்வெட்டுகள், நடுகற்கள் மக்களின் பக்தியாலும் பயத்தாலும் பாதுகாக்கப்பட்டும் உள்ளன தொன்மையான கல்வெட்டுகள் புதையல் இருப்பதை தெரிவிப்பவை எனவும் மக்கள் பாதுகாப்பர். அசோகனுடைய கல்வெட்டு ஒன்றைக் கண்டுபிடித்த வன அலுவலர் சர்மா என்பவர் அவ்வெழுத்துக்களை படம் எடுத்து கல்வெட்டுத் துறைக்கு அனுப்பி வைத்தும் அக்கல்வெட்டின் இருப்பிடத்தை தெரிவிக்க மறுத்துவிட்டார் ஏனெனில் அக்கல்வெட்டு புதையல் பற்றிய குறிப்பைத் தருவதாகக் கருதியதுதான் இதேபோன்று பல கல்வெட்டுகள் / செப்பேடுகள் மறைக்கப்பட்டும் அழிக்கப்பட்டும் உள்ளன இவ்வெழுத்துக்களைப் படிப்பவர் பைத்தியம் ஆவர் எனவும் அவ்வூருக்கு நோய் ஏற்படும் எனவும் கருதுகின்ற மக்களும் உள்ளனர் இவற்றையெல்லாம் நடந்தே கல்வெட்டுகளை அறிஞர்கள் படி எடுத்துள்ளனர்.

கல்வெட்டு உள்ள கற்பலகைகளை அல்லது நடுகற்களை வழிபடுகின்ற ஊர்களில் அக்கல்வெட்டுகளைப் படி எடுக்க மக்கள் அனுமதிக்காத நிகழ்வுகளும் ஏற்பட்டுள்ளன 10 ஆண்டுகளுக்கு முன் சத்தியமங்கலம் மலைப் பகுதியில் உள்ள ஈரெட்டி மலைப் பகுதியில் நடுகல் கல்வெட்டை படி எடுக்கும்பொழுது மலையில் வாழும் இளைஞர்கள் சிலர் அவ்வூருக்கு தீங்கு ஏற்பட்டதாகக் கூறி கட்டுரை ஆசிரியரையும் ஐம்பை ஆசிரியர் பழனியப்பன் அவர்களையும் படி எடுத்த அனைவரையும் சுற்றி வளைத்துப் பிடித்து வைத்துப் பல மணி நேரம் எடுத்துரைத்தபின் விடுவித்தனர் இதேபோன்று கல்வெட்டாய்வாளர் சாந்தலிங்கம் அவர்கள் சேடப்பட்டி அருகில் உள்ள குப்பல் நத்தம் ஊரில் கல்வெட்டை ஆய்வு செய்தபொழுது

அதனைத் திருட வந்தவர் என நினைத்துப் பிடித்து வைத்து பின்னர் விடுவித்த நிகழ்ச்சியும் சுவையானவை.

சென்ற நூற்றாண்டில் இன்றைய வசதி வாய்ப்புக்கள் அற்ற நிலையிலும் கல்வெட்டுகள் குறித்துப் பலரும் அறியாத நிலையிலும் அவ்விடங்களுக்கு களஆய்வு சென்று படி எடுத்து படித்துத் தொகுத்து, பதிப்பித்த மேற்குறித்த கல்வெட்டு ஆய்வாளர்களின் பணி மகத்தானது இதன்மூலம் உண்மையான இந்திய வரலாற்றை உருவாக்குவதற்கு வழி வகுத்த அக்கல்வெட்டு அறிஞர் பெருமக்களின் பணிகளைப் பாராட்டுவோம் உண்மையில் இவர்கள் தான் கல்வெட்டுக் காவலர்கள்; வரலாற்று நாயகர்கள்.

# 86. திருவிந்தளூர்ச் செப்பேடு: இராஜேந்திர சதுர்வேதி மங்கலம்

பா. பாலமுருகன், புதுச்சேரி

தமிழகத் தொல்லியல் துறையினரால் வெளியிடப்பட்ட சோழர்களின் மிகப் பெரிய செப்பேடான திருவிந்தளூர் செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ள பிரமதேய ஊர்களைப் பேராசிரியர் எசுப்பராயலு அவர்களுடன் இணைந்து நேரில் கள ஆய்வு செய்து நிலப்படம் ஒன்றை உருவாக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது அதன் அடிப்படையில் இக்கட்டுரை இங்கு வெளியிடப்படுகிறது திருவிந்தளூர் செப்பேட்டில் பிரம்மதேயக் கொடை இரு நிலைகளில் அளிக்கப்படுகிறது ஒன்று முதலாம் இராஜாதிராஜனால் (1018-1054) அவனது 35வது ஆட்சியாண்டில் அதாவது பொ.ஆ 1053 ல் திருவிந்தளூர் நாட்டைச் சேர்ந்த 11 ஊர்கள் ஒன்றாக்கப்பட்டு 130 பிராமணக் குடும்பங்கள் குடியேற்றப்பட்டன. அதற்கு சோழகுலநாராயண சதுர்வேதிமங்கலம் என்று பெயர் இடப்பட்டது. இந்த பிரம்மதேயக் கொடையானது தன் தமையன் விக்கிரம சோழபாண்டியன் என அழைக்கப்பட்ட இரண்டாம் இராஜேந்திரசோழனின் வேண்டுதலுக்கு இணங்க வழங்கப்பட்டது கொப்பத்துப் போரில் முதலாம் இராஜாதிராஜன் வீரமரணம் அடைந்தவுடன், சோழப்படைகளை தொய்வடைய விடாமல் அப்போரினை தலைமைதாங்கி சாளுக்கியப் படைகளை வீழ்த்தியவன் இரண்டாம் இராஜேந்திரன் (1052-64) ஆவான் இப்போரில் கண்ட வெற்றியின் நினைவாக ஏற்கனவே தன் அண்ணனால் உருவாக்கப்பட்ட சோழகுலநாராயன சதுர்வேதிமங்கலத்தில் கொடுக்கப்பட்ட 11 ஊர்களோடு சேர்த்து மேலும் 34 புதிய பிரம்மதேய ஊர்களை திருவிந்தளூர் நாடு மற்றும் குறுக்கை நாட்டு பகுதியில் உள்ள சில நிலங்களை ஒன்றாக்கி அதில் 730 பிராமண குடியேற்றங்களை ஏற்படுத்தினான் அதற்கு இராஜேந்திர சதுர்வேதிமங்கலம் என்று புதிய பெயர் இடப்பட்டது இந்நிகழ்வு இரண்டாம் இராஜேந்திர சோழனின் நான்காம் ஆட்சி ஆண்டில் (பொ.ஆ 1056) ஆணையிடப்பட்டது புதிதாக உருவாக்கப்பட்டுள்ள இந்த பிரம்மதேயக் குடியேற்றத்தில் பயன்பெறக்கூடியவர்கள் பெரும்பாலும் சோழமண்டலத்தை சேர்ந்த பழைய பிரமதேய ஊர்களிலிருந்து வந்த பட்டர்களாக உள்ளனர் மேலும் சோழர் ஆட்சிக்குட்பட்ட பாண்டிய நாடு மற்றும் தொண்டை நாட்டுப் பகுதியைச் சேர்ந்தவர்களும் நிலதானம் பெற்றுள்ளனர்

அரசனின் இந்த ஆணை வழங்கப் பெறுவதற்கு முன்பே அவ்வூர்களில் உரிமை உடையோராய் இருந்த குடிகளை நீக்கிவிட்டுக் காராண்மை, மீயாட்சி அனைத்தையும் உள்ளடக்கியதாக 730 சதுர்வேதி பட்டர்களுக்கு

வரி நீக்கிப் பிரம்மதேய இறையிலியாக 44 ஊர் வழங்கப்பட்ட செய்தியை இச்செப்பேடு கூறுகிறது. பிராமண பயனாளர்களை தவிர்த்து பிற தொழில் செய்யும் மக்களுக்கும் சிறிய அளவிலான பங்குகள் பகிர்ந்தளிக்கப்பட்ட செய்தியும் இவ்வேட்டில் குறிக்கப்பட்டு இருக்கிறது அவ்வகையில் வைத்தியர், கணக்கர், அம்பட்டர், தோல்கருவி செய்வோர், பானைகள் செய்வோர், நாவிதர், இடையர் மற்றும் பல தொழில் கலைஞர்களும் ஊர் அல்லது உள்ளூர் பகுதியை ஒட்டிய பிடாகைகளில் குடிஅமர்த்தப்பட்டனர். ஒரு சில கலைஞர்கள் பிற பகுதிகளில் இருந்து வந்தும் குடியேற்றப்பட்டனர் இப்பிரமதேயங்களில் உள்ள ஊர் மற்றும் பிடாகைப் பகுதிகளில் அமைந்துள்ள கோயில்களுக்கும் நிலம் தானமாக வழங்கப்பட்டுள்ள செய்தியை இச்செப்பேட்டு கூறுகிறது இராஜேந்திர சதுர்வேதி மங்கலம் மொத்தம் 1600 வேலி நிலங்களை உள்ளடக்கிய பகுதியாகும் இப்ப்பிரமதேயத்தில் இணைக்கப்பட்ட 44 ஊர்களும் ஒரே சீரான பரப்பளவைக் கொண்டவை அல்ல. அவை சுமார் 3 வேலி முதல் 228 வேலி வரை பரப்பைக் கொண்டுள்ளன (பார்க்க அட்டவணை 1) இதில் சுமார் 80,000 கலம் நெல் விளைந்ததாகத் தெரிகிறது. இவை அனைத்துக்கும் இங்கு குடி அமர்த்தப்பட்ட பிராமணர்களே முழுவதும் உரிமை உடையவர் ஆவர்.

இராஜேந்திர சதுர்வேதிமங்கலதின் எல்லைகளாக சொல்லக்கூடிய கிழக்குப் பகுதியில் இருந்து தொடங்கி பிடாகை மற்றும் உள்ளூர்ப் பகுதிகளில் அமைந்துள்ள ஊர்களைக் கண்டறிய முடிந்தது பெரும்பாலான ஊர்கள், வாய்க்கால்கள், ஆறுகள் மற்றும் கோயில்களின் பெயர்கள் செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளவாறு அப்படியே இன்றும் அழைக்கப்படுகிறது அதேபோல சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்பு எவ்வளவு அளவு நிலம் ஒவ்வொரு ஊருக்கும் கொடுக்கப்பட்டதோ பெரும்பாலும் அதே அளவு மாறாமல் இன்றும் இருக்கும் விதமாய் உள்ளன ஊர்களுக்குள் உள்ள இடைவெளி சுமார் 1 முதல் 3 கிமீ தூரம் தான் உள்ளது பிடாகையில் அமைந்துள்ள சிறுசிறு கோயில்கள் இன்றும் உள்ளூர் உழுகுடி மக்கள் வழிபாட்டில் இருந்து வருகின்றன

இராஜேந்திர சதுர்வேதி மங்கலத்தின் எல்லையானது வடகிழக்கே உள்ள பிடாகையான விட்டிலூரில் தொடங்கி (செப்பேடு எண் 29-6 வரி பின்பக்கம்) தெற்கு மற்றும் தென்மேற்காக இன்றைக்கும் செப்பேட்டில் குறிப்பிடப் பட்டுள்ளவாறே அதே பெயரில் இருக்கக் கூடிய ஊர்களான சேமங்கலம், நத்தம், பனம்பள்ளி, சேந்தன்குடி, திருவிந்தளூரை தென் எல்லையாக வைத்து (காவிரி ஆறு) மேலும் வடமேற்கு மற்றும் வடக்கே உள்ள ஆலங்குடி, நீடூர், திருப்பாலைக்குடி, வில்லிய நல்லூரை வட எல்லையாக வைத்து (பழவனாறு) கிழக்கு மற்றும் தென்கிழக்காக சென்று முன்பு தொடங்கின விட்டிலூரில் சேர்கிறது (செப்பேடு எண் 54- 20 வரி பின்பக்கம்) இது அல்லாமல் வேறு நான்கு எல்லைகள் மூன்று நான்கு முறை குறிப்பிடப்பட்டிருக்கின்றன

இவ்வெல்லைகள் இராஜேந்திர சதுர்வேதி மங்கலத்தினைச் சுற்றியும் உள்ள பிடாகைப் பகுதியில் மேற்கே இரண்டும், கிழக்கே இரண்டும் ஆக உள்ளன. முதல் எல்லையானது (செப்பேடு எண் 55-1 வரி முன்பக்கம்) திருவிந்தளூர் வடகீழ்முலையில் தொடங்கி காவிரியாற்றின் வடகரையிலுற்று மீண்டும் அதே இடத்தில் வந்து சேர்கிறது (செப்பேடு எண் 56-20 வரி முன்பக்கம்). இரண்டாவது எல்லை அன்னியூரில் தொடங்கி (செப்பேடு எண் 56-1 வரி பின்பக்கம் - செப்பேடு எண் 57-6 வரி பின்பக்கம்) மீண்டும் தொடங்கிய இடத்திலேயே வந்து முடிகிறது. இந்த இரண்டு எல்லைகளும் குறுக்கை நாட்டுப் பகுதியில் உள்ளன பிரம்மதேயமாக மாற்றப்படும் போது இவை இராஜேந்திர சதுர்வேதி மங்கலத்தோடு இணைக்கப்பட்டுள்ளன மூன்றாவது எல்லையானது அன்னியூர் வடவெல்லையில் தொடங்கி (செப்பேடு எண் 57-7-9 வரி பின்பக்கம்) முழையூர் நில எல்லைப்பகுதியையும் உள்ளடக்கி மீண்டும் முன்பு தொடங்கின இடத்திலேயே முடிவடைகிறது (செப்பேடு எண் 60-17 வரி பின்பக்கம்) நான்காவது எல்லையானது சேமங்கலத்து வடமேல்முலையும், நாங்கூர் நாட்டு எல்லையும் கூடின இடத்தில் தொடங்கி (செப்பேடு எண் 60-19-20 வரி பின்பக்கம்) ஆலைவேலி உள்ளிட்ட பகுதியை உள்ளடக்கி மீண்டும் அதே இடத்தில் முடிகிறது (செப்பேடு எண் 62-16 வரி பின்பக்கம்). இவ்வாறு இப்பெரிய நான்கு எல்லைகளையும் இராஜேந்திர சதுர்வேதி மங்கலத்துக்கு கொடையாக அளிக்கப்பட்டுள்ளன.

திருவிந்தளூர் செப்பேட்டில் சொல்லப்பட்டுள்ள பிடாகைப் பகுதியில் அமைந்துள்ள ஊர்களைக் கொண்டு கீழுள்ள நிலப்படம் செய்யப் பட்டுள்ளது இது ஒரு முன்னோடியே. இச்செப்பேட்டின் தகவல்களை வைத்து கொண்டு மேலும் கள ஆய்வு செய்தால் ஒரு முழுமையான படத்தை உருவாக்க முடியும்

முதலாம் இராஜராஜன் காலத்தில் அட்டவணையில் உள்ள வரிசை எண் 10, 12, 15-17, 19, 23, 28, 29, 31, 32 ஆகிய 11 ஊர்களும், மற்றவை இரண்டாம் இராஜேந்திரன் காலத்திலும் இணைக்கப்பட்டன

அட்டவணை 1: இணைக்கப்பட்ட ஊர்களின் பரப்பளவும் நெல்விளைச்சலும்

| வ. எண் | ஊர் பெயர் | நில அளவு (வேலி) | நெல்அளவு (கலம்) |
|---|---|---|---|
| 1 | அகனக்குடி | 29.5 | 1200 |
| 2 | ஆனைநல்லூர் (ஆனந்தாண்டவபுரம்?) | 25.5 | 1200 |
| 3 | அருமொழிதேவ நல்லூர் | 63.5 | 2600 |
| 4 | அருவாப்பாடி | 22.5 | 1600 |
| 5 | சேமங்கலம் | 41.75 | 2500 |

| | | | |
|---|---|---|---|
| 6 | சாக்கியப்பள்ளி | 8.75 | 250 |
| 7 | சமணப்பள்ளி | 3.25 | 20 |
| 8 | செம்பியன் நென்மலி | 8 | 350 |
| 9 | ஏனாதிமங்கலம் | 14.25 | 800 |
| 10 | கள்ளார் மங்கலம் | 15.5 | 1200 |
| 11 | கங்கைகொண்ட சோழநல்லூர் | 23 | 1000 |
| 12 | கரம்பைக்குடி | 48 | 2400 |
| 13 | கருப்பூர் | 14.25 | 800 |
| 14 | கடுவன்குடி | 49 | 2400 |
| 15 | கீழ்நாகன்குடி | 37.5 | 1600 |
| 16 | கொற்றநல்லூர் | 21.5 | 1650 |
| 17 | கொற்றன்குடி | 9.5 | 450 |
| 18 | கோட்டூர் | 14 | 750 |
| 19 | கூத்தனூர் | 37.25 | 2000 |
| 20 | மணிகங்கை | 11.75 | 650 |
| 21 | மதுராந்தக நல்லூர் | 228.5 | 11500 |
| 22 | மேற்சென்னி நல்லூர் | 20 | 1000 |
| 23 | மீநாகன்குடி | 8 | 500 |
| 24 | நாரண மங்கலம் | 8.75 | 560 |
| 25 | நெல்வாயில் | 16.5 | 910 |
| 26 | நெடுஞ்சேரிக்களா சாசனமங்கலம் | 14 | 1000 |
| 27 | பனம்பள்ளி | 75.5 | 2500 |
| 28 | பஞ்சவநல்லூர் | 37.25 | 2000 |
| 29 | பெரியன் குடி | 5.5 | 110 |
| 30 | இராஜேந்திர சிகாமணி நல்லூர் | 26.5 | 1150 |
| 31 | தத்த மங்கலம் | 44.75 | 2500 |
| 32 | திருவிந்தளூர் | 65 | 1000 |
| 33 | வானவன் நல்லூர் | 17 | 1200 |
| 34 | உழுத்துக்குப்பை | 33.5 | 1800 |
| 35 | அழகியசோழ நல்லூர் | 19 | 900 |
| 36 | அன்னியூர் ஏகபோகம் | 3 | 240 |
| 37 | எயினன்குடி | 36 | 1890 |

| | | | |
|---|---|---|---|
| 38 | கந்தணம்புத்தூர் | 83 | 5000 |
| 39 | பூபாலசேகர நல்லூர் | 53.5 | 2880 |
| 40 | பூதிகுடி | 15 | 800 |
| 41 | இராஜஸ்ரயமங்கலம் | 113.5 | 6000 |
| 42 | திருப்பாலக்குடி | 62 | 2500 |
| 43 | வைப்பூர் | 21 | 1230 |
| 44 | விட்டிலூர் | 55.5 | 5000 |

# 87. புதிய வெளியீடுகள்

**பொ.இராசேந்திரன் மற்றும் சொ.சாந்தலிங்கம், வரலாற்று நோக்கில் விருதுநகர் மாவட்டம், ஜூன் 2014, பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையம், மதுரை, பக்கங்கள்–256, விலை ரூ.250/–**

*பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாக விளங்கும் இன்றைய விருது நகர் மாவட்டம் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் தொடங்கி இந்திய விடுதலைக் காலம் வரை தொடர்ச்சியான வரலாற்றைக் கொண்ட மாவட்டமாக விளங்கி வருகின்றது வட்டார வரலாறுகளை நுணுகி ஆய்வு செய்து அவ்வட்டாரத்தின் பன்முகத்தன்மைகளை அறிய முற்படுவது அன்மைக்கால வரலாற்று ஆய்வுகளில் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. அவ்வகையில் விருது நகர் மாவட்ட வரலாற்றை பல கள ஆய்வுகளின் மூலம் அறிந்து அதனை நூலாக வெளியிட்டுள்ளனர்*

*நூல் ஆசிரியர்கள் இருவரும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் நீண்ட காலமாக தமிழகத்தின் தென்பகுதியில் பணியாற்றிய காரணத்தால் இப்பகுதிகளில் தொடர்ந்து கள ஆய்வுகளை மேற்கொண்டு தரவுகளைச் சேகரித்து நூலாக்கம் செய்துள்ளனர் வரலாற்று ஆய்வு நூல்கள் கள ஆய்வுகளுடன் செய்யப்படும் பொழுது அவை முழுமை பெற்ற முதன்மைச் சான்றுகளைக் கொண்டு விளங்கும் நூல்களாக அமையும் அவ்வகையில் வரலாற்று நோக்கில் விருது நகர் மாவட்டம் ஒரு சிறந்த நூலாகும்.*

*தமிழகத்தில் தொல்பழங்காலத்தைச் சார்ந்த சான்றுகள் மிக அரிதாகவே கிடைத்துள்ளன என்ற நிலையை மாற்றி ஆவியூரில் கிடைத்த கைக்கோடரி தொடங்கி திருத்தங்கல், வெம்பக்கோட்டை ஆகிய பகுதிகளில் கிடைக்கின்ற நுண்கற்காலக் கருவிகளின் வரலாற்றுடன் பரவலாகக் கிடைக்கின்ற இரும்புக்கால ஈமச் சின்னங்களையும் வகைபடுத்தி சங்ககாலம், முற்பாண்டியர் காலம், சோழர் காலம், பிற்பாண்டியர் காலம், மதுரை நாயக்கர் காலம் ஆகிய வரலாற்றை அழகு தமிழில் உரிய சான்றுகளுடன் ஆக்கியுள்ளனர் நூலாசிரியர்கள்*

*வரலாற்றுச் சிறப்பு மிக்க ஊர்களைப் பற்றிய குறிப்புகள் இந்நூலில் இடம் பெற்றிருப்பது மேலும் ஆய்வு செய்பவர்களுக்குப் பயனுள்ளதாக அமையும் ஒவ்வொரு ஊரின் வரலாறும் உரிய சான்றுகளுடன் கையாளப்பட்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இப்பகுதியில் இருந்த நாட்டுப் பிரிவுகள் வரலாற்றுச் சிறப்பு மிக்க கோயில்கள் அவற்றுடன் தொடர்புடைய வரலாறு ஆகியவை விரிவாகப் பேசப்பட்டுள்ளன.*

*குறிப்பாக திருவல்லிப்புத்தூர் வைணவத் தலம் பற்றிய செய்திகள் விரிவாக இந்நூலில் இடம்பெற்றுள்ளது. இப்பகுதியிலுள்ள குடைவரைக்*

கோயில்கள், தேவாரப்பாடல் பெற்ற திருச்சுழியல் பள்ளிப்படைக் கோயிலான பள்ளிமடம் வணிக முக்கியத்துவம் வாய்ந்த அருப்புக்கோட்டை, சமணத் தலங்களான கோவிலாங்குளம், தொப்பலாக்கரை, பந்தல்குடி ஆகிய ஊர்களின் வரலாறு இந்நூலில் விரிவாகப் பேசப்படுகிறது இந்நூலின் பின்னிணைப்பாக பல பாடல் கல்வெட்டுகளும் உரிய ஒளிப்படங்களும் இடம் பெற்றுள்ளமை நூலிற்கு அணி சேர்ப்பதாக உள்ளது அழகிய கட்டமைப்புடன் தரமான தாளுடன் நேர்த்தியான அச்சுடன் வெளிவந்துள்ள இந்நூலை வரலாற்று ஆர்வலர்கள் மட்டுமன்றி அனைவரும் படிக்க வேண்டும்.

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**

**பொ.இராசேந்திரன் மற்றும் சொ.சாந்தலிங்கம், மாமதுரை, மே. 2015, பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையம், மதுரை, பக்கங்கள்–282, விலை ரூ.250/–**

உலகின் தொன்மையான வரலாற்றைக் கொண்ட நகரங்களுள் முதன்மையாக விளங்கி வருகின்ற மதுரை மாநகரைப் பற்றிய நூல்கள் பல வந்திருப்பினும் தொடர்ச்சியான சான்றுகளுடன் விரிவான ஆய்வுகள் குறைந்த அளவிலேயே உள்ளன என்ற குறையைப் போக்கும் வகையில் ஆசிரியர்கள் தங்களின் நீண்ட கால உழைப்பால் வெளிவந்துள்ள நூல் மாமதுரை என்னும் இந்நூல் சுமார் 2500 ஆண்டு கால வரலாற்றை இந்நூலில் இடம் பெறச் செய்துள்ள ஆசிரியர்கள் பாராட்டுக்குரியவர்கள். காலம் தோறும் மதுரை என்ற தலைப்பில் இந்நூலின் 100 பக்கங்களில் கால நிரல்படி மதுரையின் வரலாற்றைத் திறம்பட எழுதியுள்ளனர்.

மதுரை மாநகரில் உள்ள முக்கிய கோயில்களான மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில், திருவாதவூர், திருப்பரங்குன்றம், அழகர் கோயில், கூடலழகர் பெருமாள் கோயில் முதலான பலகோயில்களின் வரலாறுகள் மதுரை கோயில்கள் என்ற தலைப்பில் இந்நூலில் பதிவு செய்யப் பட்டுள்ளதுமதுரைப் பகுதி பல சமயங்களின் உறைவிடமாக இருந்துள்ளது. அவ்வகையில் இப்பகுதியில் நிலவிய சமணம் குறித்து விரிவாக கல்வெட்டுத் தரவுகளுடன் இந்நூலில் பேசப்படுவதுடன் பின்னர் வளர்ந்த இசுலாமியம், கிறித்துவம் ஆகியவற்றின் செல்வாக்கு குறித்தும் அலசப்படுகிறது

வரலாற்றுத் துளிகள் என்னும் தலைப்பில் மதுரையைக் குறித்த பல அரிய தகவல்கள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. படிப்பவர்களின் மனதில் நிற்கும் வகையில் இவை துணுக்குகளாக அளிக்கப்பட்டுள்ளன

கல்வெட்டுகளாக பல பாடல் கல்வெட்டுகளும் கள ஆய்வுகளில் கண்டுபிடிக்கப்பட்ட பல அரிய கல்வெட்டுகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளமை சிறப்புக்குரியது. மதுரை நகரில் உள்ள வையை ஆற்றின் கரைப்பகுதிகளில் கள ஆய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட தொல்லியல்

எச்சங்கள் நீண்ட பட்டியலாக இந்நூலில் ஆசிரியர்கள் தந்துள்ளனர். இவை மேற்கொண்டு ஆய்வு செய்யும் ஆய்வாளர்களுக்கு பயனுள்ளதாக அமையும். பின்னிணைப்பாக அரச மரபினர் பட்டியல், அழகான ஒளிப்படங்கள் ஆகியவை இந்நூலிற்கு அழகு சேர்க்கின்றன. வரலாற்று ஆர்வலர்களுக்கு மதுரையின் வரலாற்றை அறிவதற்கு ஒரு சிறந்த நூல் இதுவாகும்.

**ந. அதியமான், தஞ்சாவூர்**

**தமிழகக் காசுகள், ஆறுமுக சீதாராமன், 2014, தனலெட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர், விலை ரூ. 1,200/--, 1/4 டெம்மி, 424 பக்கங்கள், 1625க்கும் மேற்பட்ட படங்கள்**




பொ.ஆ.மு. 400 முதல் பொ.ஆ. 1845 வரை சுமார் 2200 ஆண்டுகளில் வெளியிடப்பட்டு தமிழகத்தில் அரிதாகக் கிடைத்துள்ள 1,625க்கும் மேற்பட்ட வகைவகையாக காசுகளை 38 தலைப்புகளில் இந்நூல் விளக்குகின்றது. பல பேரரசுகளின் வெளியீடுகள், சிற்றரசுகளின் வெளியீடுகள், வெளிநாட்டுக் காசுகள், சமயம் தொடர்பான காசுகள் என்று அமைந்துள்ள 38 தலைப்புகளிலும் அரசுகள், அரசர்களின் வரலாறு சுருக்கமாகத் தரப்பட்டுள்ளமை, காசுகளின் வரலாற்றுப் பின்புலத்தை அறிந்து கொள்ள பெரிதும் உதவக் கூடியதாக உள்ளது. ஒவ்வொரு காசிலும் உள்ள உருவப் பொறிப்புகள், எழுத்துப் பொறிப்புகளின் விளக்கத்துடன் கிடைத்த இடம், செய்யப்பட்ட உலோகம், எடை முதலிய குறிப்புகளும் உள்ளன. காசுகளுக்கு எண் தரப்பட்டுள்ளமை இந்நூலில் செய்திகளை எடுத்தாள்வோர்க்கு ஒரு வசதியாக அமைகிறது.

இதுவரை தமிழக நாணயவியலில் நிகழ்ந்த ஆய்வுகள் வெளியிடப்பட்ட நூல்கள், கட்டுரைகள் அனைத்தும் இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ளன. தமிழ் - பிராமி, கிரந்தம், தமிழ், நாகரி, தெலுங்கு, கன்னடம், பாரசீகம், ஆங்கிலம், ரோமன் எனப் பல எழுத்துகளிலும் அமைந்துள்ள இக்காசுகளின் வாசகங்களைப் படித்து வெளியிட்டிருப்பதும் உதவிய தரவுகளைச் சொல்வதும் ஒரு சிறப்பாகும்.

இந்நூலாசிரியரும் பிறரும் தனித்தனி அரசுகள் குறித்தும், புதிய கண்டுபிடிப்புகள் குறித்தும் தனித்துத் தொகுத்தும் நூல்கள் வெளியிட்டுள்ள

போதிலும் இன்றுவரை தமிழகத்தில் நிகழ்ந்த நாணயவியல் ஆய்வின் முழுத் தொகுப்பாக இந்நூல் அமைகின்றது. தமிழகக் கல்வித் திட்டத்தில் விருப்பப் பாடமாக நாணயவியல் சேர்க்கப்பட்டால் இந்நூல் ஒரு சிறந்த பாடநூலாக அமையும் வகையில் எளிமையாக அமைந்துள்ளது. தமிழகத்தின் நாணயவியலின் சிறப்பினை உலகளவில் அறியத்தர இந்நூலின் ஆங்கில வடிவம் வெளிவருவது அவசியமாகும்.

**சு. இராசகோபால், சென்னை**

**ஸ்ரீபுரந்தான், இல. தியாகராஜன், 2014, காமரசவல்லி பதிப்பகம், அரியலூர், 1/4 டெம்மி, பக். 30, படங்கள் 70 பக்கம், விலை ரூ. 250/–**




முதலாம் பராந்தக சோழனால் 'பெரிய ஸ்ரீவானவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்று பெயரிடப்பட்டு வேத பிராமணர்களின் ஊராகக் காவிரிக் கரையில் பெரிய அளவில் பரிணமித்த இவ்வூர் முதலாம் இராசராச சோழனால் ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதிமங்கலம் என்று பெயரிடப்பட்டு இன்று ஸ்ரீபுரந்தான் என்று பெயர் மருவிச் சிற்றூராக இவ்வூர் அரியலூர் வட்டத்தில் வரலாற்றுச் சான்றுகளுடன் விளங்குகின்றது. ஒன்றுக்கு மேற்பட்ட சிவன், திருமால், அய்யனார் கோயில்கள் இங்கு இன்று இருப்பதைக் கொண்டு அன்றைய சமய, சமூக, பொருளாதார நடவடிக்கைகளில் இவ்வூர் எவ்வளவு சிறப்புடன் விளங்கியிருக்கும் என்பதை இந்நூலில் சொல்லப்படும் செய்திகள் நமக்கு அறியத் தருகின்றன. 1982லிருந்து இவ்வூர் குறித்த செய்திகளைக் கட்டுரைகளாகவும் நாளிதழ் செய்திகளாகவும் வெளியிட்டு வந்த தியாகராஜன் இன்று முழு வரலாற்று நூலாக வெளியிட்டுள்ளார். இருபதுக்கு மேற்பட்ட கல்வெட்டு வாசகங்கள் செய்திக் குறிப்புகளுடன் இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளன. கோயில் கலை சிற்பக்கலை குறித்து சேர்க்கப்பட்டுள்ள நூற்றுக்கும் மேற்பட்ட படங்களில் கல்வெட்டுகளின் நேரடிப் படங்களம் சேர்க்கப்பட்டுள்ளது ஒரு சிறப்பாகும். கோயில் சுவர்களில் உள்ள சித்திரமேழிப் பெரிய நாட்டார் சிற்பங்களின் படங்கள்

விளக்கங்களுடன் இந்நூலில் தரப்பட்டுள்ளன. இன்றைய ஊர் சமுதாயத்தை எடுத்துச் சொல்ல இன்று விளங்கும் குடும்பப் பெயர்களின் பட்டியலும் இந்நூலில் உள்ளது. உலகளாவிய செய்திகளில்

இவ்வூரிலிருந்து திருடப்பட்டு ஆஸ்திரேலியா சென்று திரும்பிய நடராஜர் செப்புத் திருமேனியின் படங்கள், இந்திய பிரதமரிடம் ஆஸ்திரேலிய பிரதமர் அச்சிற்பத்தை ஒப்படைக்கும் காட்சிப் படம், நாளிதழ் செய்தி நறுக்குகளின் படங்கள், 'இண்டர்போல்' அதிகாரிகளின் ஆய்வுப் படங்கள் என்று அனைத்தும் இந்நூலில் ஆவணப்படுத்தப்பட்டுள்ளன.

வரலாற்றுக் கோணத்தில் மட்டும் அமையாது இன்றைய சமயப் பற்றாளர்களின் வசதிக்காகவும் இந்நூல் வரலாற்றுச் சமூக, சமய நூலாக அமைந்திருப்பது ஒருவகை கலவைத் தன்மையுடைய படைப்பாகும்.

**சு. இராசகோபால், சென்னை**

**சுருக்கமான தென்னிந்திய வரலாறு –சிக்கல்களும் விளக்கங்களும்;** (Noboru Karashima, A Concise History of South India, Issues and Interpretations, Oxford University Press, 2014), XVI+396 பக்கங்கள் **(ஒளிப்படங்கள், நிலப்படங்கள், வரைபடங்களுடன்) விலை ரூ.995/–**

ஒருங்கிணைந்த தென்னிந்திய அரசியல் வரலாறு குறித்த நூல்கள் கடந்த காலங்களில் கிருஷ்ணசாமி அய்யங்கார் (1918) நீலகண்ட சாஸ்திரி (1955) யஸ்தானி போன்ற வரலாற்று ஆசிரியர்களால் எழுதப்பட்ட பின் நீண்ட காலம் கழித்து இதுநாள் வரை தென்னிந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் தரவுகளையும் கல்வெட்டு, நாணயவியல் தரவுகளையும், கள ஆய்வுகள் மூலம் பெறப்பட்டத் தரவுகளையும் ஒருங்கிணைத்து எழுதப்பட்ட நூல் இதுவாகும்.

தென்னிந்தியக் கல்வெட்டுகளையும் தொல்லியல் ஆய்வுகளையும் முதன்மைச்சான்றுகளாகப் பயன்படுத்தி வரலாற்று நூல்களை எழுதியுள்ள ஜப்பானியப் பேராசிரியர் நபுரு கராசிமா அவர்களுடன் இணைந்து பல ஆய்வுகளில் ஈடுபட்ட புகழ்பெற்ற வரலாற்றுப் பேராசிரியர்களான ஒய்.சுப்பராயலு, ப.சண்முகம், ஆர். மகாலட்சுமி, மற்றும் ஜப்பானியப் பேராசிரியர்கள், இந்து நாளிதழைச் சார்ந்த பார்வதி மேனன் ஆகியோர் தென்னிந்தியாவின் வரலாற்றைக் கால நிரல்படி பகுத்து செம்மையாக இந்நூலை எழுதியுள்ளனர்.

வரலாற்றிற்கு முற்பட்ட காலம் முதல் 21ஆம் நூற்றாண்டு வரை (அண்மைக்காலம் வரை) தென்னிந்தியாவில் ஏற்பட்ட அரசியல், சமூக, சமய மாற்றங்கள் குறித்து இந்நூல் விரிவாகப் பேசுகிறது.

அண்மைக்கால வரலாற்று ஆசிரியர்களால் பெரிதும் விவாதத்துக்குள்ளான ஆரியர் திராவிடர் பற்றிய கருத்துக்கள், தென்னிந்திய சிந்துவெளி

நாகரிகத் தொடர்புகள், தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழ் நாட்டில் வரலாற்றுத் தொடக்க காலத்திய அரசு, அரசுருவாக்கம் பற்றிய கருத்துகள் ஆகியவற்றைத் தக்க சான்றுகளுடன் ஆசிரியர்கள் கையாண்டுள்ளனர்.




பல்லவர் காலத்தில் நிலவிய பக்தி இயக்கம், கோயில் கட்டுமானம் அதன் வழி சமூக நிலையில் ஏற்பட்ட மாற்றங்கள், நில உடைமை, வேளாண் வளர்ச்சி, நீர்ப்பாசன முறை, இடைக்காலச் சோழர்- பாண்டியர் காலத்தில் ஏற்பட்ட சமய சமூகப் பொருளாதார நிலை,12 ஆம் நூற்றாண்டளவில் தென்னிந்தியாவில் தோன்றிய சமூக அமைப்புக்களான சித்திர மேழி பெரிய நாட்டார் மற்றும் இடங்கை வலங்கைப் பிரிவுகளின் தாக்கம் ஆகியவற்றை விரிவாக இந்நூல் குறிப்பிடுகிறது.

சோழ பாண்டியப் பேரரசுகளுக்குப் பின் தென்னகத்தில் ஏற்பட்ட விஜயநகர சாம்ராஜ்ஜியம், தக்காண சுல்தான்களின் ஆதிக்கம் அக்காலகட்டத்தில் வளர்ச்சி பெற்ற தொழில்கள், வாணிகம் ஆகியவைக் குறித்தும் இதனால் புதியதாக உருவாக்கப்பட்ட பிரிவுகளான உசாவடி, பேட்டைகள் ஆகியவை குறித்தும் இந்நூலில் பேசப்படுகிறது.

சாஸ்திரியார் தனது தென்னிந்திய வரலாற்று நூலை விஜய நகரப் பேரரசு காலத்துடன் முடித்திருந்தார். ஆனால் தற்பொழுது வந்துள்ள இந்நூலில் 16 ஆம் நூற்றாண்டிற்குப் பின் ஐரோப்பியர் வருகை அவர்களின் அரசியல் ஆதிக்கம் கிழக்கிந்திய குழுமம், சமஸ்தானங்கள், அக்கால கட்ட சமூக அமைப்பு, தொழில்வளர்ச்சி, கல்வி- கலைகளின் வளர்ச்சி, நிலமானிய முறை ஆகியவை குறித்து ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

*தற்கால வரலாற்று நிலைமைகள், மொழிக்கொள்கை, திராவிட இயக்க வரலாறு, அரசியல் மாற்றங்கள், தொழில் முன்னேற்றம், திரைப்பட வளர்ச்சி போன்ற நவீன கால தென்னிந்திய வரலாற்றுடன் இந்நூல் இறுதி பெறுகிறது வரலாற்று ஆய்வாளர்களும் ஆர்வலர்களும் பயன்பெறும் வகையில் இந்நூலில் தென்னிந்திய அரசர்களின் கால நிரல் பட்டியல்கள், சொல்லடைவு, இயல் வாரியாக சான்றாதாரங்கள், நூல் பட்டியல் போன்றவை இடம் பெற்றுள்ளதுடன் தெளிவான தக்க ஒளிப்படங்கள், நிலப்படங்கள், வரைபடங்கள் ஆகியவையும் இடம் பெற்றுள்ளன இரண்டாயிரம் ஆண்டுகால தென்னிந்திய வரலாற்றை அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் அண்மைக்கால, தரவுகளின் வழி பெறப்பட்ட கருத்துகளைக்கொண்டு வெளியிட்டுள்ளது பாராட்டுக்குரியது.*

**சு. இராசவேலு, தஞ்சாவூர்**

# தமிழகத் தொல்லியல் கழக 24ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் – செயலர் அறிக்கை

*தமிழ்ப் பல்கலைக்கழக கடல்சார் வரலாறு மற்றும் கடல்சார் தொல்லியல்துறையின் சார்பில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் 24ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் தமிழ்ப் பல்கலைக்கழக பேரவைக்கூடத்தில் சிறப்பாக நடத்தப்பட்டது. இந்தியா, இலங்கை, பிரான்சு, இங்கிலாந்து, ஹாலந்து, அமெரிக்கா என்று பரவலாக 600 வாழ்நாள் உறுப்பினர்களைக்கொண்ட இக்கழகம், தமிழகம் சார்ந்த கல்வெட்டுகள், சிற்பங்கள், கோயில்கள், காசுகள், சுவடிகள், தொல்லியல் என்று வரலாற்றுக்கு அடிப்படையான ஆதாரங்களை ஆண்டுதோறும் 'ஆவணம்' இதழில் பதிவு செய்து வெளியிட்டு வருகிறது. அவ்வகையில் 25ஆவது ஆவணம் இதழும் இவ்விழாவில் வெளியிடப்பட்டது தமிழக வீட்டுவசதி மற்றும் நகர்ப்புற வளர்ச்சித்துறை அமைச்சர் திரு ஆர்.வைத்தியலிங்கம் விழாவிற்குத் தலைமையேற்றார். தமிழ்ப் பல்கலைக்கழக மாண்புமிகு துணைவேந்தர் பேரா மதிருமலை தொடக்கவுரையாற்றினார் தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர் டாக்டர் என்சுப்பையன் உள்ளிட்ட அரசுதுறை உறுப்பினர்கள் வாழ்த்துரை வழங்கினர் தமிழகத் தொல்லியல்கழக நிறுவனர் பேராசிரியர் எசுப்பராயலு கழகத்தின் நோக்கம் பற்றி எடுத்துரைத்தார்.*

*கருத்தரங்கத்திற்கு முன்னதாக சூலை 16 முதல் 18 முடிய மூன்று நாட்களுக்கு தஞ்சாவூர் பகுதியிலுள்ள அரசு கல்லூரிகளில் பயிலும் முதுகலை வரலாறு, தமிழ் பயிலும் 85 மாணவர்களுக்குத் தொல்லியல், கல்வெட்டியல் அறிமுக வகுப்புகள் நடத்தப்பெற்றன. இப்பயிலரங்கை முனைவர். சு.இராசகோபால் அவர்கள் ஒருங்கிணைத்தார் இப்பயிலரங்கை கருத்தரங்க உள்ளூர் செயலர் முனைவர் நஅதியமான் ஏற்பாடு செய்திருந்தார். கருத்தரங்கத் தொடக்கவிழாவினைத்தொடர்ந்து பேராசிரியர் கோ விஜய வேணுகோபால் அவர்கள் பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவியுள்ள தி.நா சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்தினார் கோயிலூர் ஆதின அறக்கட்டளைச் சொற்பொழிவை விழுப்புரம் தொல்லியல் அறிஞர் வீரராகவன் அவர்கள் நிகழ்த்தினார்*

# தஞ்சாவூரில் 24ஆம் ஆண்டுக் கருத்தரங்கில் அளிக்கப்பெற்ற கட்டுரைகள்

## கருத்தரங்க அமர்வுகள்

### முதல் அமர்வு

*பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவியுள்ள தி.நா. சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு*

**தலைமை : பேரா. எ.சுப்பராயலு**

| | |
|---|---|
| பொழிவாளர் | பேராசிரியர் கோ. விசயவேணுகோபால் |
| தலைப்பு | கல்வெட்டுப் பதிப்பும் வரலாற்று மீட்டுருவாக்கமும் |

### இரண்டாம் அமர்வு

**தலைமை : பேரா. கா. ராஜன்**

| | |
|---|---|
| ஜெசிரா | Megaliths of Periyar Valley |
| யாழ். சந்திரா | சாக்குடிக் கல்வெட்டுகள் |
| கண்ணன் | சாலையூர் தொல்லியல் தடயங்கள் |
| எஸ் கிருஷ்ணமூர்த்தி | தண்டியலங்கார உரை |
| சீ. ஸ்ரீதர், த. ரமேஷ் | விழுப்புரம் மாவட்டத்தில் சில புதியக் கல்வெட்டுகள் |
| வீ. செல்வகுமார் | வல்லம் அகழாய்வுகள் |
| க வெங்கடேசன், மா சந்திரமூர்த்தி | A New Copperplate Charter of Ayiravar Nagarathar from Thiruvannamalai |
| ஜெ. சௌந்திரராஜன் | Balamuri Exploration |

### மூன்றாம் அமர்வு

**தலைமை : முனைவர் பி. வெங்கடேசன்**

| | |
|---|---|
| க. கருப்பையா | மைசூர் மாடக்குளம் கல்வெட்டு |
| தி. சுப்பிரமணியன் | குடியும் குடி அமைப்பும் |
| க பன்னீர்செல்வம் | தமிழ்க் கல்வெட்டுகள் கூறும் சமூகக் கட்டமைப்பில் நலிந்தவர்கள் - வரலாறு |
| ம. காந்தி | Museums Abroad |

## நான்காம் அமர்வு

**தலைமை : முனைவர் டி. தயாளன்**

**கோயிலூர் ஆதீன அறக்கட்டளைச் சொற்பொழிவு**

| | |
|---|---|
| பொழிவாளர் | திரு. சி வீரராகவன் |
| தலைப்பு | நடுநாட்டுப் பகுதியில் கிராம தெய்வச் சிற்பங்கள் |

## ஐந்தாம் அமர்வு

**தலைமை : முனைவர் க. கருப்பையா**

| | |
|---|---|
| பி. ஆத்மநாதன் | கிண்ணிமங்கலம் புதியக்கல்வெட்டு |
| டி. முத்துபாண்டி | உசிலம்பட்டி திருமலைநாயக்கர் புதியக் கல்வெட்டு |
| ஆர். உதயகுமார் | அவனியாபுரம் புதிய கல்வெட்டு |

## ஆறாம் அமர்வு

**தலைமை : வல்லிபுரம் மகேஸ்வரன்**

| | |
|---|---|
| செந்தீ நடராஜன் | மிளகு பேட்டை கல்வெட்டும் ஜமாத் கல்வெட்டும் |
| ச. இரவி | திருப்பூர் கோவை மாவட்டத்தில் புதிய கண்டுபிடிப்புகள் |

## ஏழாம் அமர்வு

**தலைமை : முனைவர் க. பன்னீர்செல்வம்**

| | |
|---|---|
| கு. சதாசிவன் | Panitham in the wider context |
| நடேசன் | தமிழக சீன இரு வழி ஆதிக்கம் |
| சுதாகர் | இடைக்கால இரும்பு உலை |
| எம் எஸ் இராம்ஜி | வெள்ளாறு கொள்ளிட ஆற்றுப் பள்ளத் தாக்குப் பகுதி தமிழகத்தின் பிற பகுதி களோடு கொண்டுள்ள தொடர்பு |

கருத்தரங்க நிகழ்விற்கு வந்த பேராளர்கள் தஞ்சாவூர் பெரிய கோயிலின் கட்டடக்கலைச் சிறப்பைக் காண்பதற்கு பேராசிரியர் சு இராசவேலு ஏற்பாடு செய்திருந்தார். இரண்டாம் நாள் மாலை நிறைவு விழா இனிதே நடைபெற்று கருத்தரங்கம் நிறைவு பெற்றது.

# அஞ்சலி

## மா.செந்தில் செல்வக்குமரன்



தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினரும் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் மதுரை மற்றும் திருநெல்வேலி மாவட்டங்களில் நீண்ட காலம் பணியாற்றி ஓய்வு பெற்ற முனைவர் மா. செந்தில் செல்வக்குமரன் அவர்கள் அண்மையில் இயற்கை எய்தினார். தமிழகத்தின் தென் பகுதியில் பல தொல்லியல் கள ஆய்வுகளைவும் அகழாய்வுகளையும் மேற்கொண்ட இவர் இப்பகுதியின் கல்வெட்டுகள் பலவற்றையும் பதிப்பித்துள்ளார். தமிழர்களின் பண்டைய அளவை முறைகள் என்ற தலைப்பில் மேற்கொண்ட இவரது முனைவர் பட்ட ஆய்வு அளவை முறைகள் பற்றி ஆய்வு செய்பவர்களுக்கு ஓர் அரிய ஆய்வேடாகும். இவ்வாய்வேடு இன்னும் வெளிவராத நிலையில் உள்ளது. திருநெல்வேலியில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் கருத்தரங்கைச் சிறப்பாக நடத்திய பெருமை இவருக்கு உண்டு. முனைவர் மா. செந்தில் செல்வக்குமரன் மறைவிற்குத் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

## பேரா. வித்தகன்

தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் (உறுப்பினர் எண். 391) பேராசிரியர் வித்தகன் அவர்கள் அண்மையில் சென்னையில் இயற்கை எய்தினார். தொண்டை நாடு ஆராய்ச்சி மற்றும் உயர்நிலை ஆய்வு மையம் என்ற அமைப்பைத் தொடர்ந்து நடத்தி வந்த இவர் பல்வேறு அமைப்புகளில் உறுப்பினராக இருந்தவர். தொடக்க காலத்தில் சென்னை ஐ.சி.எப்.பில் பணிபுரிந்து பின்னர் ஆசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற இவர் நிறுவிய தொண்டை நாடு ஆராய்ச்சி மையத்தின் சார்பாக பலஆய்வு இதழ்களை வெளியிட்டவர். பேராசிரியர் வித்தகன் மறைவிற்கு தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# கட்டுரையாளர்கள் முகவரி

**செல்வி இரா.அகிலா**
(உ.எண். 641)
அரசு கலைக்கல்லூரி,
அரியலூர் 621 713

**பேரா. ந. அதியமான்**
(உ.எண். 194)
பேராசிரியர்
கடல்சார் வரலாறு மற்றும்
கடல்சார் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் –613 010

**திரு. பா. அருண்ராஜ்**
(உ.எண். 675)
மேலராமன்சேத்தி சாலை தெரு,
சீதக்கமங்கலம் அஞ்சல்,
குடவாசல்வட்டம்,
திருவாரூர் மாவட்டம்– 612 604

**திரு. அ. அன்பு**
(உ.எண். 652)
அரசு கலைக் கல்லூரி,
அரியலூர் – 621 713

**திரு.பா.ஆத்மநாதன்**
(உ.எண். 666)
6 ஏ,சுரேந்திரன் நகர்,
ஐந்தாவது தெரு, பொன்மேனி,
மதுரை மாவட்டம்

**செல்வி அ. ஆரவள்ளி**
(உ.எண். 707)
பிள்ளையார் கோயில் தெரு,
கீழ காட்டூர் அஞ்சல்,
திருவிடைமருதூர் வட்டம்,
தஞ்சாவூர் மாவட்டம்

**திரு. மு. ஆறுமுகம்**
(உ.எண். 548)
55, மேலரத வீதி,
வள்ளியூர், ராதாபுரம் வட்டம்,
திருநெல்வேலி மாவட்டம்

**திரு. இரா.ஆனந்தகுமார்**
(உ.எண். 563)
கோதண்டராமபுரம்
தொண்டமா நத்தம் அஞ்சல்
கடலூர் மாவட்டம் 607 301

**திரு. சு. இரவிக்குமார்**
(உ.எண். 612)
11,தட்டான் தோட்டம் தெற்கு
இரண்டாம் தெற்கு வீதி
பல்லடம் சாலை,
திருப்பூர் – 614 014

**முனைவர் பி. இரவிச்சந்திரன்**
(உ.எண். 376)
உதவிப்பேராசிரியர் மற்றும் தலைவர்
வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் 621 713

**முனைவர் சு. இராசகோபால்**
(உ.எண். 8)
இராஜாஜி இல்லம்,
7.முதல் தெரு,
வெங்கடேஸ்வரா நகர்,
அடையாறு,
சென்னை – 600 020

**பேரா. சு. இராசவேலு**
(உ.எண். 12)
பேராசிரியர்,
கடல்சார் வரலாறு மற்றும்
கடல்சார் தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613010

**பேரா. செ. இராசு**
(உ.எண். 3)
புலவர் பூங்குடியில்,
58/2 திரு.வி.க. நகர் சாலை,
பாலகாட்டுத் தோட்டம்,
ஈரோடு – 638 011

**திரு. ஆ. இராஜா**
(உ.எண். 480)
நெப்பியபட்டி
வடவாளம் அஞ்சல்
புதுக்கோட்டை மாவட்டம் – 622 004

**செல்வி நா. இராஜலெட்சுமி**
(உ.எண். 623)
202, மேலத்தெரு,
மட்டயாந் திடல்,
பாபநாசம் வட்டம்,
தஞ்சாவூர்மாவட்டம் –614 302

**திரு. கரு. இராஜேந்திரன்**
(உ.எண். 16)
மேலப்பனையூர் அஞ்சல்,
விராச்சிலை (வழி),
புதுகோட்டை – 622 420

**திரு. ஆர். உதயகுமார்**
(உ.எண். 671)
17 அருஞ்சுனைத் தெரு
அவணியாபுரம்
மதுரை 625012

**செல்வி கு. கண்ணகி**
(உ.எண். 642)
வரலாற்றுத்துறை,
அரசு கலைக்கல்லூரி,
அரியலூர் 621 713

**முனைவர் சோ. கண்ணதாசன்**
(உ.எண். 691)
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
மன்னர் சரபோஜி கல்லூரி,
தஞ்சாவூர் – 613 010

**திரு. இல.கணபதி முருகன்**
(உ.எண். 535)
92,திருவேங்கடம் சாலை,
சங்கரன்கோயில் – 627 756

**முனைவர் பொ.கந்தசாமி**
(உ.எண். 524)
விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை,
இராஜபாளையம் இராஜாக்கள்
கல்லூரி,
இராஜபாளையம்

**செல்வி ஜெ.கலைச்செல்வி**
(உ.எண். 615)
கருவாக்குறிச்சி காலனி,
முக்குளம்,
சாந்தனூர் அஞ்சல்,
மன்னார்குடி வட்டம்
திருவாரூர் மாவட்டம்

**திரு. கனகராஜ். மு**
(உ.எண். 708)
வேளாளர் தெரு
சினிமா தேட்டர் அருகில்
வடுகப்பட்டி – 625 603

**முனைவர் மா. காந்தி**
(உ.எண். 139)
875, பேஸ் – 2
7 வது குறுக்கு தெரு
சத்துவாச்சாரி
வேலூர் – 632 009

**செல்வி பி. காமாட்சி**
(உ.எண். 631)
எண் 4/403 எம்.ஜி.ஆர் தெரு
பி.டி.எம் நகர்
பாடியநல்லூர், செங்குன்றம்
சென்னை – 600 052

**திருமதி மு. காயத்திரி தேவி**
(உ.எண். 436)
39, பெரிய தெரு
திருக்கோகர்ணம் அஞ்சல்
புதுக்கோட்டை –622 002

**திருமதி சி.ஆர். காயத்ரி**
(உ. எண். 362)
பிளாட் எண்.4/45,
முதல் தெரு
லெட்சுமிபுரம் விரிவு
முடிசூர் ரோடு
சென்னை – 600 045

**திரு. ஆர். கார்த்திகேயன்**
(உ.எண். 665)
114, செட்டி மண்டபம்
கண்ணந்தங்குடி அஞ்சல்
ஒரத்தநாடு வட்டம்
தஞ்சாவூர் மாவட்டம்

**முனைவர் கி. குமார்**
(உ.எண். 94)
இ.157,பொதுப்பணித்துறை
குடியிருப்பு, தாடண்டர் நகர்,
சைதாப்பேட்டை
சென்னை

**திரு. கோபாலகிஷ்ணன். மா**
(உ.எண். 165)
மே/பா. கௌரி நடராஜன்
1.பி.ஈடன் அபார்ட்மெண்ட்ஸ்
முதல் குறுக்குத் தெரு
கார்டன் ரோடு, கீழ்ப்பாக்கம்
சென்னை –600 010

**திரு. செ. கௌரிசங்கர்**
(உ.எண். 420)
எண் 62, கூட்டுறவு காலனி
3 வது தெரு
தஞ்சாவூர் – 613 007

**செல்வி கோ. சசிகலா**
(உ.எண். 497)
258, பாரதியார் மெயின்
ரோடு கடைசி
ஐயப்பன் கோயில் அருகில்
ஜெய்ஹிந்த்புரம்,
மதுரை – 625 011

**செல்வி பி. சத்யா**
(உ.எண். 630)
எண் .37, இ.ஹெச் ரோடு,
வியாசர்பாடி,
சென்னை – 600 039

**திரு. இரா. சந்தனம்**
(உ.எண். 618)
3/82ஏ, இரண்டாம் தெரு
தனிச்சியம் அஞ்சல்
தா.வாடிப்பட்டி வட்டம்
மதுரை மாவட்டம் – 625 221

**முனைவர் அ. சந்திரபோஸ்**
(உ.எண். 114)
உதவிப் பேராசிரியர்
வரலாற்றுத் துறை
மாட்சிமை தங்கிய மாமன்னர் கல்லூரி
புதுக்கோட்டை – 622 001

**திரு. சொ.சந்திரவாணன்**
(உ.எண். 577)
106, செல்லப்பட்டி தெற்குத்தெரு
இராஜபாளையம் – 626 117

**முனைவர் சொ. சாந்தலிங்கம்**
(உ.எண். 10)
32,பிரித்தம் தெரு
துரைசாமி நகர்
மதுரை – 625 010

**திரு. சுகவன முருகன்**
(உ.எண். 250)
2/205, அண்ணா நகர்
காவேரிப்பட்டனம்
கிருஷ்ணகிரி மாவட்டம் – 635 112

**திரு. து. சுந்தரம்**
(உ.எண். 556)
குறிஞ்சி, 21,கிரீன்வியூ
டெலிகாம் காலனி
விலாங்குறிச்சி சாலை
பீளமேடு,கோயமுத்தூர் – 641 004

**திரு. இரா. சுரேஷ்**
(உ.எண். 564)
கீழ்குடி கிழக்கு
சலிப்பேரி (அஞ்சல்)
நன்னிலம் (வட்டம்)
திருவாரூர் (மாவட்டம்) – 610 105

**திரு. க. சுரேஷ்**
(உ.எண். 596)
எண் 3/371, நியூ காலனி
சிறுநெசலூர்
வேப்பூர்
விருத்தாசலம் வட்டம்
கடலூர் மாவட்டம் – 606 304

**முனைவர் செ. செந்தாமரை**
(உ.எண். 582)
உதவிப் பேராசிரியர்
வரலாற்றுத் துறை
அருள்மிகு மீனாட்சி அரசினர்
மகளிர் கலைக்கல்லூரி
மதுரை – 2

**திரு. இரா. செந்தில்**
(உ.எண். 493)
வடக்குத் தெரு,கன்னியாக்குடி
திருப்பங்கூர் அஞ்சல்
சீர்காழி வட்டம் – 609 112

**திரு. செந்தீ நடராஜன்**
(உ.எண். 300)
122, கல்படித்தெரு
நாகராஜாக் கோவில் அருகில்
நாகர் கோவில் – 629 001

**முனைவர் வீ. செல்வகுமார்**
(உ.எண். 169)
உதசிப்பேராசிரியர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் –613010

**திரு. செல்வதரன்**
(உ.எண். 508)
பகவத்பவன்,
புலியூர் குறிச்சி
தக்கலை,
நாகர்கோவில் – 629 001

**திரு. தெய்.சேஷகிரி**
(உ.எண். 227)
12, நார்ட்டன் முதல் தெரு
மந்தைவெளிப்பாக்கம்
சென்னை – 600 028

**திரு. த.த. தவசிமுத்து**
(உ. எண்.247)
36, பூவராசு மெயின் ரோடு
ஆறுமுகனேரி
தூத்துக்குடி – 628202

**திரு. என்.தனசேகரன்**
(உ.எண். 484)
எண் 1, மேட்டுத் தெரு,
கள்ளபிரான்புரம்
மதுராந்தகம் வட்டம்,
காஞ்சிபுரம் மாவட்டம் –603 308

**திரு. தில்லை கோவிந்தராஜன்**
(உ.எண். 361)
சக்தி இல்லம்
2218, மானோஜியப்பாதெரு
தஞ்சாவூர் 613009

**முனைவர் இல.தியாகராஜன்**
(உ.எண். 50)
2/363, மோரீஸ் இல்லம்
அண்ணாநகர் ரோடு
இராஜாஜி நகர்
அரியலூர் – 621 713

**முனைவர் கோ. திருமூர்த்தி**
(உ.எண். 93)
25, ரேகா நகர்
மாதவரம், எம்,எம்.சி அஞ்சல்
சென்னை – 600 051

**முனைவர் ஆ. துளசேந்திரன்**
(உ.எண். 337)
உதவிப் பேராசிரியர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 010

**திரு. எஸ். நடராஜன்**
(உ. எண். 688)
முனைவர் பட்ட ஆய்வாளர்
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் 621 713

**முனைவர் சீ. நீலாவதி**
(உ.எண். 276)
எண் 3, சார்லஸ் நகர் விரிவாக்கம்
ஆலங்ககுளம் கரை
புதுக்கோட்டை – 622 001

**திரு. வீ. பரந்தாமன்**
(உ.எண். 594)
வடக்கு இடையப்பட்டி
புத்தாநத்தம்
மணப்பாறை வட்டம்
திருச்சிராப்பள்ளி மாவட்டம் – 621 310

**முனைவர் மா. பவானி**
(உ.எண். 256)
உதவிப்பேராசிரியர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்– 613 010

**திரு. அ.பழனியப்பன்**
(உ.எண். 255)
88, பழனியாண்டவர் கோயில் தெரு
ஜம்பை அஞ்சல்
பவானி வட்டம்
ஈரோடு மாவட்டம் – 638 312

**திரு. வெ. பாண்டுரங்கன்**
(உ.எண். 406)
கீழக்கல்பூண்டி அஞ்சல்
தொழுதூர் வழி
கடலூர் மாவட்டம் – 606 303

**திரு. சா. பாலமுருகன். சா**
(உ.எண். 709)
துணை வட்டாச்சியர்
474/6, பொன்னுசாமி நகர் விரிவு
பஞ்சாயத்து அலுவலகம் சாலை
வேங்கிகால், திருவண்ணாமலை

**திரு. பா. பாலமுருகன்**
(உ.எண். 543)
கீழாயூர் காலனி
கீழாயூர் அஞ்சல்
இளையாங்குடி வட்டம்
சிவகங்கை மாவட்டம் – 630 720

**முனைவர் ர. பூங்குன்றன்**
(உ.எண். 25)
21/4, காந்தி தெரு,
செங்குட்டை
காட்பாடி – 632 007

**முனைவர் அ.க. பெருமாள்**
(உ.எண். 542)
நாட்டுப்புறவியல் ஆய்வாளர்
451–53, பி – 2, கவிமணி நகர்
இந்து கல்லூரி தென்புறம்
நாகர்கோயில் 629 002

**திரு. கோ. மதிவாணன்**
(உ.எண். 525)
எஸ்.கே பாலையம்
மாளிகைமேடு
பண்ருட்டி வட்டம்
கடலூர் மாவட்டம் – 60 71 12

**திரு. த. மகேந்திரன்**
(உ.எண். 658)
2, கன்னியம்மன் கோயில் தெரு
டி1, ஆர்.ஆர்.சி. அபார்ட்மெண்ட்ஸ்
நெசப்பாக்கம்,
கே.கே.நகர் மேற்கு
சென்னை – 600 078

**திரு. ஜி. மணிகண்டன்**
(உ.எண். 712)
2/6, கீழக்கரந்தை
எட்டையபுரம் வட்டம்
தூத்துக்குடி மாவட்டம் 628 904

**முனைவர் சி. மாணிக்கராஜ்**
(உ.எண். 569)
உதவிப் பேராசிரியர்
வரலாற்றுத்துறை
சி.பி.ஏ. கல்லூரி
போடிநாயக்கனூர்
தேனி மாவட்டம்

**முனைவர் ஆ. முத்துக்குட்டி**
(உ.எண். 591)
உதவிப் பேராசிரியர்
வரலாற்றுத் துறை
தொலை தூர கல்வி இயக்கம்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் – 608 002

**திரு. ப. முருகன்**
(உ.எண். 725)
1/787 அவ்வைத் தெரு
முகப்பேர் கிழக்கு
சென்னை 37

**முனைவர் வி.பி. யத்தீஸ்குமார்**
(உ.எண். 374)
உதவித்தொல்லியலார்
இந்தியத்தொல்லியல் துறை
சென்னை வட்டம்
புனித ஜார்ஜ் கோட்டை, சென்னை
600009

**முனைவர். சு. யாழ் சந்திரா**
(உ. எண். 557)
இணைப்பேராசிரியர்
140ஏ, வடக்காவணி மூலவீதி
மதுரை 625 001

**முனைவர் ஜெ. ராஜ முகமது**
(உ.எண். 116)
1/107, டி. ஜீவா நகர்
1 ஆம் வீதி
புதுக்கோட்டை – 622 001

**திரு. பெ. லெனின்**
(உ.எண். 294)
14,பெரியண்ணன் தெரு,
பீரங்கிமேடு, செஞ்சி –604 202

**செல்வி. அ. வசுமதி**
(உ.எண். 618)
வரலாற்றுத் துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் – 621 713

**பேரா.கோ.விசயவேணுகோபால்**
(உ.எண். 48)
15 , நான்காவது குறுக்கு தெரு
ஜெயா நகர்
ரெட்டியார்பாளையம்
பாண்டிச்சேரி – 605 010

**செல்வி. ரெ. விமலா**
(உ.எண். 713 )
புதுக்கோட்டை மகளிர் கல்லூரி
புதுக்கோட்டை

**திரு. விஜய்**
(உ.எண். 710)
எண் – 93
சாஸ்திரி தெரு
அனுப்பர் பாலையம்
திருப்பூர் – 641 652

**திரு. சி. வீரராகவன்**
(உ.எண். 447)
66/4, முத்துவேல் மணப்பிரிவு
கே.கே.சாலை
விழுப்புரம் – 605 602

**திரு. ப. வெங்கடேசன்**
(உ.எண். 109)
3/178, கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜாபேட்டை – 632 513

**செல்வி சு. ரேவதி**
(உ.எண். 715)
புதுக்கோட்டை மகளிர் கல்லூரி
புதுக்கோட்டை

**செல்வி. மு. லெட்சுமணப்பிரியா**
(உ.எண். 714)
புதுக்கோட்டை மகளிர் கல்லூரி
புதுக்கோட்டை

**முனைவர் பா.ஜெயக்குமார்**
(உ. எண். 5)
உதப் பேராசிரியர்
கல்வெட்டியல் மற்றம்
தொல்லியல் துறை
தமிழ்ப பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 010

**செல்வி அ. ஜெயபாரதி**
(உ.எண். 716)
முனைவர் பட்ட ஆய்வளர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 10

**திரு. பா. ஜோதீஸ்வரன்**
(உ.எண். 660)
1/187, முதல் பிளாக்
முகப்பேர் கிழக்கு
சென்னை – 600 037

**திரு. சீ. ஸ்ரீதர்**
(உ.எண். 444)
தச்சர் தெரு, ஓரத்தூர் அஞ்சல்
விழுப்புரம் மாவட்டம்

**திரு. கி. ஸ்ரீதரன்**
(உ.எண். 13)
324, முதல் தெரு
நடேச நகர், விருகபாக்கம்
சென்னை – 600 092

**Shri. Amarnath Ramakrishna**
**(L.M.No. 724 )**
Superintending Archaeologist
Excavation Branch
Archaeological Survey of India
Bangalore

**Shri. M. Rajesh**
**(L.M.No. 339)**
Assistant Archaeologist
Excavation branch
Archaeological Survey of India
Bangalore

**Shri. Uthaya Velupillai**
**(L.M.No. 405)**
129, Ruede Montreuil
75011, Paris
France

**Shri. Vija Ragavan**
**(L.M.No. 498)**
Excavation branch
Archaeological Survey of India
Asst.Archaeologist
Bangalur - 560 010

# நன்றி

*ஆவணம் 26 தொகுதியில் வெளிவந்துள்ள கீழ்கண்ட கல்வெட்டுகள், கட்டுரைகள் ஆகியவற்றை எழுதுவதற்கு உதவி புரிந்தவர்களுக்கு நன்றி.*

1. கோ. விஜயவேணுகோபால் – 6. பேரண்டூர்க் கல்வெட்டு, 10. ஆனூர் பெருமாள் கோயில் கல்வெட்டுகள், 11. தலைஞாயிறு குற்றம் பொறுத்தநாதர் கோயில் கல்வெட்டுகள், 16. முத்தியால் பேட்டை தென்கலை ஸ்ரீநிவாசப் பெருமாள் கோயில் கல்வெட்டுகள்,26.திருமங்கலம் பரசுராமீசுரமுடைய மகாதேவர் கல்வெட்டுகள் –
   திருவாளர்கள் ந. பாபு (எ) இராமசாமி, கோ. இரவீந்திரன், இரா. சத்திய நாராயணன்.

2. அ.அன்பு,பெ.இரவிச்சந்திரன், இல.தியாகராஜன், 20. பிள்ளைப் பெருமாள் நல்லூர் அபிமுக்தீஸ்வரர் கோயில் கல்வெட்டு –
   திரு. எஸ்.நடராஜன்.

3. சு. இரவிக்குமார், கொங்கு நாட்டுப் பகுதியல் தொல்லியல் எச்சங்கள் –
   திரு.வேலுச்சாமி, திரு. துரான்சு

4. வீ. செல்வகுமார், கோ. மதிவாணன், இரா. சுரேஷ், 76. திருத்தெங்கூரில் இரும்புக்கால வரலாற்றுக் காலத் தொல்லியல்
   திரு. மு. கருணாகரன்

5. வீ. செல்வகுமார், கோ. மதிவாணன், இரா. சுரேஷ், இரா. கார்த்திகேயன், 84 : 15 மகாவீரர் சிற்பம் –
   திரு. இரா. இராஜேஷ்குமார்

6. க. சுரேஷ், 84:27 கொற்கை இடைக்கால வாழ்விடப் பகுதி –
   செல்வி கு. மூகாம்பிகை

7. தெய். சேஷகிரி, 58. கோணாபுரம் கல்வெட்டு –
   திரு. ஆர்.ஜெகதீசன், முனைவர் சு. இராசகோபால்

8. உதயா வேலுப்பிள்ளை, 29. ஆச்சாள்புரம் கல்வெட்டு –
   தருமை ஆதீனம், திரு. கோ. விஜயவேணுகோபால், திரு. ஈ. பிரான்சிஸ்

9. வீ. பரந்தாமன், 49. மருங்காபுரி நாயக்கர் கால செப்புப் பட்டயம் –
   திரு. இராஜேஷ்.

10. கீ. ஸ்ரீதரன், 84:23 பூமியில் புதையுண்ட திருக்கோயில்கள் –
    திரு. எஸ். தினேஷ், முனைவர் ப. வெங்கடேசன், திரு. சு. இராஜகோபால்.

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

## RECEIPTS AND PAYMENT ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2015

| RECEIPTS | | PAYMENTS | |
|---|---|---|---|
| **To Opening Balance** | | | |
| Cash in hand | 28,194.00 | Courier & Postage | 5,100.00 |
| Cash at Bank | 1,367.00 | Stationery | 5,233.00 |
| Indian Bank | 1,367.00 | Xerox | 200.00 |
| State bank of India | 2,617.00 | Printing charges | 119,050.00 |
| Book Sales | 11,090.00 | Auditor Fees | 1,500.00 |
| Donation | 44,000.00 | Student Prize | 1,500.00 |
| Membership Fees | 91,000.00 | Salary | 10,000.00 |
| Fixed Deposit | 543,000.00 | Honararium | 10,000.00 |
| Annual Membership Fees | 3,200.00 | Sundries | 8,030.00 |
| Interest | 42,079.00 | Freight Charges | 1,520.00 |
| | | Travelling Expenses | 3,037.00 |
| | | Fixed Deposit | 515,000.00 |
| | | Closing Balance Indian Bank | 5,706.00 |
| | | BOI | 3,000.00 |
| | | State Bank of India | 1,951.00 |
| | | Cash in hand | 75,720.00 |
| Total | 766,547.00 | Total | 766,547.00 |

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

## INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2015

| | | | |
|---|---|---|---|
| To Courier & Postage | 5,100.00 | By Book Sales | 11,090.00 |
| To Statıonery | 5,233.00 | By Members Fess | 91,000.00 |
| To Xerox | 200.00 | By Donations | 44,000.00 |
| To Printing Charges | 119,050.00 | By Interest | 42,079.00 |
| To Sarlary | 10,000 | By Annual Membership Fees | 3,200.00 |
| To Audit Fees | 1,500.00 | | |
| To Honararium | 10,000.00 | | |
| To Stundent Prize | 1,500.00 | | |
| To Freight Charges | 1,520.00 | | |
| To Travelling Expenses | 3,037.00 | | |
| To Sundries | 8,030.00 | | |
| To Excess of Income Over Expenditure | 26,199.00 | | |
| Total | 191,369.00 | Total | 191,369.00 |

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

### BALANCE SHEET AS ON 31.03.2015

| LIABILITES | | ASSEST | |
|---|---|---|---|
| Fund Account | 620,077.00 | Furniture Stand Cupboard | 18,700.00 |
| | | Fixed Deposits | 515,000.00 |
| | | Indian Bank | 5,706.00 |
| | | State Bank of India | 1,951.00 |
| | | BOI | 3,000.00 |
| | | Cash in hand | 75,077.00 |
| | 620,077.00 | | 620,077.00 |

### FUND ACCOUNT

| | | |
|---|---|---|
| 01.04.2014 | By Opening Balance | 593,878.00 |
| 31.03.2015 | To Income as per Expenditure | 26,199.00 |
| | | 620,077.00 |
| 01.04.2015 | By Opening Balance | 620,077.00 |

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

ஆவணம் இதழ்கள் 1 முதல் 18 வரை இருப்பு இல்லை

| | | |
|---|---|---|
| ஆவணம் 19 | - | ரூ. 150/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 20 - 26 | - | ரூ. 200/- (இதழ் ஒன்றுக்கு) |

இடைக்காலத் தமிழ்நாட்டில் நாடுகளும், ஊர்களும் (கி.பி.800 - 1300) ரூ.100/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெறவிழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ. 2000/-

நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ. 4000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.100/- செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால், கூடவே வங்கிக் கட்டணம் ரூ. 100/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழ் நேரில் பெற்றுக் கொள்ளலாம். அல்லது அஞ்சலில் பெற ரூ.100/- பணவிடை அனுப்பவும்.

முகவரி :

**செயலர்/பொருளாளர்**

**தமிழகத் தொல்லியல் கழகம்**

(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 010

Contact :

**Secretary / Treasurer, Tamil Nadu Archaeological Society**

C/o. Department of Eqigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 010

ISSN 0975-1831

